

# சித்தர் அறுவை மருத்துவம்

ஆக்கியோன் :

டாக்டர் க. சு. உத்தமராயன், H.P.I.M.

ஓய்வுபெற்ற சித்த மருத்துவ ஆராய்ச்சித் துறைத் தலைவர்,
கீழ்ப்பாக்கம் மருத்துவக் கல்லூரி, சென்னை-10

&

முதல்வர்,
அரசினர் இந்தியமுறை மருத்துவக் கல்லூரி
பாளையங்கோட்டை.

தமிழ்நாடு அரசாங்கத்திற்காக தமிழ்நாடு எழுதுபொருள் அச்சுத்தொழில்
நெறியாளரால் பதிப்பிக்கப்பெற்று பிரசுரிக்கப்பெற்றது
1968

[விலை ரூ. 9·20.

# முன்னுரை

பாளையங்கோட்டையிலுள்ள அரசினர் இந்தியமுறை மருத்துவக் கல்லூரியில் பயிற்சி பெற்று சென்னை, மதுரைப் பல்கலைக் கழகங்களின் பி.ஐ.எம். (B.I.M.) பட்டத் தேர்வு எழுதும் சித்த மருத்துவ மாணவ மாணவிகள் பயன்பெறும் பொருட்டு இந்நூல் வெளி வருகின்றது. சித்த மருத்துவப் பாட நூற்குழுவினரின் வேண்டுகோளுக்கிணங்க இன்னின்னார் இன்னின்ன நூல்கள் எழுதவேண்டுமென்று முடிவு செய்தபடி "சித்த அறுவை மருத்துவம்" என்ற இந்த நூல் எழுதுவதற்கு யான் ஒப்புக் கொண்டேன்.

ஏற்கெனவே 1954-ம் ஆண்டில் அச்சிடப்பெற்ற இந்நூல் எதிர்பாராத சில காரணங்களால் அப்போதே பாடப்புத்தகமாக வெளிவர இயலாமற் போய்விட்டது. எனினும் 1967-ம் ஆண்டில் தமிழக அரசினரால் நியமனம் செய்யப்பட்ட சித்த மருத்துவப் பாடநூற் குழுவினரின் ஒத்துழைப்பினால் மீண்டும் பாடப்புத்தகமாக வெளி வருகின்றது. இந்நூல் சித்த மருத்துவக் கல்லூரியில் பயிலும் மாணவர்களுக்குரிய பாட நூலாகவே வெளிவந்தாலும் கூட ஆங்காங்கேயுள்ள ஊர்களில் வாழ்ந்து சித்த மருத்துவப் பணியில் ஈடுபட்டு உழைக்கும் சித்த மருத்துவர்களுக்கும் பயன்படும் என்று நம்புகிறேன்

"வாளால் அறுத்துச் சுடினும் மருத்துவன் பால் மீளாத காதல் நோயாளன் போல்"—என்று வரும் நாலாயிரத்திவ்வியப் பிரபந்தப் பாடலிலிருந்து "அறுத்துச் சுடும் மருத்துவம்" அல்லது "அறுவை மருத்துவம்" என்பது தமிழகத்தில் தொன்றுதொட்டே இருந்து வந்திருக்கிறது என்பதை நாம் அறியலாம். ஆழ்வார்கள் நூல்களில் மட்டுமின்றி அதற்கு முன்பும் பின்பும் உள்ள வேறு பல இலக்கியங்களிலிருந்தும் தமிழ்நாட்டின் சித்த மருத்துவத்துறையின் அறுவை மருத்துவம் பற்றியுள்ள ஏராளமான சான்றுகளை நாம் நன்கு அறிகிறோம். காலப்போக்கில் சித்த மருத்துவத்தைவிட மேனாட்டு மருத்துவம் தலை சிறந்து விளங்க ஆரம்பித்ததால் பண்டைத் தமிழர்களின் இந்த மருத்துவ முறைகள் ஓரளவு பின் தங்கிவிட்டன. இந்த நிலையில் சித்த மருத்துவத்திற்குப் புத்துயிர் கொடுக்கும் வகையில் சென்னை, மதுரைப் பல்கலைக்கழகங்கள் சித்த மருத்துவத்திலும் பட்டப்படிப்பையும் தேர்வையும் ஏற்படுத்திப் பட்டங்கள் வழங்க ஆரம்பித்திருப்பதால் இந்த மருத்துவத்துறை இனிமேல் தழைத்து வளரும் என்பதில் ஐயமில்லை.

இந்த அறுவை மருத்துவத் துறையில் மேலும் ஆராய்ச் செய்யும் பொருட்டு ஊக்குவிப்பதற்காக இந்நூலைத் தொகுத்து எழுதுவதற்கு உதவிய நூல்களின் விரிவான பட்டியலொன்றும் இந்நூலில் இடம் பெற்றிருக்கின்றது. இப் புத்தகத்தின் இறுதியில், தமிழ் மருத்துவப்

பொழிலினின்று கண் மருத்துவத்தின் ஒரு சில பிணிகளை ஒப்புநோக்கி பாளையங்கோட்டை அரசினர் இந்தியமுறை மருத்துவக் கல்லூரி முதல்நிலை விரிவுரையாளர் டாக்டர் R. தியாகராசன் அவர்கள் எழுதியதைச் சேர்த்துள்ளேன். அன்னாருக்கு என் நன்றி உரித்தாகுக,

இந்நூலைச் சித்த மருத்துவப் பட்டப படிப்பிற்குப் பாடப்புத்தகமாக ஏற்றுக்கொண்ட சித்த மருத்துவம் பாடநூற்குழுவினருக்கும், புத்தக வடிவில் வெளிவரச் செய்த தமிழக அரசினருக்கும் தமிழக அரசின் பொதுநலத்துறைச் செயலாளர் திரு என். அனந்தபத்மநாபன, ஐ.ஏ.எஸ். அவர்களுக்கும் துணைச் செயலாளர் திரு. கே. சிதம்பரம், பி.எஸ்சி. அவர்களுக்கும், மருத்துவக் கல்வி இயக்குநர் டாக்டர் திரு. டி. ஜனார்த்தனம், எம்.பி.பி எஸ்., எம்.எஸ்ஸி. அவர்களுக்கும், புது மருத்துவக் கல்லூரிகளின் தனி அலுவலர் திரு டி. நாராயணசாமி எம்.பி.பி.எஸ்., எம்.எஸ்ஸி., அவர்களுக்கும், இந்நூலை வெகுவிரைவில் அச்சியற்றிய தமிழ்நாடு எழுதுபொருள் அச்சுத் தொழில் நெறியாளர் அவர்களுக்கும், அரசினர் அச்சகத்தார்க்கும், இந்நூலின் இலக்கிய இலக்கண வழுஉக்களைத் திருத்தித் தந்த வித்துவான் (நெல்லை) ஆ. கணபதி அவர்களுக்கும் என் நன்றி உரிமை பெறற்பாலதாம்.

க. ச. உத்தமராயன்.

# பொருளடக்கம்


| | பக்கம் |
|---|---|
| அடிதள்ளல் | 73 |
| அட்டை விடல் | 8 |
| அற்ப விரணம் | 59 |
| ஆண்குறி நோய் | 91 |
| இமைநோய் வகை | 180 |
| உச்சியிற்றோன்றும் 46 நோய்களின் விளக்கம் | 99 |
| உச்சிவளி | 101 |
| ஒற்றடம் | 34 |
| கடைக்கண்ணிற்றோன்றும் நோய்கள் | 189 |
| கட்டிகள் | 41 |
| கண்டமாலை | 72 |
| கண்ணோய் | 145 |
| கண்ணோய்ப் பொது மருத்துவம் | 207 |
| கபால கரப்பான் | 105 |
| கபாலக்கிருமி | 115 |
| கபாலகுட்டம் | 102 |
| கபாலப்பிளவை | 110 |
| கருவிழியிற்றோன்றும் 45 நோய்கட்கு விவரம் | 154 |
| கல்லடைப்பு நோய் | 89 |
| காரம் | 36 |
| கிரந்தி | 88 |
| குருதிவாங்கும் முறை | 7 |
| சத்திராயுதங்களின் வகை | 18 |
| சிலைப்புண் | 51 |
| சுட்டிகை | 27 |
| சூருறை | 5 |
| செவிநோய் | 124 |
| தலையிலும் கழுத்திலும் வரக்கூடிய நோய்கள் | 98 |
| தொக்கணத்தின் வகை | 23 |
| நகிற்கட்டி | 74 |
| நாக்கு நோய் | 141 |
| பரிகாரமுறை மூவகை | 4 |
| பல் நோய்கள் | 144 |
| பவுத்திரம் | 62 |
| பிணிகளை வகுக்கும் முறை | 3 |
| புகை | 32 |
| புண்கள் | 46 |

| | பக்கம் |
|---|---|
| பெண்குறி நோய் | 97 |
| பெருநோய் | 78 |
| பொட்டணம் | 36 |
| மக்களுறை | 5 |
| மண்டைக்கணப்பு | 116 |
| மண்டைச்சன்னி | 119 |
| மண்டைச்சூலை | 118 |
| மண்டைத்திமிர் | 114 |
| மண்டைவலி | 116 |
| மூக்குநோய் | 136 |
| மூலம் | 53 |
| மூளைநோய் | 120 |
| மேகக்கட்டிகள் | 66 |
| யானைக்கால் | 69 |
| வாய்நோய் | 140 |
| விண்ணவருறை | 5 |
| விதை நோய் | 75 |
| வீக்கம் | 40 |
| வெண்குட்டப் பிணி | 86 |
| வெள்ளைபூ நோய்கள் | 176 |
| வேது | 23 |


## இந்நூலைத் தொகுக்க அடிப்படையான நூல்கள்


அகத்தியர் இரண வைத்தியம்.

அகத்தியர் நயனவிதி.

சித்தவைத்தியத்திரட்டு.

சீவரட்சாமிர்தம்.

தமிழ் மருத்துவப்பொழில்.

தேரர்தரு.

தேரர் தைலவர்க்கச் சுருக்கம்.

தேரர் மகாகரிசல்.

தேரர் மருத்துப் பாரதம்.

தேரர் யமகம்.

தேரர் வெண்பா.

நாகமுனிநயனவிதி.

பதார்த்த குணசிந்தாமணி.

பரராச சேகரம்.

யூகிசிந்தாமணி.

# சித்தர் அறுவை மருத்துவம்

## துவக்க உரை.

மக்கள் முதல் முதல் தோன்றிய இடம் நிலப் பரப்பின் தென்பகுதி என்பது நில நூலாரால் ஒப்பமுடிந்த உண்மையாகும். மக்கள் தோன்றிய பிறகு அவர்களுக்கு வேண்டிய உணவை விளைவித்துக்கொள்ளும் வகையும், அதற்கான கருவிகளையும் அவர்கள் நாளடைவில் தெரிந்து ஒழுங்கு படுத்திக் கொண்டனர். பிறகு, அவர்கள் தொழில் காரணமாக உடலில் அப்போதைக்கப்போது ஏற்படும் நோய்களுக்கும் அடிபடுதல் முதலிய காயங்கட்கும் தீர்வு நாடினர். அஃதன்றி உடலின்புறத்தே தோன்றும் கட்டி, புண் புரை போன்றவைகட்கும் அகப்புறப் பரிகாரங்களையும் கையாண்டனர்.

பெரும்பாலும் அவர்கள் அக்காலத்தில் மருந்தின்றியே நோய்களை உணவு வகையால் மாற்றிவந்தனர். மருந்தை அருமையாகப் பயன் படுத்தினர். மூக்கில்லாதவர்களுக்குப் பொய் மூக்கு வைத்ததாகவும் நூற்கள் வாயிலாக நாம் அறியக்கிடக்கின்றது. ஆகவே, ஒரு மருத்துவத்திலிருந்து மற்றொரு மருத்துவம் உண்டாகியது என்று கூறுவது பகுத்தறிவுக்கு ஒவ்வாததெனப் போதரும். மொழி நாளடைவில் வளர்ச்சியடைவது போல நம் மருத்துவமும் மிகப் பெரிதும் பரவிவருகிறது. மருத்துவத்தில் கைதேர்ந்து அதன் உண்மை கண்டு சித்தி பெற்றோரே நம் நாட்டில் சித்தர் என்று விளங்கினர்.

மருத்துவத்தின் பல பாகுபாடுகளில் சிறந்து விளங்கினோர்க்கே, பிள்ளை மருத்துவர், இரண மருத்துவர், நஞ்சு மருத்துவர், கண் மருத்துவர் எனப் பெயர் வழங்கலாயிற்றென்றறிக.

பண்டைக்காலத்தில் சித்த மருத்துவ மென்றொன்று வழங்கவில்லை, ஆயுர்வேத மருத்துவந்தான் வழங்கிவந்ததென்று கூறுவார் கூறுக. சங்க காலத்திலிருந்தே தமிழ் மருத்துவம் வழங்கி வந்ததென்பதற்கு அடியிற்காட்டப்படும் சங்க இலக்கிய மேற்கோள்களே அன்னோர்க்குச் சான்று பகரும்.

மருந்தால் பிணி தீருமென்பதையும், சில பிணிகள் மருந்தால் தீரா வென்பதையும், இன்ன பிணிக்கு இன்ன மருந்து பயனளிக்குமென் பதையும் அறிந்திருந்தார்களென்பதை,

> " பசிப்பிணி மருத்துவ னில்லம் அணித்தோ
> சேய்த்தோ கூறுமின் எமக்கே "

(புறநானூறு-360.)

எனவும்

> " விறலிழை நெகிழ்ந்த வீவுஅரும் கடுநோய் "

(குறிஞ்சிப்பாட்டு.)

எனவும் வரும் அடிகளால் அறியலாகும்.

குளிர்காய வேண்டியவர் புகையைக் கருதாது தீயின் வெம்மையைக் கருதுவதுபோல மருந்துண்பவர், அதன் சுவையைக் கருதாது, மருந்தின் பயனையே கருதுவர்.

"நோய்க்குற்ற மாந்தர் மருந்தின் சுவை நோக்ககில்லார்
தீக்குற்ற காதலுடையார் புகைத் தீமையோரார்"

(குண்டலகேசி.)

என்பதனாலும்,

சங்கப் புலவர் குழுவின் மருத்துவன் தாமோதரனார் ஓர் உறுப்பினராக இருந்தார். அவர் திருவள்ளுவ மாலையில்,

"சிந்தினீர்க் கண்டஞ் சிறுசுக்குத் தேனளாய்"

என்று தொடங்கும் செய்யுளைப் பாடியுள்ளார். இதனால் பண்டைய அரசர் அவையில் மருத்துவர்களிருந்தார்கள் என்பதையும் அரசர்க்குரிய ஐம்பெருங்குழுவினருள் மருத்துவரும் ஒரு குழுவினராவர் என்பதையும் அறியற் பாலதாம்.

ஈதன்றியும், அக்காலத்தில் அறுவை மருத்துவத்தில் சிறப்புற்றிருந்தார்கள் என்பதனை,

"உடலிடைத் தோன்றிற்று ஒன்றை அறுத்ததன் உதிரம் ஊற்றிச்
சுடலுறச் சுட்டு வேறோர் மருந்தினால் துயரந்தீர்வர்"

என்னும் கம்பராமாயண அடிகளாலும்,

"வாளாலறுத்துச் சுடினும் மருத்துவன்பால்
மாளாத காதல் நோயாளன் போல்"

என்று நாலாயிரத் திவ்வியப் பிரபந்தத்தில் ஆழ்வார் அருளிச் செய் திருப்பனவற்றாலும், உடலில் பதிந்துள்ள ஆயுதத் துண்டுகளைக் காந்தத்தால் வெளிப்படுத்தலை,

"அயில்வேல்............ நீங்கலது இப்பொழுதகன்றது
............ காந்தமாம் மணியின்று வாங்க"

என்பவற்றாலும் அறியலாம். மேலும், (கம்ப-மீட்சி-118.)

உடலில் காயம் பட்டவர்களுக்கு நெய்க்கிழி வைத்தல், எண்ணெய் பத்தரில் கிடத்தல், ஒடிந்த இரும்புகளை அறுத்தெடுத்தல், புண்களுக்கு மருந்து வைத்தல், எலி மயிர்க் கம்பளத்தால் போர்த்தல் முதலியன கீழே கூறப்பட்ட அடிகளால் அறியலாம்.

"நெய்க்கிழி வைக்கப்பட்டார், நெய்ப்பத்தல் கிடத்தப்பட்டார்
புக்குழி எஃகம்நாடி இரும்பினால் போழப்பட்டார்"

"முதுமரப்பொந்துபோல முழுமெய்யும் புண்களுற்றார்க்கு
இது மருந்தென்ன நல்லார் இழுதுசேர் கவளம்வைத்து"

"..................நெய்க்கிழி பயிலச்சேர்த்தி
நுதிமயிர்த்துகில் குப்பாயம் புகுகென நூக்கினானே"

(சிந்தாமணி—காந்தருவதத்தை
இலம்பகம்-324.)

உடலின் உறுப்புகள் வன்மை குறைந்தவிடத்து அதை யீடுசெய்வதற்கு பிற உயிர்களின் அவ்வவ்வுறுப்பாலாய சத்துகளை மருந்தாக வழங்குதல் இக்கால மேனாட்டு மருத்துவ முறைகளில் காணலாம். இம்முறை நம் நாட்டிலிருந்ததென்பதைக் காட்டும் பழமொழி "ஊனுக்கு ஊன் இடுதல்" என்பதாகும். இக் கருத்துட் கொண்டே கண்ணப்ப நாயனார் ஊனுக்கு ஊன் எனும் உரைமுன் கண்டு அரன் கண்ணுக்குத் தன் கண்ணை அப்பினராகும்.

இதனை, திருவிளையாடற் புராண வலாசுரன் காதையே வலியுறுத்து கின்றது. அதாவது அவன் பற்கள் முத்தாகவும், இரத்தம் மாணிக்க மாகவும் இவ்வாறே பிறவும் மாறின என்பதால் அவ்வப்பாகங்களில் நோய்வர அவற்றால் ஆகிய மருந்துகளை உபயோகிக்க அவ்வந்நோய் தீருமென்பதாம். இம் மருத்துவ முறைகளைச் சித்த மருத்துவத்தில் பரக்கக் காணலாம்.

திருமுக்கூடல் கோயில் கல்வெட்டிலிருந்து அக்காலத்தில் அக் கோயிலி னிடத்தில் மருத்துவசாலை இருந்ததாகவும் அச்சாலையில் மருந்து செய்யுமிடமும் (Pharmacy) ஓராண்டுக்கு வேண்டிய மருந்தும், அறுவை மருத்துவம் (Surgery) செய்ததாகவும் நோயாளிகளைக் கன்காணிக்கப் பணிமகளிர் (Nurses) இருந்ததாகவும் அறியலாம்.

இவற்றால் சித்த மருத்துவம் பல பகுதிகளிலும் சிறப்புற்றிருந்த தென்பது தெளிவாய்க் காணலாம். இதைப் பிற மருத்துவத்தினின்றும் தோன்றிய தென்பவர் கூற்று வெறுவாய் மெல்லும் வீணர் கூற்றும்.

தென்மொழி மருத்துவ நூல் வழியாக நாம் அறியக் கிடைக்கும் மருத் துவப் பரிகார முறை மூவகைப்படும். அவை : (1) விண்ணவர் மருத் துவம், (2) மானிட மருத்துவம், (3) அசுர மருத்துவம் என்பன.

இவற்றுள் விண்ணவர் மருத்துவம், மானிட மருத்துவம் ஆகிய வற்றிற்குரிய உள் மருந்துகளாகிய தாது தாவரங்களினால் மாத்திரம் குணமடையாத சில நோய்களையே அசுர பரிகார வழியாய்ப் பரிகரிக்க வேண்டும்.

## பிணிகளை வகுக்கும் முறை

1. நோயுண்டாகும் காரணம்: "நோய்நாடி நோய்முதல் நாடி அது தணிக்கும் வாய்நாடி வாய்ப்பச் செயல் (குறள்)"

2. நோயில் காணும் குறிகுணங்கள்

3. நோயைப் பரிகரிக்கும் வகை—இம்மூவகையினுள் ஒரு பிரிவில் வகுக்கலாம்.

இவற்றுள் காரணத்தைக் கொண்டு வகுக்கப்படுவது 1. வளிநோய், 2. அழல்நோய், 3. ஐயநோய் என்பனவாம்.

நோயின் குறிகுணங்கள் அல்லது நோயினால் பற்றப்பட்ட (தாக்கப் பட்ட) உடற்கட்டுகளின் நிலையையொட்டி வகுத்தல், சுரம், செரியாமை அதிசாரம், காசம், சுவாசகாசம், குன்மம், ஈரல்நோய், மூலம் தோலை யொட்டிய நோய்கள் என்பன.

நோயின்பரிகாரவழிநோக்கி வகுத்தல்—

(1) பட்டினி இடுதற்கேற்ற பிணிகள், (2) வாந்தி செய்வித்தற்குரிய நோய்கள், (3) பேதி செய்வித்தற்குரிய நோய்கள், (4) ஆவி பிடித்தற்குரிய பிணிகள், (5) மருந்து நெய் முழுக்கால் தீரும் நோய்கள், (6) உடலைத் தொக்கணம் செய்வதால் தீரும் பிணிகள், (7) உடலை வெயிலில் காய வைத்துத் தீர்க்கக்கூடிய நோய்கள், (8) குருதி வாங்கிக், குணமடையச் செய்யும் பிணிகள், என்னும் இவைகளன்றியும், (9) பச்சிலைகளினால் குணப்படும் பிணிகள், (10) பச்சிலைகளினாலும் உபரசங்களினாலும் தீரும் பிணிகள், (11) தாதுப் பொருள்களினாலே சிறப்பாகத் தீரும் நோய்கள் என்னும் உள் மருந்துகளாகிய தாது, தாவர, சீவப் பொருள்களாலாகிய மருந்துகளால் மாத்திரமே தீராப் பிணிகளை நோக்கியே, மானிட மருத்துவம், விண்ணவர் மருத்துவம், அசுர மருத்துவம் எனப் பரிகாரத்தை மூவகையாகப் பிரித்தனர்போலும்.

**அசுர மருத்துவம்.**—உள் மருந்துகளினால் தீரா நோய்க்கூட்டங்களை அகற்றுவதற்கு ஆற்றலுடையது அசுர மருத்துவமேயாகும். அவை :—(1) கத்தி முதலிய அறுவைக் கருவிகளைக்கொண்டு செய்யும் பரிகாரம், (2) சுட்டிகை போன்ற நெருப்புப் பிரயோகத்தினால் நோயைப் போக்கும் ஆற்றல், (3) காரமருந்துகளினால் நோயைப் போக்கும் வல்லமை முதலியனவாயமையும்.

மேற்கூறியவாறு, அசுர மருத்துவம் மூன்று பெரும் பிரிவில் அடங்கும், இதன் விரிவுகளைத் தேரன் கரிசலிலும், தருவிலும் காணலாம். இவற்றைக் குறிப்பாக மருத்துவாங்கச் சுருக்கத்தில் கூறப்பட்டிருக்கின்றன. ஆகவே, எல்லாப் பிணிகளையும், தேவ, மானிடப் பரிகார வாயிலாகவே பரிகரிக்கவேண்டும் எனவும், அவ்வாறு தீராத பிணிகளை அறுவை, சுட்டிகை, காரப்பரிகாரம் ஆகியவற்றாலும் பரிகரிக்கலாம் எனக்கொள்ளக் கிடக்கின்றன.

இக்காலத்தில் நமக்குக் கிடைக்கும் நூல்களில் பெரும்பான்மை நோய்களையும், அவற்றின் குறிகுணங்களையும் அவற்றிற்குரிய அகப்புறப் பரிகாரங்களையுமே கூறுகின்றன. சில நூற்களில் ஓரோரிடத்தில் அவற்றிற்கேற்ற அறுவைப் பரிகாரங்களும் கூறப்பட்டுள்ளன. அந்நூற்களாவன : " அகத்தியர் இரண வைத்தியம் ", " நாகமுனி நயன வைத்தியம் " முதலியன.

**பரிகாரமுறை மூவகைப்படும்—அவற்றின் உட்பிரிவு.**

" இவ்வகை யியம்பும் இருமருத்துவமும்
மூவ்வகை யாமவை மொழியக் கேண்மோ
அவைவிண்ணவருறை அமர்மக் களுறை
பவசூ ருறைஎனப் பகர்வரவை முறையே
இனிநா றும்பூ விவைமுத லாவும்
கனிதழை வேர்காய் முதலிய யாவும்
அறுத்தல் காரம் அடைமுத லாவும்
நிறுத்தனர் அவற்றினை நிகழ்த்திப் பின்னவற்
றுறுமந் தணங்கள் உரைப்பா முறையே. "

### விண்ணவருறை

" பெறுமவற் றில்முதற் பேசுது மம்ம
இனிமுதல் மெழுகு இரதப் பதங்கம்
தனிவெண் பொடிசுணம் சத்து களங்கு
கட்டு ருக்குக் கற்பந் தீநீர்
குருதிப் பொடிக்குரு குளிகையு மாக
வருபனி ரண்டும் வகுத்தும் சாலத்
தருவிண் ணவருறை சாற்றின தாமால். "

### மக்களுறை

" மண்ணுல கத்து மக்க ளுறையே
திண்ணஞ் சுரசம் தீநீர் சாறு
குடிநீர் கற்கம் குழம்பு சூரணம்
அடையுக் களிவட கம்பிட் டிளகம்
வெண்ணெய் நெய்மணப் பாகு வேது
எண்ணெய் ரசாயனம் இசைபக் குவம்பற்
றொற்றடம் பூச்சுயர் மாத்திரை களங்கு
உற்றதே னூறல் உறுப்பிற் கட்டுதல்
பொட்டணம் தொக்கணம் பொடிதி மிர்ப்பு
நசியங் கலிக்கம் நாசிகா பரணம்
நசைமை முப்பா னுன்கென வகுத்தே
இசைத்த தாமென இனிதுணர் வாரால். "

### சூருறை

" சூருறை ஊதல் சுட்டிகை சலாகை
நீர்வர்த்தி சீலை நிகழ்களிம் புறிஞ்சல்
களிபசை முரிச்சல் காரம் கீறல்
அட்டை பொடிபீச் சறுவை கொம்பு
குருதி வாங்கல் கொள்பத் தொன்பதும்
உறுதி யென்றே யோதினர் மேன்மை
கருது சித்தர் கணக்க தாலோ. "

எனச் சூருறையில் பத்தொன்பது என்று கொண்ட போதிலும், ஒற்றடம், பொட்டணம், புகை, வேது என்பவற்றையும் அசுர மருத்துவத்தில் கூறப் படும். அறுவை, காரம், அக்கினி (சுடுதல்) எனும் மூன்றில் ஒன்றாகிய அக்கினி கருமங்களுள் ஒற்றடம், பொட்டணம், புகை, வேது என்பன அடங்குகின்றன வாகையினுல் தொக்கணத்தையும், கட்டுதலையும் இத னுள் அடக்கினும் வழுவாகாது.

இவ்வாறமையின், அசுர மருத்துவத்தின் வகையுள் அடங்கும் உட்பிரிவு கள் இருபத்தைந்தாகும். இவ் விருபத்தைந்தையும் கீழ்க் கண்டபடி வகுக்கலாம் :—

1. **அறுவைத் தொழிலின்கீழ்.**—(1) அறுவை, (2) கீறல், (3) குருதி வாங்கல், (4) அட்டைவிடல்,, (5) சலாகையிடல், (6) வர்த்தி வைத்தல், (7) ஊதல், (8) பீச்சல், (9) உறிஞ்சல், (10) கொம்பு கட்டல், (11) முறிச் சல், (12) தொக்கணம், (13) கட்டுதல்.

2. **அக்கினியின்கீழ்.**—(1) சுட்டிகை, (2) வேது, (3) ஒற்றடம், (4) பொட்டணம், (5) புகை.

3. **காரத்தின்கீழ்.**—(1) காரம், (2) சீலை, (3) களிம்பு, (4) பொடி, (5) நீர், (6) களி, (7) பசை.

**அறுவை, அக்கினி, காரம் ஆகிய இப் பரிகாரங்களுக்குரிய நோய்கள்.**

தமிழ் மருத்துவ நூற்களில் அறுவை, அக்கினிப் பிரயோக முறைகள், ஆங்காங்குப் பற்பல விடங்களில் ஒவ்வொரு சித்தரும் சமயம் நேர்ந்த விடத்து எழுதியிருக்கின்றனர். சீவரட்சாமிர்தம், யூகிசிந்தாமணி முதலிய நூற்களில் நோய்க்குப் பரிகாரம் கூறுமிடத்து, உள் மருந்துகளில் சிலவற்றைக் கூறிப் பின்னர் அறுவை, காரம், அக்கினி பரிகாரங்களைச் செய்யவுமென வெழுதியிருக்கின்றனர்.

**எடுத்துக்காட்டு.**—கல்லடைப்பு., அண்டநோய், யானைக்கால் நோய் முதலியன.

**அறுவை**—சத்ரம்.—இது அறுவைக் கருவிகளாகிய கத்தி முதலியவை களைக் கொண்டு அறுக்க வேண்டியவைகளை யறுத்து நோயை யகற்றுவது.

**காரம்**—க்ஷாரம்.—காரம் முதலியவைகளைக்கொண்டு, கட்டி, மூலம், சதைவளர்ச்சி போன்றவைகளைக் கரையும்படி செய்தல்.

**அக்கினி.**—இது சுட்டிகை முதலிய நெருப்புப் பிரயோகத்தினால் நோயைப் போக்குவது.

**கீறல்.**—இது கீறுதற்கேற்ற கருவியைக்கொண்டு நன்றாகப் பழுத்த கட்டிகளை அல்லது இரத்தக் குழாய்கள் முதலியவைகளைக் கீறிச் சீழ் அல் லது இரத்தத்தை முறையே வெளிப்படுத்துவது.

உடல், உணவு, செயல் முதலியவற்றின் மாறுதல்களால் பிணிக்குள் ளாகும்போது, சாரம் முதலிய எழு உடற் கட்டுகள் ஒன்றன் பின் ஒன்றாகப் பிணிபடக் கூடும். அவ்வாறுண்டாகும் பிணிகளைத் துவக்கத்தில் பேதி, வாந்தி, வியர்வையைப் பெருக்கல், மூத்திரத்தைப் பெருக்கல் ஆகிய பரிகாரங்களால் குணப்படுத்தலாம். குருதி முதல் மற்ற உடற்கட்டுகள் கேடடைந்திருப்பின் குற்றமுற்ற குருதியை வெளிப்படுத்திப் பரிகரிக் கலாம்.

இவ்வாறு இரத்தத்தை வெளிப்படுத்தும் முறை மூவகைப்படும். (1) அட்டை விடல், (2) கொம்புறிஞ்சல், (3) குருதி வாங்கல் என மூவகைப் படும். :—

**இவற்றுள் குருதிவாங்கும் முறை.**—வழக்கமாக இரத்தத்தைக் கீறி வெளிப்படுத்திக் கொண்டு குற்றமின்றியிருக்கும் மக்களிடம் நோய் அணுகாவாம்.

குருதிவாங்கல் பரிகரிப்புக்குத் தகுதியுடைய நோய்கள்.—(1) பைத்தியம், (2) சிலவகை விடாத்தலைவலி, (3) கண்ணோய், (4) காது நோய், (5) நாக்கு நோய், (6) சூலை, (7) பக்கசூலை, (8) ஏறண்டம், (9) கண்டமாலை, (10) யானைக்கால், (11) கணுக்கால்வீக்கம், (12) நரித்தலை வாதம், (13) முடக்கு வாதம், (14) இடுப்புவளி, (15) குருதித்தீ, (16) குருதிவளி, (17) அரசப் பிளவை, (18) சொறி முதலிய நோய்களில் குருதியை வெளிப்படுத்தலாம்.

### எவ்வெந்நோய்களில் குருதியை வெளிப்படுத்தக் கூடாது

(1) கயம் (இளைப்பு நோய்), (2) காசம், (3) சுரம், (4) முற்றுடல் வாதம், (5) காக்கைவலி, (6) பாண்டு, (7) காமாலை முதலியன. ஈதன்றி, (1) பயந்தவன், (2) குடியன், (3) வெறியன், (4) கூத்தாடி, (5) சிற்றின்பப்பிரியன், (6) ஆண்தன்மையற்றவன், (7) குழந்தைகள், (8) கிழவர்கள், (9) நோயினின்று நீங்கினவர்கள் ஆகிய இவர்களின் குருதியை வெளிப்படுத்தப்படாது. இவ்வாறு கூறியிருப்பினும நஞ்சுக் கடியினால் உயிர்க்கு இறுதி நேரிடும் காலத்தில் குருதியை வெளிப்படுத்தலாம்.

### குருதி கேடடையும்போது தோன்றும் குறிகள்

கட்டிகள், நமைச்சல், சொறி, எரிச்சல் ஆகிய குறிகள் காணப்படும்.

குருதியை வெளிப்படுத்தும்போது குற்றத்திற்குத் தக்கவாறு சில குறிகள் காணப்படும்.

1. வளி மிகுதியால் குருதியானது கறுப்பு நிறமாயும் நுரை பொருந்தியதாயும், இலேசத்துவமாயும், நீற்றுப் போனதாயும் சுறுசுறுப் பாய்ப் பாயக் கூடியதாயுமிருக்கும்.

2. தீக்குற்றம் கலந்திருப்பின் மஞ்சளுடன் நீலமும் பச்சையும் கலந்த நிறத்தை யொத்து நாற்றமுடையதாகவும் நீற்றுப்போயுமிருக்கும்.

3. ஐய மிகுதியால் இரத்தம் தடித்துத் தோய்ந்துபோயும் வழவழப்பு அதிகரித்தும் வெண்மை நிறம் பொருந்தியுமிருக்கும்.

### குருதியை வெளிப்படுத்தக் கூடாத காலம்

மேகம், கார் மூட்டமான காலத்திலும், காற்று வீசுங்காலத்திலும், குளிர்ச்சி மிகுந்திருக்குங் காலத்திலும், குருதிக் குழாயைக் கீறிவிடக் கூடாது. ஏனெனில், குருதி சரிவர வெளியாகாது ; அப்படி வெளிவரினும், விரைவில் உறைந்து விடும். ஆதலின் குருதிப் பெருக்கு அடைபட்டுவிடும். வெட்டு வாயில் குற்றமுண்டாகும்.

## குருதிக் குழாயைக் கீறும் விதம்

கீறக்கூடிய குருதிக் குழாயானது நன்ருய் விம்மியும், வெளித் தோன்றும்படியும் செய்து நோயாளியைச் சரிவர அமைத்துப் பிறகு குருதிக் குழாயைக் கீறவேண்டும். கீறுவாயானது கோணலின்றி, நேர்மையாகவும், ஒரே ஆழமுள்ளதாகவும் அதிகம் தாழ்ந்து இல்லாததாகவும், கூர்மையான கத்தியால் உண்டாகப்பட்டதாகவும் இருக்கவேண்டும். இவ்வாறு அமையப் பெறின் குருதிசரிவரப் பெருகும். அளவில் பெரியதாகக் கீறப்படின் குருதிப் பெருக்கு அதிகமாகும். சிறிய கீறலாயிருப்பின் குருதி கசிந்து உறைந்து போகும். அதனுல் குருதி சரிவர வெளியாகாது.

## குருதி அதிகமாகப் பெருகின் தோன்றும் குறி குணங்கள்.

நீர் வேட்கை, மூர்ச்சை, மயக்கம், வளி வேறுபாட்டால் உண்டாகும் குறி குணங்கள் ஏற்படும்.

## மிகுதியாகப் பெருகும் குருதியை நிறுத்தும் வழி.

குருதி பெருகும் குழாயை யழுத்துவதினுலும் பெரும்பான்மை குருதி நின்றுவிடும். அத்துடன் துவர்ப்புச் செய்கையுள்ள பொருள்களையும் குருதிப் பெருக்கடக்கும் செய்கையுள்ள பொருள்களையும் வெளியிலிடு மருந்தாகப் பயன்படுத்தலாம். இப்பரிகாரங்கட்கு அடங்காவிடில் சுட்டிகை செய்யலாம். இத்துடன் குருதிப் பெருக்கை அடக்கக்கூடிய உள் மருந்துகளையும் வழங்கலாம்.

**எடுத்துக் காட்டு.**—பவழ பற்பம், சிலா சத்து பற்பம், முத்து பற்பம், இம்பூரலிளகம் அல்லது குடிநீர்.

## கீறும் வாயிலுண்டாகும் புண்ணை ஆற்றும் வகை.

மாசிக்காய், காய்ச்சுக்கட்டி, களிப்பாக்கு, கடுக்காய், படிகாரம் போன்ற துவர்ப்புள்ள பொருள்களின் பொடிகளைத் தூவிப் புனிதமான துணியால் மூடிவைக்கவேண்டும். தானுகவே அப்புண் குணமடையும். செவ்வனே கீறப்படாததினுல் ஏற்படும் காயமும், குருதியின் குற்றங்களும் செவ்வனே வெளிப்படுமுன் நிறுத்தப்பட்ட விடத்தில் இருக்கும் காயமும் விரைவில் குணமடையா.

## அட்டை விடல்

### காரணம்.

அன்னப்பறவை நீர் கலந்த பாலிலுள்ள நீரைப்பிரித்துப் பாலைப் பருகுவது போல, உடலிலுள்ள நஞ்சுநீரைப் பருகி, குருதியைத் தூய்மைப்படுத்துவதற்காக அட்டை விடப்படுகிறது.

### விடும் வகை.

நன்னுளில் நோய்களிருக்குமிடங்களிலும், அவ்விடத்தின் நோய்கள் அட்டைவிடுதற்கு உரியன வாயிருப்பதையும் எவ்வெந் நாட்களில் எவ்வெவ் விடத்து நோய்கட்கு விடவேண்டுமென்பதையுமறிந்து செய்வதேயாகும்.

### அட்டையின் உறுப்பின் அமைப்பு

அட்டைக்கு ஐந்து தோல்கள், மூன்று பற்கள் உண்டு. அதன் இருபக்க ஓரங்கள் தடித்திருக்கும்.

### அட்டை வளரும் இடங்கள்.

**(a) தீய அட்டை இருக்குமிடங்கள்**—தவளை, நீர்ப் பாம்பு, பதனழிந்த இலைகள், புற்கள், நிறைந்துள்ள குளங்கள், குழிகள் இவ்விடங்களில் கிடைக்கும்.

**(b) நல்ல அட்டை காணப்படும் இடங்கள்**—நீர் ஊற்றுகளிலும், அருவிகளிலும், மணலின் கீழ் மறைவாகவுமிருக்கும். இதன் வயிற்றுப் பக்கம் பெரும்பான்மை செங்கழுநீர்ப் பூவின் நிறத்தை யொத்திருக்கும்.

**அட்டைகள் மூவகைப்படும்.**—அவை (1) நல்ல அட்டை, (2) தீய அட்டை, (3) சாதாரண அட்டை.

### நல்ல அட்டை நான்கு வகைப்படும்.

1. முதற் பிரிவில் சேர்ந்தவை வெண்மையும் சற்றுப் பொன்மை நிறமும் பெற்றிருக்கும்.

2. இரண்டாம் பிரிவிற் சேர்ந்தவை செங்கழுநீர்ப்பூ நிறத்தைப் பெற்றிருக்கும்.

3. மூன்றும் பிரிவிற் சேர்ந்தவை பவளத்தின் நிறத்தையும் அரிசியினிறத்தையு மொத்திருக்கும்.

4. நான்காமவை பச்சை நிறமும் எலுமிச்சம்பழ நிறமும் பொருந்திய வகையிலடங்கும்.

**தீய அட்டையினிலக்கணம்.**—இவை கருத்த நிறத்துடனும், கருஞ்செம்மை நிறத்துடனும் வான வில்லைப் போலப் பலநிறத்தையும் உடையனவாய் இருக்கும்.

**சாதாரண அட்டைகள்.**—இவை பொன்னிறத்தில் சற்றுக்கருமை நிறம் சேர்ந்த நிறத்துடனிருக்கும்.

**அட்டைகளில் ஆண் பெண் அறியும் விதம்.**—தாமரையும் கொட்டியும் கலந்துள்ள ஓரிடத்தில் இவ்வட்டைகளை விட்டால் ஆண் அட்டைகள் தாமரையில் போயொட்டிக் கொள்ளும். பெண் அட்டைகள் கொட்டியைச் சேரும்.

**அட்டையைத் தெரிந்தெடுத்தல்.**—நல்ல அட்டைக்குரிய இலக்கணம் பொருந்தியவையாகவும் ஐந்து விரல் நீளம் உள்ளனவாகவும் இருக்க வேண்டும்.

**அட்டைகளைப் பத்திரப்படுத்தும் விதம்.**—அட்டைகளைச் செவ்வல்லி, கொட்டி, பசு மஞ்சள் இவைகளின் கிழங்கை அரைத்துக் கலந்த நீரில் விட வேண்டும்.

## அட்டைகளை விடும் முறை.

கீழ்க்கண்ட திதிகளில், கூறப்படும் இடங்களில் அட்டை விடின் மரண முண்டாம்.

### விடக்கூடாத திதிகளும் இடங்களும்

| திதி. | இடம். |
|---|---|
| பிரதமை | பெருவிரல் |
| துதியை | உள்ளங்கால் |
| திரிதியை | முழங்கால் |
| சதுர்த்தி | தொடை |
| பஞ்சமி | குய்யம் |
| சஷ்டி | நாபி |
| சப்தமி | மார்பு |
| அஷ்டமி | கை |
| நவமி | கழுத்து |
| தசமி | கீழுதடு |
| ஏகாதசி | நாக்கு |
| துவாதசி | நெற்றி |
| திரயோதசி | புருவம் |
| சதுர்த்தசி | பிடரி |
| அமாவாசை அல்லது பௌர்ணமி | உச்சி |

**குறிப்பு.**—அட்டைகளை, கழுத்தில் விம்மிக் காணும் காரிரத்தக் குழா யிலும், நாடி உணரப்படும் வீக்கங்களிலும் விடலாகாது. இரண்டாவதாகக் கூறிய நிலையில் அவ்வீக்கத்தினின்று நான்கு அல்லது ஐந்து அங்குலம் தள்ளி அட்டையை விடலாம்.

கீழ்க்காணும் இடங்களில் அட்டைகளை விடலாமென இரண மருத்துவ நூல் வழியாக நாம் அறியக்கிடப்பினும் கவனமாகவே அவ்விடங்களில் விட வேண்டும். ஏனெனில் அவ்விடங்கள் மிகவும் நுட்பமானவைகள். அவை: 1. கண்மடல், 2. ஆண் குறியின் மேற்புறத் தோல், 3. (அண்டம்) விதை யின் தோல், 4. முலை (ஸ்தனம்).

### அட்டை விடுதற்குமுன் செய்யவேண்டிய துவக்க கிரியைகள்—நோயாளியைத் தயாரிக்கும் வகை.

அட்டை விடுதற்கு நாம் வைத்திருக்கும் நோயாளிக்கு முறைப்படி வாந்திக்கும் பேதிக்கும் கொடுத்தும் வியர்வை உண்டாக்கக்கூடி ஏனைய பரிகாரங்களைச் செய்துகொண்டு அட்டையை விடும் நாளில் ஏற்ற அளவில் உணவையளித்தும் தூங்காமற்படி காத்து பிற்பகலில் விடவும்.

**அட்டை விடவேண்டிய இடத்தைத்துப்புரவு செய்தல்,**

அவ்விடத்தை உவர்மண் கொண்டு சுத்தம் செய்து, அட்டை விடுதற்கு முன் அவ்விடத்தில் காவி மண்ணை ஈரமாகப்பூசி, எவ்விடத்தில் குற்றம் அதிகமிருக்கிறதென்றறிந்து அட்டை விடுதலே நலம்.

**அட்டை விடுதற்கு ஏற்ற நேரங்கள்.**

பிற்பகலில் அட்டை விடுதல் நன்று. எனினும் குழந்தைகட்குக் காலையில் விடுதல் நலம். மாலைக் காலத்தில் விடின் ஒருக்கால் இரவில் கடிவாயினின்றும் குருதி பெருகக்கூடும். அவ்வமயம் பெரியோர்கள் அதைப் பாராது தூங்க நேரிடின் குழந்தையின் உயிர் நீங்குதலுமுண்டு.

**அட்டை விடுதல்.**—வீங்கியாவது, கடினமாயாவது நோயுடன் கூடி இருக்கக்கூடிய இடங்களையறிந்து அட்டையை விடுதல் வேண்டும். அல்லது நீர் நிறைந்த ஒரு சிறு குடுவையில் ஓரட்டையை விட்டு அக்குடுவையின் வாயை விடவேண்டிய இடத்தில் கவிழ்த்து நீர் வெளிவிப்படா வண்ணம் பிடித்தல் வேண்டும். அப்போது அட்டை நோயுள்ள இடத்தைப் பற்றிக் கொள்ளும். இவ்வாறு செய்தும் அட்டை கவ்விப் பிடிக்காவிட்டால் அதனை ஒரு சுத்தமான வெண் துணியில் எடுத்துவிட்டுப் பிறகு விட்ட இடத்தை மறுபடியும் துடைத்துப் பாலைத் தடவி அதன்மேல் அட்டையைவிட அது பற்றும். இவ்வாறு செய்த பின்னும் பிடிக்காதிருப்பின் விடவேண்டிய இடத்தைச் சிறு கூரிய கத்தியால் மேலாகக் கீறிவிட குருதி சற்றே கசியும். அவ்வாறு கசிகின்ற குருதியை அவ்விடத்திலேயே தடவிவிட்டு அதன்மீது அட்டையைவிட விரைவில் பற்றிக்கொள்ளும்.

**கடித்திருக்கும் அட்டையை எடுக்கும் விதம்.**

அட்டை, நன்றாகக் குருதியைக் குடித்துவிட்டதென்பதையறிந்து நீக்கி விடவும். இயற்கையாக ஒருநாள் முதல் இரண்டு நாளைக்குள் நல்ல அட்டை வேண்டிய அளவு குருதியை எடுத்துவிடும். அதன்பின் தானாகவே விழுந்துவிடும். நிரம்பக் குடித்த பின்னும் கவ்விப் பிடித்துக் கொண்டிருக்குமாயின் கடிவாயில் காடி நீரைப் பெய்தல் வேண்டும். அல்லது பொடி செய்த கறியுப்பைத் தூவவேண்டும். இவ்விதம் செய்ய அது வீழ்ந்து விடும். குருதி குடித்தெழுந்த அட்டையைத் தவிட்டிலிட்டு புரட்டவேண்டும். பிறகு பொடி செய்த எள்ளை அதன் வாயில் தேய்க்க வேண்டும். அதன்பின் சுத்த நீரில் விட்டு குருதி வெளி வரும்படி செய்யவேண்டும். பிறகு அதைப் புற்றுமண் கரைத்த தெளி நீரில் விட்டுஅதன் மேல் முன் கூறிய நீரில் விட்டு வைத்தல் வேண்டும். பயன்படுத்திய அட்டைகளையும் பயன்படுத்தா அட்டைகளையும் வெவ்வேறாக வைக்கவேண்டும்.

**அட்டை விடுதல் நன்கு நிறைவேறியதின் குறிகள்.**

நோயின் கொடுமையும் வருத்தமும் நீங்கி நோயாளி சுகமடைவான்.

**தகாத அட்டைகளை விடுவதனாலுண்டாகும் குணங்கள்.**

இவ்வட்டைகளை விடுவதால் நோயாளிகளுக்குக் காய்ச்சல், மயக்கம், வேதனை, அட்டைவிட்ட இடத்தில் எரிச்சல், நமைச்சலுண்டாகிக் கடிவாயும் வீங்கும்.

**குறிப்பு.**—அட்டையைக் கடிக்க விட்டிருக்கும்போது ஈரத்துணியை அதன் மீது போடவேண்டும். இன்றேல் ஈ மொய்க்கும். அதனால் அது செவ்வையாய்க் குடிக்காது.

**குருதியை யதிகமாக உறிஞ்சுவதால் வரும் கெடுதி.**

அளவுக்கு மிகுந்த அட்டைகளை விடின் மிகுதியாகக் குருதியை வெளிப் படுத்தி விடும். அதனால் நீரில்லாப் பயிர் போல நோயாளி வாட்டமடைந்து உயிர் துறப்பதற்கு வழியுண்டு.

**குருதி நன்றாக வெளிப்படாவிட்டால் செய்யும் பரிகாரம்.**

குருதி வேண்டிய அளவு வெளிப்படாவிட்டால் மீண்டும் அட்டையை விடலாம். ஆனால், நோயாளி மயக்கமுறின் நிறுத்தவேண்டும். பிறகு மறுநாள் அட்டையை விடலாம். அன்றி சுடுநீர் கொண்டு ஒற்றடமிடக் கடிவாயினின்றும் குருதி வெளிவரும்.

**கடிவாயினின்று குருதி பெருகின் அதைத் தடுக்கும் விதம்.**

அட்டையை நீக்கியபின் கடிவாயினின்றும் குருதி வெளிப்படின் படிகாரப் பொடி அல்லது வெங்காரப் பொடியைத் தூவ நின்றுவிடும்.

**குற்றத்தின் அளவாகக் குருதியில் ஏற்படும் மாறுதல்கள்.**

வளிகோளாறடைந்திருப்பின் குருதியில் வெண்ணிறமும், தீ கெட்டிருப்பின் மங்கலான நீல வண்ணமும், ஐயம் கேடடையின் இருள் நிறமுங் காணப்படும்.

**அட்டைவிட்ட இடத்தில் உண்டாகும் புண்ணுக்குப் பரிகாரம்.**

**மேல் பூச்சு.**—காரெள், கற்றாழை இவ்விரண்டையும் காடி நீராலரைத்து மேலுக்குப் பூசலாம். அல்லது கற்றாழை மடலைச் சுட்டு இரண்டாகப் பிளந்து மஞ்சட் பொடியைத்தூவிப் புண்ணில் வைத்துக் கட்டலாம்.

**ஒருபோது விடுத்த அட்டையை மறுகால் விடுமுன் அதற்குக் கொடுக்கவேண்டிய ஆறுதல்.**

ஓரட்டையை ஆறுதலின்றித் திரும்பத் திரும்ப விடின் அது நச்சுத் தன்மையை யடையும். ஆகையால் ஒருமுறை பயன் படுத்திய அட்டையை எழு நாட்கட்குப் பின்பே பாவிக்க வேண்டும்.

அட்டையைக்காவற் படுத்தும் நீரானது மூன்று அல்லது நான்கு நாட் கொரு முறை மாற்றப்படவேண்டும். அல்லாவிடில் அவ்வட்டை சோம்ப லடைந்து நாளடைவிற் பயன்படாமற் போய்விடும்.

**அட்டைகள் மூக்கினுள்ளாவது எருவாயினுள்ளாவது கருவாயி னுள்ளாவது சென்றால் அதை வெளிப்படுத்தும் முறை.**

அவ்வழிகளில் காடி நீரைப் பாய்ச்சினாலும் உப்புப் பொடியை தூவினாலும் அட்டை வெளி வந்து விடும்

**அட்டைகளினால் தீரக்கூடிய சில முக்கிய நோய்களும் அந்நோய்களில் விடுதற்குரிய இடங்களும்**

1. சுரத்துடன் கூடிய மார்பு அல்லது வயிற்று நோயில், நோய் காணு மிடத்தின் மேல் விடலாம்.

2. குருதி மூலத்தால் வருந்துகிற ஒருவனுக்குக் குருதி தடைபடு வதினால் ஏற்படும் தலைவலியை நீக்குதற்கு அட்டையை எருவாயைச் சுற்றி விடலாம்.

3. கருப்பையிலேற்படுங் கோளாறுகளுள் சூதகவலியை தீர்ப்ப தற்குத் தொடையின் உட்புறத்தில் விடலாம்.

4. அடிபட்ட வீக்கங்கள், கட்டிகள், கிரந்தி வீக்கங்கள் ஆகிய இந் நோய்களில் அட்டைகளை அவ்வவ்விடங்களில் விடலாம்.

5. குழந்தைகட்குண்டாகும் கக்குவானிருமலில் அட்டையை முதுகு நடுவின் மேற்புறத்தில் விடலாம்.

இதுவரை அட்டையைப் பற்றி கூறிய அனைத்தும் அடியிற் காணப்படும் அகத்தியர் நயன விதி ஐந்நூற்றில் கூறிய பாக்கள் வலியுறுத்தும்.

**அட்டை விதி.**

அட்டையின் விதிதனை யறிய யாவருந்
திட்டம தாகவே செப்ப வுன்னினேன்
மட்டமர் குழலினாள் வரன ளித்திடும்
இட்டவி நாயகன் இணையடி போற்றியே.

முன்னே கேளட் டையின் குணந்தான் மொய்குழல் மாதே [நீ கேளாய்
அந்நா ளன்னம் பால்பருகும் அது போல் வாங்கும் விஷநீரை
நன்னாள் பார்த்து நோயறிந்து நயனந் தன்னில் விடுவாயால்
சொன்னேஞ் சொன்னோம் நாற்றிசையுந் துலங்கத் சொன்னேஞ் சொன்னோமே.

ஆதியோ தியவே தத்தில் அட்டைக்கு மேனி யுந்தான்
ஏதெனில் பல்லு மூன்று மியன்றஅஞ் சடுக்குத் தோலும்
ஓதிய முகமும் பச்சை உதிரமுஞ் சிவப்பாய் பின்னே
தீதிலாப் பக்க மிரண்டும் படுத்திடும் நரம்பு சேரும்.

அரவின் வாய்த் தேரை போன்றும் அணிமழுத் தலையே
[போன்றும்
பருதியின் பைங்கண் போன்றும் பல மணி சிதறி னாற்போல்
விரவியே பல் நெ கிழ்ந்து மெத்ததெனக் கடிக்கும் அட்டை
கருதியே காலன் தன்னைக் காட்டிடுங் காயந் தானே.

**வகை.**

வெள்ளை நிறத்தான் வேதியனூர் மிகுசெங்கழுநீர் சத்திரியன்.
சொல்லும் பவளம் வைசியனுஞ் சூத்திர னெனுமிச் சம்பழமாங்
கல்லைப் போலக் கதித் தெழுந்த கருது புறத்தில் விடுவீரேல்
மெள்ளக் கரைத்திட் டோடுமென விளம்பிச் சொன்னேம்
[மேதினிக்கே.

**ஆண் பெண் வகை அறிதல்.**

அட்டையில் பெண்ணும் ஆணும் அறிந்திட வேணு மாமிகில்
கொட்டியும் பதுமந் தானுங் கூடவே நீரில் போட்டால்
அட்டையை விட்ட வாறே ஆண்பது மத்திற் சேருங்
கொட்டியிற் பேடு சேருங் குறியதனை யறிந்து கொள்ளே.

அட்டை தோற்றும் வகையதனை அறியக் கேளாய் அரக்காம்பால்
கொட்டிக் கிழங்கு பசுமஞ்சள் கோல கழுநீர் வார்த்தரைத்து
மட்டி தாகக் கரைத்ததிலே வாய்த்த உருவைத் தேற விட்டுக்
கட்டிக் கொண்டுபோய்விடுவீர் காலன் தவிர்க்குங் கண்டீரே.

வெள்ளைநிற மொன்று மிகுநீலந் தானொன்று
கள்ளமிலாப் பொன்மை கருப்பொன்று—எள்ளியதாம்
வாசமிகும் பூங்குழலீர் மற்று மிவைகளெலாந்
தேசகுண மாமென்று செப்பு.

நீலநிற மாணுருவம் நிச்சயமோ ரங்குலம்பெண்
சாலவே வெள்ளைநிறந் தானாகும்—மேலுங்
கருப்புவிஷங் கண்டால் கருமையுற்ற பெண்மை
உருப்புநிறம் சாதா ரணம்.

அட்டை தனக்குள்ள அழகான லட்சணத்தைத்
திட்ட முடன் நடுவேசெப்பக்கேள்—குட்டிக்குப்
பாலமுத மென்னுமொழி பாவைநல் லாயுருக்கள்
நாலுவகை யுண்டென்றே நாட்டு.

மண்ணிற் பிறந்த வட்டைக்கு வகுத்த நாலு குணங்கேளாய்
அண்ணி தான வேதியர்க்கு அடைந்த அட்டை யனல் நிறமாந்
திண்ணி தான மன்னவர்க்குச் செய்ய கழுநீர் மலர்நிறமாம்
எண்ணிச் சொன்னேம் வைசியர்க்கே யிசைந்த வட்டை வரிதானே.

சொல்லக் கேளாய் சூத்திரர்க்குச் சொன்னேம் பச்சை நிறமாகும்
நல்ல திந்த வகை தன்னை நாடிச் செய்ய நலம்பிறக்குங்
கல்லைப் பழிக்குந் தனத்துடனே கனிந்த கொவ்வை யிதழ் [கொண்ட
அல்லைப் பழித்த குழலாளே அமைத்துச் சொன்னேம் [மானிடர்க்கே.

அஞ்சுவிரல் நீளத்தில் அட்டை விடலாகும்
மிஞ்சவே அட்டை விட வேண்டாம்—மிஞ்சி
கடிவாய் தினவின் கடுத்து வலி வீங்குந்
துடியாரு நல்லிடையாய் சொல்.

விட்டவுருத் தன்னில் விஷஉதிரந் தான் சிக்கிப்
பட்ட வுருவைப் பலகாலும்—விட்டுவிடு
மத்தா லுருவடைய மான விஷமாகும்
முத்தார் தனத் தாய் மொழி.

விட்டவுரு வேறே விடாதவுரு தான் வேறே
கட்டுங் குடுவை தனில் காதலித்துக்—கட்டுங்
களிமணிட்டு நீர்வாத்துக் காப்பாற்று மல்லால்
தெளியவரும் நீரில் விடுஞ் செனறு.

விட்டவுருத் தானும் விழவுருவே யானக்கால்
வெட்டுருவாய் வீங்குமது வேதனையாந் —திட்டஞ்
சுரமாங் கலக்கமாஞ் சூழ்தினவுங் காணும்
உரமாகும் புண்ணு முதிர்ந்து.

உற்ற வுருவினுக் கோது பரிகாரம்
உற்ற விஷம் ரத்தத்தா லோயுமாம்—முற்ற
இரத்தபித்த மானவர்க்கு ஈதுபரி காரம்
இரத்தமதை ஊற்றிவிடு மென்று.

அட்டதனை விட்டு அதன்மீதி லே சீலை
யிட்டுறையு மல்லாக்கால் ஈயிருந்து—முட்டக்
குடியாது பூசிக் குலைந்துவிடு மென்றே
துடியாரு மெல்லிடையாய் சொல்.

நிரம்பக் குடித்துருவும் நித்திரை போய் மீனை
வரம்பில் கடிகடிக்கி லதனைத் —திரும்பப்
புளியிட்டு வாங்கும் பிடித்திருந்தால் மீளக்
கருவுற்றுத் தான்கடிக்குங் காண்.

குடித்துவீ ழட்டைதனைக் கொள்தவிட்டி லிட்டுப்
பிடித்ததின்வாய் எள்ளதனைப் பெய்து—பிடித்து
விட்டுரத்தம் போனல் துலைநீரில் நீந்தவிட்டுக்
கட்டுவது மண்குடுவைக் காண்.

முன்னே சொன்னேம் முழுவதும் மொய்குழல் மாதே நீ [கேளாய்
அன்னம் பாலில் நீர்பெய்து அயின்ருற் போல விஷமகனும்
இன்னஞ் சொல்லி லெண்விரலில் உதிர மெல்லாம் வாங்கிவிடும்
பொன்னை யணியும் மேனியளே மேலும் புகலக் கேளாயே.

சத்தியில் மாந்த ருக்குந் தையல்பிள் ளையர்த மக்கும்
ஒத்துநின் றாட்டி வித்து உறக்கமுந் தவிரப் பண்ணி
மத்தியா னத்து மேலாய் மண்கொண்டு சுத்தி பண்ணிப்
பற்றிய நோய்கள் தன்னைப் பார்த்துநீ அட்டை கட்டே.

கட்டிய வுருக்கள் தானுங் கடுகவே குடித்து வீழில்
விட்டவா யுதிர மாறும் வேதனை யில்லை யென்று
முட்டவுங்கடுத்து நொந்து முகஞ்சுளித் துருக்கள் காட்டில்
விட்டவாய் வீங்குமென்றே மேம்படக் கூறி ஞரே.

மட்டுப் புகுந்த விதனுள்ளே வகுத்த சாதி நாலுக்கும்
கட்டு முருவென் றிவற்றிற்குங் கருது குலமும் பிறப்புங் கேள்
ஒட்டிப் பிறக்கு மேழுதோல் உறுப்பில் மூன்று நூறுகால்
தொட்ட அஞ்சு நீளமதில் தோன்று நாமஞ் சொல்லக்கேள்.

ஆகா வட்டை யது கேளாய் அலவன் தவளை நீர்ப்பாம்பு
மேகா சலத்தில் பிறந்தனவும் வேண்டா சருகிற் பிறந்தனவும்
போகாச் சுனையில் பிறந்தனவும் பொல்லா வட்டை யிவையென்றே
பாகார் மொழிகொள் பைந்தொடியே பாரா யட்டை வகுப்பினையே.

அழுகா சலத்தில் பிறந்தவுரு அறவே மேனி சரசரக்கும்
மெழுகா நிலை நீர்ச்சுனையிலுறு உருவை யொழிய அடைகாக்குங்
கழியா நீரில் பிறந்தவுருக் கழுநீ ரான நிறமதுபோல்
ஒழியா வயிறு சிவந்திருக்கும் உண்மை யிதுவென் றுணர் வாயே.

மண்ணிற் பிறந்த வேதியற்கு வகுத்த உருப்பொன் னிறமதுவாம்
கண்ணிற் காக்கும் வேந்தர்க்குக் கருது கழுநீர் நிறமதுவாம்
எண்ணிச் சொல்லும் வைசியர்க்கு இசைந்த வரிசி யதினுருவாம்
பண்ணில் சேர்ந்த மொழிநல்லாய் பச்சை நிறமாஞ் சூத்திரர்க்கே.

பொன்னிற முதிர்ந்த எள்ளைப் பொருகுபோ லரைத்து இன்னுஞ்
சென்னிற வெண்ணெய் தன்னைச் சிகரத்தே ஞெக்கக் கொண்டு
மின்னனை யாய்நீ கேளாய் விரைந்துட னுதிரம் பாய்ந்தால்
புன்னைப்பூ நிறம தாகப் போற்றஎள் ளரைத்துப் பூசே.

அமிர்த பாகம் விஷ்பாகம் அறிந்தே யட்டை தனைவிடுக
அமிர்தபாகத் தான வட்டை தனை யிப்பால்நீதான்விடுக
குமுத மலர்வாய் மடமானே கொடிய விஷப்பா கத்தேற்றித்
திமிர மாசு பெண்ணுருவைத் திறந்தே விடுக செப்பினரே.

சாத்திரந் தன்னைக் கற்றுந் தவத்தினிற் பொருளைக் கேட்டும்
காத்திரந் துய்யனுகில் கைவந்தோர் கையைக் கண்டு
பார்த்திடு மிவையே யென்று பரிவுட னிவனைப் பற்றித்
தீர்த்து நோய் தவிர்க்க வேண்டிச் செகந்தனில் விடுவித் தாரே.

## அமுதநிலை.

சீர்தரு பிரதமை சேர்ந்திடும் பெருவிரல்
நேர்பெறு முள்ளங் காலது துதியை
திரிதியை முழங்கால் சேர்ந்திடு மென்க
சதுர்த்தி பெருந்துடை தாவிய பஞ்சமி
குய்யத் திடத்தே குடியிருந் திடுமாம்
ஐயமே சஷ்டி அமர்ந்திடும் நாபி
சப்தமி முலையில் தானிருந் திடுமால்
ஒத்திடு மஷ்டமி ஓதிடுங் கரத்தில்
மெச்சிடும் நவமி மேவிய கழுத்தில்
அதரந் தசமி ஆகுமவ் விடத்தே
ஏகா தசியில் இருந்திடும் நாவில்
துவாதசி தன்னில் துயின்றிடும் நெற்றி
திரயோ தசியில் சேர்ந்திடும் புருவம்
சதுர்தசி பிடரி தானிருந் திடுமால்
உதித்திடும் பூரணம் உச்சியி லுறையும்
செப்பிய அமிர்தம் நிலைநின் றதனுல்
சஸ்திரம் பண்ணில் தானெழும் நோய்கள்
உதித்திடும் பூரணம் உச்சியி லுறையும்
செப்பிய அமிர்தம் நிலைநின்றதனுல்
சஸ்திரம் பண்ணில் தானெழும் நோய்கள்
கொப்புளித் திடினுங் குத்துப் படினுந்
தப்பிலா அரவந் தான்கடித் திடினும்
அட்டை கடிக்கினும் அடிதடிச் சிலந்தியும்
வயிற்றிற் பிணியென மரணம தாமே
காசினி தனிலே கைவிட தாரி
திதிகளை யறிந்துசெய்திடப் பலிக்கும்
மலைதிகழ் முனிவர் மகிழ்ந்துரைத் தனரே.

அட்டைவிடக் கொம்புவைக்க ஆனசிலை யாற்குத்த
ஒட்டிச் சுடவாங்க ஒள்ளுதிரம்—பட்டினிதான்
ஆகாதே யென்று மவனிதனி லுள்ளோர்க்குப்
பாகார் மொழியாய் பகர்.

அட்டையாற் கொம்பா லடைந்தசிலை குத்துதலால்
மட்டொழிந்து போந்துதிரம் வாங்காதே—திட்டம்
உயிர்க்குயிராய் நிற்கும் ஒழியுமே கண்டால்
பயிர்க்குயிராம் நீர்போல் பரந்து.

அட்டை விடிலுதிரம் ஆறிரண் டங்குலம்போம்
எட்டுவிர லாங்கொம்புக் கென்பரால்—திட்டமுடன்
இட்டகுடோ ரிக்குதிரம் ஈரிரண் டங்குலம்போம்
விட்டுவிடுங் கண்டறிவீர் மேல்.

வீக்கம் விதனமிகு வேதனை தான்கடினம்
தாக்குவிஷம் வேற்றுநிறந் தானணுகில்— போக்கி
விடுமட்டை தானென் றவனியிலுள் ளோர்க்குத்
திடமாக வேயிதனைச் செப்பு.

அட்டைவிடு வீக்கத்தி லாறிரண் டங்குலத்தே
அட்டைவிடுஞ் சூழவோர் அங்குலத்தே—அட்டைவிடும்
அம்பட்ட தன்னளவே யானுலும் வாங்குவது
கொம்பட்ட தன்னளவே கூறு.

துட்டரத்தம் போனுக்கால் சோக முன்கடிய
திட்டமுடன் வேதனையும் தீருமே—வட்டதன
மானே உருவினுக்கு மற்றென்றும் வாராது
தானே தனக்குநிகர் தான்.

பலகாலும் தான்கடித்துப் பற்கூசித் தாகம்
சிலதான தன்வயிறுந் தேக்கி—நலமாகப்
பத்தா வுருபத்தும் பாரறியுந் தான்கழுவிப்
புத்தாகு மண்ணிலிட்ட போது.

பொரித்தவெள் ளரைத்துப் பூசும் போகுமவ் விரணங் கேளாய்
கருத்துடன் மந்த வாதம் கலந்தபித் தத்தால் வந்த
வருத்தமாம் வலிபெருக்கில் வாதமாஞ் சோபந் தீர்ந்து
திருத்தமா யட்டை யுண்ணுந் திறந்தீருந் திண்ணந் தானே.

வாதநிறம் நெய்த்து வெளுத்திருக்கும் வன்பித்துக்
கோதுநிறம் நீலமே கூறுங்கால் —போதுநடு
ஐயுதிர மீதில் கருத்திருக்க லாமென்றே
மொய்குழலஞ் சேற்பாய் மொழி.

**சலாகை.**—எலும்புகளில் உண்டாகக்கூடிய கட்டிகள், புரைகள், சிலைப் புண்கள், பவுத்திரம் போன்ற இரண நோய்களில் நோயின் நிலைமையை ஆராய்ந்து அறிவதற்குச் சலாகைகள் உபயோகப்படுகின்றன. இச் சலாகை பெரும்பாலும் வெள்ளி, செம்பு இவற்றினுல் செய்யப்படும். இவை ஒரு முருக்கு இலையின் காம்பினது உருவத்தைப் பெரிதும் ஒத் திருக்கும். முனைகள் மழுக்கமுள்ளவைகளாயிருத்தல் வேண்டும். இக் காலத்து மேனுட்டு இரண மருத்துவர்கள் இது போன்ற கருவியை மேற்கூறிய உபயோகத்தின்பொருட்டுக் கையாளுகின்றனர்.

இச் சத்திராயுதங்களை அகத்தியர் நயன விதியில் கூறியவாறு அடியிற் குறிப்பிடப்பட்டது.

கத்தி சத்திரம் கவின்குறும்பி வாங்கியும்
முக்கவா தன்னுடன் முள்ளு வாங்கியும்
ஆழிக் கோலு மடுத்த பிறையுடன்
கத்தரிக் கையுடன் பரகரை வாங்கியும்
மூச்சலா கையோடு முனிமொழி யோட்டும்
மட்டக் கோலும் மாறும் ஊசியும்
செப்புக் கிழையுஞ் சீரிய சலாகையும்
வட்டகை தன்னுடன் வளர்பஞ் சமுகமும்
செப்புச் சலாகையுங் கொம்புங் குடோரியும்
வெங்கலக் குழலும் ஈயச் சலாகையுங்
காயக் கோலுங் கண்கத்தி தண்டும்
இவையிவை யாயுத மிருபத் தாறுஞ்
சிவனவ னருளால் திகழ்சத்ரா யுதமே

**இவற்றுள் :**

1. அறைதருங் கத்தியா றங்குல நீளம்
அகலமோ ரங்குலம் ஆம்முனை வட்டம்
மயிர்கத்தி போன்று வழங்கு மென்ப

2. சத்திர நீளஞ் சாற்றிறு றங்குலம்
வேப்பிலை போலும் விளங்கும்பல் பல்லாய்
நிறைகழஞ் சாறு நெடியதோர் பிளவை
கட்டி யிவற்றைக் கண்டமா யறுக்க
மெத்தவும் பயனும் மேதினி மிசையே

3. குரும்பி வாங்கியின் கூறே ழங்குலம்
நிறையரைக் கழஞ்சு நெடுங்கைப் பிடியோ
ஐந்தே அங்குலம் ஆமெனப் பகர்வார்

4. முகவா தனன்றே முந்தான் கங்குலம்
முக்காற் கழஞ்சு நிறையென மொழிவார்

5. முள்வாங்கி நீளம் மூவிரண் டங்குலம்
அகலமோ ரங்குலம் அணிநிறை கழஞ்சொன்
றறுக்கவுங் கீறவும் அவிர்நகம் வாங்கவும்
பயனும் என்று பணித்தனர் மேலோர்

6. ஆழிக்கோல் பத்தே அங்குலம் நிறையோ
அரைப்பலம் ஆகுமென் றறைந்தன ரறிஞர்

7. பிறைக்கோ லென்பது பேசின்மூ வங்குலம்
நிறைமூன்று கழஞ்சு நிகழெழுத் தாணிபோல்
நீண்ட பிறைக்கோல் மத்தியில் நிலவுறும்

8. கத்தரி கைச்சீர் கழறெட் டோடரை
அங்குலம் நிறைகாற் பலமே யாகும்

9. பரகரை வாங்கியோ பதிஞ றங்குலம்
நிறையரைப் பலமென நிகழ்த்துவ ருணர்ந்தோர்

10. முச்சிலா கைச்சீர் மொழியினே ழங்குலம்
நிறைநான்கு கழஞ்சே நிலவதன் வடிவோ
ஒரு மூன்று தகட்டுவா யுள்ளது பாரே

11. முனிமொழி யென்பதோர் முக்கிய கருவியே

12. ஓட்டுக்கோ லங்குலம் ஒன்றொடு பத்தே
தலையொரு கழஞ்சரைப் பலமுடல் நிறையே

13. அட்டக்கோ லீரொன் பானங் குலமே
காசிடை யெட்டெனக் கழறுவ ருரியோர்

14. ஊசிமூ வங்குலம் உரைநிறை யரைமா

15. செப்புக் குழைதான் திரட்சியாங் குழலே
ஒருசா ணளவின துயர்நிறை யரைப்பலம்
தகடோ லைக்கனம் சார்புண்ணில் விடுவது

16. சலாகை யங்குலந் தாஞெரு நான்கே
அன்றியைந் ததன்நிறை யாறிரு கழஞ்சே

17. வட்டகை யென்பதோர் வகையா யுதமே

18. பஞ்ச முகமுமப் பரிசின தாமே

19. செப்புச் சிலாகை சிறந்ததோர் கருவியே

20. கொம்பீ ரைந்தங் குலமாம் வாழையின்
குருத்தொப் பதுபூண் குலவிரண் டங்குலம்
மேனிவீக் கத்தை வீட்ட வல்லதே
கீறிக் கட்டியைக் கெட்டசெந் நீரை
வெளியிடத் தக்க மிருபய ஞயதே

21. குடோரியே ழரையங் குலம்நிறை காற்பலம்

22. வெண்கலக் குடில்தான் மேவுமெட் டங்குலம்
நிறைபலம் மூன்றே மறையென நிகழ்த்துவர்

23. ஈயச் சாலகை மியம்பின்மூ வங்குலம்
நிறையோ நான்கு கழஞ்சென நிலவிடும்

24. காயக் கோல் நீளம் கழறினே ழங்குலம்
நிறையிரு கழஞ்சு நெடிய பருமஞே
இரண்டங் குலமென விசைத்தனர் பெரியோர்

25. தண்டு சலாகை கொண்டவங் குலமோ
ஒன்பதங்குலம் நிறை யோரரைக் கழஞ்சே
ஈர்க்குப் போலும் எழில்கனம் வாய்ந்ததே

26. நயனக் கத்தியின் நலமூ வங்குலம்
நிறையொரு பணவிடை நிகழ்முனை யூசியே
இன்ன சத்திரத்தி னேற்ற முணர்ந்து
அமுத நிலையினை யாய்ந்தறிந் தினிது
பண்டிதஞ் செய்யப் பழகிய ஒருவனே
சத்திரப் பண்டித னுமெனத் தக்கோர்
தண்கட லுலகிற் சாற்றின ரம்மா.

1. கத்தி.—6 அங்குல நீளம், அகலம் 1 அங்குலம், முனைவட்டம் மயிர்க்கத்தியைப் போன்றது.

2. சத்திரம்.—6 அங்குல நீளம், வேப்பிலையைப்போல் பல்பல்லாயிருக்கும். நிறை 6 கழஞ்சு, பிளவை, கட்டியிவைகளைக் கண்டமாய் அறுக்க உபயோகப்படுகிறது.

3. குறும்பி வாங்கி.—7 அங்குலம், நிறை அரைக்கழஞ்சு, கைப்பிடி மட்டும் 5 அங்குலம்.

4. முகவாதனன்.—12 அங்குலம், நிறை முக்காற் கழஞ்சு.

5. முள்வாங்கி.—6 அங்குலம் நீளமுள்ளதாய் 1 அங்குலம் அகலமுள்ளதாய் 1 கழஞ்சு நிறையுள்ளதாயிருப்பது. இது அறுக்கவும், கீறவும், நகம் வாங்கவும் உபயோகப்படுவது.

6. ஆழிக்கோல்.—10 அங்குலம், நிறை அரைப்பலம்.

7. பிறைக்கோல்.—3 அங்குலம், நிறை 3 கழஞ்சு, எழுத்தாணிபோல் நீண்ட பிறைக்கோல் மத்தியில் விளங்கும்.

8. கத்தரிக்கோல்.—8½ அங்குலம், நிறை கால் பலம்.

9. பரகரை வாங்கி.—16 அங்குலம், நிறை அரைப்பலம்.

10. முச்சிலாகை.—7 அங்குலம், நிறை 4 கழஞ்சு, மூன்று தகட்டு வாயுள்ளது.

11. முனிமொழி.—இது ஒரு முக்கிய கருவியாகும்.

12. ஓட்டுக்கோல்.—11 அங்குலம் தலை மட்டம், 1 கழஞ்சு, தலையொழிந்த பாகம் அரைப்பலம் நிறையுள்ளது.

13. அட்டக்கோல்.—18 அங்குலம், நிறை 8 காசெடை.

14. ஊசி.—3 அங்குலம், நிறை அரைமா.

15. செப்புக் குழை.—ஒரு சாண் நீளம், நிறை அரைப்பலம், தகடு ஓலைக்கனம், திரட்சியான குழல், புண்ணில் விடுவது.

16. சலாகை.—4 அல்லது 5 அங்குலம், நிறை 12 கழஞ்சு, புரையோடிய புண்களின் நிலையை யறிதற்கு உபயோகப்படுவது.

17. வட்டகை.—ஓர் ஆயுதம்.

18. பஞ்சமுகம்.—ஓர் ஆயுதம்.

19. செப்புச் சிலாகை.—ஓர் ஆயுதம்.

20. கொம்பு.—10 அங்குலம் நீளம், காளை மாட்டுக் கொம்பிற்கு அடிப்பாகத்தில் பித்தளையினால் ஆன பூண்போன்றது. அதாவது வாழை யின் குருத்துபோன்ற பூண் இரண்டங்குலம். குருதி கட்டப்பட்டிருக்கும் சரீர வீக்கம், கட்டி இவைகளைக் கீறி இரத்தத்தைக் கொம்பு வைத்து வாயினால் உறிஞ்சி உமிழ்தல்.

21. குடோரி.—7½ அங்குலம், நிறை கால் பலம்.

22. வெண்கலக் குழல்.—8 அங்குல நீளம், நிறை 3½ பலம்.

23. ஈயச்சலாகை.—3 அங்குல நீளம், நிறை 4 கழஞ்சு. வாதம், பிளவை, கிருமி இவற்றைக் குணப்படுத்துவது.

24. காயக்கோல்.—7 அங்குலம் நீளம், பருமன் 2 அங்குலம், நிறை 2 கழஞ்சு.

25. தண்டு சலாகை.—9 அங்குலம், நிறை ½ கழஞ்சு, ஈர்க்குக் கனம்.

26. நயனக் கத்தி.—3 அங்குலம், நிறை ஒரு பண வெடை, ஊசி போன்ற முனையுள்ளது. (முனையில் புள்ளியிலே கனம் விட்டு மற்றப் பாகங் களெல்லாம் நூலால் சுற்றப்பட்டுள்ளது.)

வர்த்தி வைத்தல்.—பவுத்திரம், சிலைப்புண் இவற்றின் துளைகளைப் பெரிதாக்கும் பொருட்டும், கெட்ட தசைகளையறுத்து வெளிப்படுத்தும் பொருட்டும், பெரும்பாலும் மருந்துப்பொருள்களைக் கொண்டு செய்த திரிகளை உபயோகிக்கப்படும். இத் திரிகள் புண்களின் வன்மைக்குத் தக்க வாறு பெரிதாகவும் சிறியதாகவும் அமைக்கப்படும். விரணங்கள் அன்றி, எருவாய், மூக்கு, செவி இவ்விடங்களிலும் வர்த்தி வைக்கப்படும். கீழ்வாயில் வைக்கும் வர்த்தியானது மலத்தை வெளிப்படுத்தும் பொருட்டாவது குருதிக் கழிச்சல், மூலம் இப்பிணிகளில் வெளிப்படுங் குருதியை நிறுத்தும் பொருட்டாவது உபயோகிப்பதுண்டு.

மலத்தை வெளிப்படுத்தும் வர்த்தியானது இந்துப்பும், தேனும் சேர்த் துச் செய்யப்படும்.

குருதியை நிறுத்தும் வர்த்தியானது துவர்ப்புப் பொருள்களுடன் அபின் சேர்த்துச் செய்யப்படும்.

ஊதல்.—சிறு துவாரத்தை உடைய குழாய்களின் வாயிலாகப் பொடி, மூலிகைச்சாறு இவற்றை விரணங்கட்கும், மூக்கு, காதுகளிலும் செலுத்து தல்.

பீச்சல்.—பீச்சுக் கருவியினால் நீர்களைப் புண்களில் பீச்சிக் கழுவும் முறை.—இது வன்றி வேறு காரணங்களை நோக்கியும் நீரை நுண்ணிய துளிகளாக உடம்பினுள் செலுத்தும் முறை பீச்சு எனப்படும்.

உறிஞ்சல்.—உடம்பில் எப்பாகத்தினின்றும் நீர், சீழ், வேறு பொருள் கள் உடலினுட் சென்றிருக்கையில் அவற்றை உறிஞ்சி வாங்கும் முறை.

**கொம்பு கட்டல்.**—உடல் உறுப்புகள் தன்னியற்கை யமைப்பினின்றும் விலகிவிடுங்கால் அவைகளைச் சரிவர அமைத்துப் பொருத்தமுள்ள கொம்பு களால் கட்டி அவை மறுபடியும் விலகாவண்ணம் பரிகரிக்கும் முறை யையே கொம்பு கட்டல் என்ப. பிசகிய அல்லது ஒடிந்த உறுப்பு களின் தன்மைக்கு ஏற்ப இக்கொம்புகளின் அமைப்பும் வெவ்வேறாகும்.

**முறிச்சல்.**—எலும்புகள் ஒடிந்தபின் கோணலாகவும் அல்லது அவற் றின் அமைப்புக்கு விகாரமாகப் பொருந்திருயிப்பின், அவற்றைச் சரிவர அமைக்கும் முறையில் முறிச்சல் பிரயோகம் கையாளப்படும்.

**தொக்கணம்.**—இதுவே மர்த்தனம் எனப்படும். வளியால் உண்டாகக் கூடிய நோய்கள் எல்லாவற்றையும் நீக்குவதற்கு இது பயன்படும். இதன் செய்முறை ஒன்பது வகைப்படும். அவை : 1. தட்டல், 2. இறுக்கல், 3 பிடித்தல், 4. முறுக்கல், 5. கைகட்டல், 6. அழுத்தல், 7. இழுத்தல், 8. மல்லாத்துதல், 9. அசைத்தல் என்பவையாம். இவ் வுடலினுள்ள நாடிகள் மூவகையென அறிந்து கொள்ளல்வேண்டும்.

கணையெலும்பு, முதுகெலும்பு, பழுவின் விலாவெலும்பு, கங்காளம் எலும்பு ஆகிய தோலோடு அணைந்த எலும்புகள் ஐந்து வகைப்படும். இவ்வைந்தில் நாடி, மயிர், தசை மெய்யினுள்ளன. இவைகள் அமைந்த உடலில் வாதம் மிஞ்சும். அதனால் அனலாகிய பித்தம் மிகும். அத னால் ஐயமும் உண்டாகும். ஆதலால் பத்து வகையான வாய்களும், நாடி பத்தும் அமைவனவாம். இவற்றை ஒழுங்குபடுத்திக் கொள்பவர் பதினாறு வயதுடைய குமரனைப் போல் காணப்படுவர்.

உடம்பில் பரிசித்து வரும் காற்றினால் உண்டாகின்ற நோய்க்குப் பிடித் தற்றொழிலும் மருந்து போன்று கருதி மன்னர் யாவரும் வழங்கி வந்த னர். அதனால் வறிதே பிடித்தலின்றித் தைலத்தைக் கொண்டு பிடித்த லும் செய்வதுண்டு. இங்ஙனம் செய்திடில் உடலுறுப்புகள் முறுக்கேறி உரம் பெறும்.

இப்பரிகாரம் வாதப் பிணிகளையெல்லாங் கெடுத்து வாதப் பிணியினால் எழுந்திருக்கமாட்டாத நொண்டிபோல்வானையும் எழுந்து நடக்கச் செய்யும்.

நோய்களின் சிறப்புப்பற்றி நாடித் தேர்வுயொன்றைக் கொண்டே பிணிகளையறிந்து பரிகரிக்கும் திறமையுள்ள ஒரு மருத்துவன் உடல் வன் மையுள்ள மல்லர்களுடைய உதவியால் தொக்கணத்தைச் சரிவர நடத்தி வாத நோய்களையே யன்றி, பித்த, ஐயநோய்களையும் அகற்றுவான் என் பதாம்.

இத் தொக்கணத்தின் ஒன்பது வகையையும் கீழே கூறப்படும் :—

**(1) தட்டுதல்.**—இதனைக் குத்துதல் என்பர். இம் முறையை உடம் பின் எல்லாப் பாகத்திலும் செய்யலாம். இதனை மூன்று வகையாகச் செய்யலாம். அது மந்தம், மத்திமம், சண்டம் எனப்படும். ஆயினும்

இதனைத் திங்கட்கொரு முறை செய்வதே சிறப்புடையது. தட்டுதலை நிற்க வைத்தும், நடக்கவைத்தும், குந்தவைத்தும், மல்லாந்து படுக்கவைத்தும், ஒரு பக்கம் சரிவாகப் படுக்கவைத்தும் செய்யலாம்.

(2) **இறுக்கல்.**—இதனை முற்கூறிய நிலைகளில் நடத்தலைத் தவிர்த்து மற்ற நான்கு நிலைகளினும் செய்யலாம். நீண்ட எலும்புகள் பொருந்திய உறுப்புகளை இறுக்கலாகாது.

(3) **பிடித்தல்.**—தைலம் தடவியாவது, தடவாமலாவது பிடிக்கலாம். தட்டுதற்குரிய ஐந்துவித செயல்களினும் செய்யலாம். இது வாத நோய்க்குப் பொருந்து மெனினும் சிறப்பாகப் பாரிசவாயு, தனுர்வாதம் இவைகட்குப் பொருந்தும்.

(4) **முறுக்கல்.**—முற்கூறிய 5 நிலைகளுள் படுக்கும்போதும் நடக்கும் போதும் செய்யலாகாது. எலும்புகள் பொருந்திய இடங்களினும் செய்ய வொண்ணாது. நோயினருக்கு விருப்பமில்லாமல் செய்யலாகாது. முகமன் வார்த்தைகளைக் கூறித் தைலத்தைத் தடவி முறுக்கினும் குணமடையாது.

(5) **கைகட்டல்.**—நிற்கும்போதும் குந்தியிருக்கும்போதும் மல்லாந்து படுக்கும்போதும், ஒருபக்கம் சரிந்து படுக்கும்போதும் கைகட்டலைச் செய்ய லாம். நடக்கும்போது செய்யலாகாது. அவ்வாறு செய்யின் பழு எலும்பு கள் முறிந்துவிடும். உட்கார்ந்திருக்கையில் செய்வதே மிகவும் சிறப்புடை யது. தைலங்களைத் தேய்த்துக் கட்டுதலைச் செய்தால் நற்பலனைத் தரும். கால்களை முடக்கி வைத்திருக்கும் வாதநோய்களெல்லாம் இதனால் குண மாகும்.

(6) **அழுத்தல்.**—நிற்கும்போதும் குந்தியிருக்கும்போதும் அழுத்து தலைச் செய்யலாம். கணைக்கால், விலாப்பக்கம், தலை இவ்விடங்களில் அழுத்தலாகாது. இடுப்பில் மிகவும் நன்றாய் அழுத்தலாம். இப்பரிகாரம் உள்வீச்சு, புறவீச்சு, பக்க இசிவு முதலிய நோய்க்குரியது.

(7) **இழுத்தல் அல்லது உருவுதல்.**—இதைத் தைலத்தைப் பூசியே செய்யவேண்டும். மல்லாந்து படுத்திருக்கும் நிலையிலும் உட்கார்ந்திருக் கும் நிலையிலும் இதனைச் செய்யலாகாது. எலும்புகள் நன்றாய்த் தெரியு மிடங்களிலும், தலையிலும், உருவும்போது மிகவும் மந்தமாகவே செய்ய வேண்டும். இதனால் நரம்பில் ஊறி வருத்துகின்ற வாயுக்கள், பிடிப்பு கள், சுளுக்குகள் குணமாகும்.

(8) **மல்லாத்துதல்.**—இது உட்கார்ந்திருக்கும்போதே செய்தற்குரித்து, இதை மந்தம், மத்திமம், சண்டம் எனக் கூறும் அளவில் செய்தல் வேண்டும். இங்கு உடம்பை நன்றாய் வளைக்கும்போது முற்புறமாகவும் பிற்புறமாகவும் கால்கள் செவியில் படுமாறு செய்யவேண்டும். இதனால் ஐயந் தன்னிலைப்படும். தூல நோயும் மலட்டு நோயும் போய்விடும்.

(9) **அசைத்தல்.**—இதை முன் கூறிய ஐந்து நிலைகளினும் செய்ய லாம். ஆனால் நடக்கும்போது செய்யலாகாது. மந்தம், மத்திமம், சண் டம் எனக் கூறப்படும் வகையில் செய்யலாம். இது தைலத்துடனும், தைல மில்லாமலும் செய்யப்படும். இதனால் உடற்கடுப்பு, திமிர் ஆகியவை குண மாகும்.

இத் தொக்கணத்தின் பண்பை அடியிற்குறிப்பிட்ட பொருட் பண்பு நூலின் செய்யுளாலறிக.

" தொக்கணத்தி ஞலிரத்தந் தோல் ஊ ணிவைகட்கு
மிக்கு சவுக்கியஞ்ச மீரனும்போ—மெய்க்கதிக
புட்டி யுறக்கம் புணர்ச்சி யிவைகதிக்கும்
பட்ட அலேச்சலறும் பார். " (சமீரம்—வாயு.)

இப் பரிகார முறை தென்ஞட்டிற்கே சிறந்ததென்பதை அந்நாட்டின் மக்கட்கு வாத நோய்வரின் உள்மருந்தின்றி, தொக்கணத்தையே பெரிதாககொண்டு, அப்பரிகாரத்திஞலேயே நோய்கள் நீங்குகின்றன என்பது தமிழ் மருத்துவப் பனுவலாகிய "தேரன் தருவில்" விளக்கமாகக் கூறப் பட்டிருக்கின்றதை அடியிற் காண்க. தலே முழுகும்போது எண்ணெயைக் கொண்டு தொக்கணம் செய்து முழுகுதலே தென்ஞட்டினர் வழக்கம். பக்கவாதம், முடக்குவாத மிவைகள் மிக்க நாளாகின் மருந்தால் நீங்குவதரிது ; தொக்கணத்தாற்றீரும்.

### மர்த்தனம்—தரு.

மர்த்தன மாகிய தொக்கணத் தின்செயல் வகுப்பேனே—சதா
நித்தமும் வாதம் பிணித்த பிணிப்பைச் செகுப்பேனே
மல்லகரான பிடகர்கை யென்கிற வாளாலே—பிணி
வல்லியை மெய்யினிற் சேதிப்பராந் திறமை வாளாலே
தட்ட லிறுக்கல் பிடித்தல் முறுக்கல்கை தைவந்து—கரங்
கட்ட லழுத்த லிழுத்தல் மலாத்துதல் கைவந்து
அசைத்தலிவ் வொன்பது மத்தனத்தின்திற மாஞலும்—இதில்
இசைத்த குணங்களேச் சொல்லப்போகு மோவடி யேஞலும்
தட்டுதலென்பதுங் குத்துதலென்பதுந் தாஞென்றே—இந்தச்
சட்டக நாடிகள் மூன்று மறிவது தானென்றே
கணேயுந் தனுவும் பழுவின் விலாவுங் கங்காளமும்—தோலோ
டணேயு மெலும்பு களஞ்சு மஃதடையாளமும்
அஞ்சிலு நாடி மயிர்தசை மெய்யக மாமெய்யை—வாத
மிஞ்சிய ஞற்றிரள் வீசி யெழும்பிடு மேலேயை
வாயுபத் துங்கர நாடிபத் துங்கைசெய் வாரியாரே—யவர்
ஆயுபத் தும்மிரு மூன்று முடையவ ராவாரே
ஊராம் பவனி யிளேப்புக்கு மிம்மருந் தொன்றென்று—மன்னர்
ஆரும் பரவவ ழங்குகின் றூரத ஞலின்று
தயிலத்தைக் கொண்டுமல் லாமனுஞ் செய்வர்தரமாக—இரு
செயலுக்கு முன்சொன்ன வொன்பது மேதொழில் நீதேக
கையறி மல்லக ரிப்படி செய்திடிற் காயத்தில்—முடம்
நைய வவங்கமு ளங்களுண் டென்னு மஞேர்யத்தில்
அண்டிய வாத முதற்பிணி யைக்கெடுத் தாதாரம்—படு
நொண்டியை யுந்தள்ள லாலிது நீதத்து சேதாரம்
ஒன்பது வர்க்கமு மோதுகி றேஞெவ் வொன்ரு—அதன்
முன்பது தட்டல் வினவுதி நீமுறை நன்ருக.

### 1. தட்டல்.

நித்திய முஞ்செய லாகுமிக் குத்துத னீதத்தில்—சண்ட
மத்திம மந்தமிம் மூன்று முதலொரு மாதத்தில்
இடையட்ச மீறெப்பொ ழுதுமாமித் தட்டலின்சீரே—நிற்றல்
நடைகுத்தல் கிடைசாய் வெனுமஞ்ச நவில்வாரே
தட்ட லெனுங்குத்தல் கங்காள மாதினு வெங்கெங்கும்—சுழி
தொட்டமுந் நாடி யடங்கச்செய் வாதத் துடிமங்கும்.

### 2. இறுக்கல்.

இறுக்க லெப்போது மியங்குத லிற்செய லின்றுதே—அவை
மறுக்க வொண்ணுத முழுவெலும் பிற்செய்து மன்றுதே
தயிலத்து டன்செய்த லண்டமுரண்டு தசவாதை—கெட்டுச்
சயிலத்தை நேரென வாக்கை யுரம்பெறு தலபாதை
அல்லாம லுமுடற் பங்கமு நீங்கு மதுபோக—வெண்ணெய்
அல்லாம லுஞ்செயிற் காணலா மெய்யி லஞ்ரேக.

### 3. பிடித்தல்.

பிடித்தலி யங்கும மைதியி னுந்தகுந் பிந்தாதே—எண்ணெ
யுடுத்தது செய்யிற் றசவளி யூனுட லுந்தாதே
வேற்றது செய்யினுஞ் சூசிகை பாரிசை விட்டோடும்—புலி
போற்றறு வாயுவு மற்றது மேனலிப் பொட்டோடும்
பிடித்த பிடிமல் லக்கரத் தில்வெகு பேதங்கள்—வகை
படித்தவக் காத்திரர்க் கேதெரி யுமுதற் பாகங்கள்
சோதனை யாவது கைப்பிடி யேயது சொல்லாரே—பல
வாதனை யுந்தெறு மல்லக மல்லரில் வல்லாரே.

### 4. முறுக்கல்.

முறுக்கல் கிடத்த லியங்க லிரண்டினு மூட்டாதே—யவர்
வெறுக்க வரிற்பல நோயுள தாயினு மீட்டாதே
நோயத்தி யற்றுவை யாகின் மருந்தின நில்லாதே—முக
மாயத்தி லுங்கணை யாகு மெலும்பொடு மல்லாதே
பழுவை யடைந்த விலாவெனு மத்தியைப் பற்றுதே—அது
வழுவு முடம்பிற் பிணியெனுஞ் சாகரம் வற்றுதே.

### 5. கட்டல்.

கட்டலி ன்றகரங் கட்டும் பவனங்கள் கண்டாயே—கையைத்
தொட்டு நடத்தலிற் செய்யிற் பழுவிறுந் துண்டாயே
எண்ணெயிற் செய்யினுங் குந்துத லேதிட மெக்காலும்—தனு
நண்ணத் தநுவைப் பந்திக்கப் பிணிக ளொக்காலும்
பாரிச வாயு வெனும்பிணி யைத்தெறும் பாசத்தால்—காலை
யாரு தலவளி யத்தங் கெடுக்கு மாவேசத்தால்.

### 6. அழுத்தல்.

*அழுத்த னிற்ற லிருத்தற கன்றிமற் றென்றுக் காகாதே—கணை*
*பழத்தனு வான களேபரத் திற்செய்யப் போகாதோ*
*வளிக்கண மாயு மிடும்புர மாமிது மாறுதே—புறம்*
*நெளிக்க வரும்பங்க முங்கெடு மற்றது நீறுதே.*

### 7. இழுத்தல்.

*இழுத்தல் கிடத்த லிருத்த லிரண்டிற்கு மேராமே—என்பில்*
*முழுத்தது வண்ணுகங் கானமந் தக்கதி சீராமே*
*உருவுத லென்பது மித்தோழி லேநரம் பூறுகி—மனம்*
*வெருவுறு மூன வினைகளை மெய்யடு வேறுகி*
*வளக்குறு மெண்ணெயி லேயிது செயவது வல்லாண்மை—உடற்*
*களக்கனூர் போக்கிச் சுளுக்கென வாவதித் தொல்லாண்மை.*

### 8. மல்லாத்தல்.

*மல்லாத்து தல்செயிற் கங்காள மொன்றதால் வாங்காதே—வதி*
*யெல்லாத் திலுமுத் தமமேயி ருத்தல்வதி யேங்காதே*
*ஆகிலு மந்த மிடைசண்ட மென்ப தடைவாக—லகு*
*வேகமில் லாமல் மூன்று வரினு மிடைவாக*
*விந்நிலை நாலினில் மண்டில மாவளை வில்லாக—மறை*
*சொன்ன செவியள வாக வுடல்வளை சூலேக*
*வாதபித் தங்கப மூன்றுந் தமநிலை வாஞ்சிக்கச்—செயு*
*மாதார மானவு யிர்நிலை நித்திய மாஞ்சிக்க*
*வந்திமை யான மலட்டையு நீக்கிடு மானூர்க்கு—அவர்*
*தொந்தி மலட்டுக் குடலைத் திருத்திடுஞ் சூலார்க்கு*

### 9. அசைத்தல்.

*அசைத்த லிலக்கண மெத்தவுண் டப்படி யார்செய்வார்—சற்றே*
*விசைத்த வராயிடி லாரிப் படிமிசை யாருய்வார்*
*நடத்தலொன் றின்றிய நாலு விதிகளு நன்றுமே—செயுந்*
*திடத்துட னேயது செய்யினும் வன்மைகள் சென்றுமே*
*கங்காள மாதி யெலும்புக ளைந்துங் கருவாகும்—தொனி*
*யுங்கார மீற மூவேக முஞ்செய்வ துருவாகும்.*
*எண்ணெயு மெணணெயை யின்றியு மத்தன மீதென்னத் [தொழிற்*
*பண்ணையி லேமல்ல சாம்பிர தாயப் படிதுன்ன.*

**கட்டுதல்.**—இலைகளையாவது, பட்டைகளையாவது, சில பறவைகளையாவது நைய இடித்தோ, அரைத்தோ, வதக்கியோ, புளித்த நீர் முதலியவற்றில் வேகவைத்தோ கட்டுதல் ஆம். இவை யல்லாமல் பாஷாண மெழுகு முதலியவற்றைக் கட்டுதலுமுண்டு.

**சுட்டிகை.**—இதைச சிட்டிகை யென்றும், இராட்சச சிகிச்சை என்றுஞ் சொல்லலாம். சுட்டிகை நோய்களைப் போக்குவதற்கு ஆதாரமாயுள்ள மருந்து முறைகளிலொனறு. (கெட்டுபோன பொருள்களை நெருப்பிலிட்டு வாட்டி அவற்றை எவ்வாறு பதப்படுததுகின்றேமோ, அவ்வாறே மிகுதியும் நலிக்கக்கூடிய சேத்துமம் முதலிய பிணிகளைச் சுட்டிகையினுல் வாட்டி, உடலை வன்மை பெறச் செய்யலாம்.)

**அவை.**—உலோகம், மரம், மண், கல், காந்தி. உலோகம் என்பதில் பஞ்சலோகங்களும் அடங்கும். இவற்றுளொன்றிறுற் செய்யப்பட்ட கம்பி போன்ற கருவிகளால் சுட்டிகை இடுவது வழக்கம்.

**அவ்வாறு சுட்டிகை இடுவதற்கு எற்ற இடங்களாவன.**—உச்சி, நெற்றி, முதுகு, நெஞ்சு, கால்கள்.

**உலோகங்களிறுல் செய்யும் சுட்டிகைகள்.**—முத்திரை போடுவதுபோன்ற முறையிலமையும். அவைகளின் அமைப்பை அடியிற்காண்க.

மரச்சுட்டிகைகளுள், பெரும்பாலும் வேர்களே பயன்பட்டு வருகின்றன. அவற்றுள் சிறப்பாக மஞ்சள் கொம்பே பயன்படுத்தப்படுகின்றது. மஞ்சள் கொம்புக்குச் சூடேற்றி, சற்று ஆறறி, சுடவேண்டிய இடத்தின்மீது வைத்து விடவேண்டும்.

| மஞ்சள் கொம்பால் சுடக்கூடிய இடங்கள். | நீங்கும் நோய்கள். |
|---|---|
| 1. நாசியின அடித்தண்டு .. | .. சந்நிவாத நோய். |
| 2. மேலுதட்டின் மேற்பள்ளம் | .. பற்கிட்டும் சந்நி நோய். |
| 3. அதரம் (கீழுதடு) .. .. | .. கப நோய். |
| 4. புருவங்களின் மேற்புறம் .. | .. விரண சிலேத்தும நோய்கள். |
| 5. புறங்கால் .. .. .. | .. அண்டவாயு. |
| 6. ஆண் குறியின் மேல்பாகம் | .. விதை வீக்கம். |
| 7. மார்பின் கீழ் .. .. | .. சூலை, குன்மம். |
| 8. காற்பரடு .. .. .. | .. பாண்டு நோய்கள். |

குறிப்பு.—உலோகங்களைக் கொண்டிடும் சுட்டிகை, நோயின் குற்றங்கள் அதிக அளவு பெருகியிருப்பின் கையாள வேண்டும்.

மேற்கூறிய இடங்களல்லாமல், இன்னும் வேறு இடங்களிலும் மரக் கொம்பிறுல் சுடலாம். அவை கைதேர்ந்த மருத்துவனுல் நோய் மாற்றங் கட்குத் தக்கவாறு செய்யப்படும்.

மண் சுட்டிகை.—இஃது எண்ணெய் பழகிய மட்குடுவையை நெருப்பி லிட்டுச் சூடாக்கித் துணியில் பிடித்துக்கொண்டு, உச்சி, நெற்றி, முதுகு, மார்பு, கால், இவற்றின்மேல் நொச்சியிலையைப் பரப்பி அதன்மேல் அக் குடுவையை வைக்க, சந்நி, விடசுரம், பிடிப்பு, தாகம், வலி, ஒற்றைத் தலைவலி ஆகிய இவைகள் நீங்கும்.

கால் சுட்டிகை.—இது வெப்ப மிகுந்த காற்றை உடலிற்ருக்கும்படி செய்யு முறை. இவ்வாறு செய்வதால் உடலில் வியர்வை பெருகும். அதன் வாயிலாக நோய்களும் குணப்படும்.

காந்தி சுட்டிகை.—வெயிலிற் காய்தலைக் காந்தி என்று கூறுவர். இது வாதத்துடனுகிய சந்நி நோய்களுக்குச் சிறப்பானதென்று கூறப்பட்டிருக்கிறது. தலையைத் தவிர மற்றைய உறுப்புகளை வெயிலில் காயவிடலாம்.

காலை வெயிலாகாது.—"காலை இளங்கதிர் தீது" என்று தேரையர் கூறிப்போந்தனர். இக்கருத்தைக் கீழ் வரும் பொருட் பண்பு நூலின் செய்யுளாலறிக.

"காலைவெயிற் காய்ந்தார்க்குக் காணுப் பிணியனைத்தும்
மாலைவெயிற் போலப் பரவுங்காண்—மாலைவெயிற்
காய்ந்தார்க் குறுபிணிமுற் காசறுமி லக்கணநூ
லாய்ந்தார்க் குறுவழுச்சொ லாம்."

சுட்டிகை.

கலி விருத்தம்.

திட்டிகை யெனவுடல் தேக நோய்களை
நெட்டிகை மையரென நீங்கவே யென
லட்டிகை யெனப்பிணி யணிந்துளா கச்செய்
சுட்டிகைச் சிகிச்சையைச் சொல்லு வாமரோ.

கல்யாண தரு.

மோகனம்.

சுட்டிகை யின்குண மெடுத்து—நன்ருயச்
சொல்லுகிறேன் முறை தொடுத்து
கெட்ட பதார்த்தத்தை நெருப்பில்—வாட்டக்
கண்ணிய மாகுமே பொருபபில்
அப்படிப் போலே யிவ்வுடலை—வாட்டி
யப்பா லறிவை பிணிவிடலை
நல்ல சிட்டை யிதுபோல—இல்லை
ஞாலத்தி லேயினி மேலே
புனற்பிணி யாதுடல் சோகம்—கொண்ட
போதிது செய்யவி யூகம்
கனற்பொரு ளாலிந்த லோகம்—வேதங்
கட்ட வறிதல் விவேகம்
ஆதலி னுற்சுப மசுபம்—வினை
யானதெல் லாமது விசுபம்
செய்யுமிச் சுட்டிகை யஞ்சு—விதஞ்
செப்புகி றேனது விஞ்சு
லோக மரமண் கால்காந்தி—யிது
நோயை யடுமுப சாந்தி

அயமுத லாகிய லோகம்—பண்ண
லாகாது மிஞ்சிய வேகம
ஆயினு மிஞ்சிய போது—செய்ய
லாகுந தடுகக வொண்ணுது
உச்சிப் புருவம்வெந் கண்டம்—நுத
லோட்ட முரஙகனனந் துண்டம்
வாகு விரலத ரஙகை—யிடை
வாமம பரடடிரு கொஙகை
ஆகு மட்டாதச விடமும்—பண்ண
லாகு மதிலுறுந் திடமும்
அஞ்சு விதஙகளி லநதம்—முத
லாதி யளவுமோர் தொந்தம்
இபபடி யாகவே புரியுந்—திற
மென்ன சொல்வேனது தெரியும்
காந்தி யெனுஙகதிர் வெய்யில்—வன்னி
கடுக்கு மதுபட மெய்யில்
வாதத்துடன் சந்நி யடர்ந்து—தொடர்
வாதனே போய்விடு முடைநது
உததமாஙக மொன்று தளளி—மற்ற
உறுபபெலாங காயலா முள்ளி
காலே யிளஙகதிர் தீது—உச்சிக்
காலேக்கதிர் சாயும் போது

காற்று சுட்டிகை.

காலெனுஞ் சுட்டிகை யஙகி—யெரி
காங்கை வளிச் சுவாலேதங்கி
வீசுந்தீ காய்தலெங் கெங்கும்—பட
மேலிட்ட நோயெலாஞ் செங்கும்
வேர்வை புறப்பட்ட போதே—பிணி
விட்ட தெனறே யறிமீதே.

மண் சுட்டிகை.

மண்சுட்டி கையெனல் குடுவை—எண்ணெய்
வாய்ந்ததாகக் கொணடது வடுவை
அங்கிச் சூட்டையதற் கேறறிக—காலே
யாற்பற்றிக கொணடனர் மாற்றி
பக்குவ மாயதை நொச்சி—மிசை
பையப்பைய்ய வைபபா யுச்சி
நெற்றி முதுகுரம் பாதம்—வைக்க
நீங்கும் பிணியின் விரோதம்
சன்னி விடசுரம் பிடிப்பு—வலி
தாக மொருதலே யிடிப்பு
கம்ப மிலாத பன்னோயு—மிதைக்
காணுமுன் னேகெட்டு மாயும்.

### மரச் சுட்டிகை.

மரச்சுட்டி கைதனை நம்பு—உருண்
மையாகிய மஞ்சட் கொம்பு
சூடத னுக்குள தாக்கி—யந்தத்
சூட்ட தனைச்சில போக்கி
நாசி யடித்தண்டு மேலே—வைக்க
நாசமாஞ் சந்நிநாய் போல
ஓட்டத்தின் மேறபள்ளந் தன்னி—லிட
வோடும்பல் கிட்டின சன்னி
அதரத் தடியினி லிடவே—தனை
யையைக் கொல்லும் பயப்படவே
புருவத்தின் மேற்புறங் காட்ட—வுரப்
புண்ணைப் பறப் படுமாட்ட
அடியின் புறத்தினிற் சுடவே—கப
அண்ட வலியை யதடவே
உருவி லேயிடு பதைக்க—விரை
யூடண்ட வாயுவை வதைக்க
கொங்கை யடியினி லமைக்கச்—சூலைக்
குன்மங்களை யெல்லாங் குமைக்கச்
பறட்டினி லேநடு வைக்க—விட
பாண்டுவை யைக்கொல்லுந் தைக்க
பின்னு மதுமெயத் தானம்—புகல்
பேதங்க டன்னினி தானம்
மேவப் பொருத்தி வியாதி—தனை
வேரறக் கண்டிடு சேர்தி.

### லோகம்.

அப்புற மாகிய லோகம்—அய
மானதிற் பேதம நேகம்
ஊசி யெனச்சிறு கம்பி—தனி
லூட்டி யனலற நம்பி
மண்ணுக்குச் சொல்லிய தானம்—பினும்
வண்மை யிடத்திட வூனம்
நீங்கு மிதுநலி மிஞ்சி—விடம்
நேரிட்ட போதுசெய் விஞ்சி
இந்த சிகிச்சைக்கு மேலே—யொன்று
மில்லை யிதைப்புரி மேலே
லோகத்தி லேயிந்த லோகச்—சுடல்
நோக்கு மிருகங்கட் காக
நாளு மருவு மிதன்றி—யலே
நாடு மருக்கத்தை வென்றி

யாகமண் சுட்டிகை யென்ன—புரி
யண்ணும் பிணியறு முன்னம்
மேதகு மிந்தநன் முறையைச்—செயில்
வீக்கம் பிணிமணக் குறையே.

**புகை.**

1. பிடித்தல் அல்லது குடித்தல்.
2. புகையைப் புண் முதலியவற்றில் தாக்கும்படி செய்தல்.
3. நாற்றத்தை யகற்றும் வண்ணம் மணப்புகை போடல்.

புகை பிடித்தல் அல்லது குடித்தல்.—புகை பிடிப்பதற்குச் சுங்கான் இரண்டங்குலம் அல்லது மூன்றங்குலம் நீளமுள்ளது. ஒரு பயறளவு தொளையுடையது. மற்றைய பக்கம் ஒரு விரல் போகும்படியாக இருக்கும். இடையிடையே மூன்றல்லது நான்கறைகள் அமைக்கப்பட்டிருக்கும். இதன் படம்.

இப்புகையை மூக்கின் வழியாகவும், வாயின் வழியாகவும் பிடிக்கலாம் முற்கூறிய முறையால் முக்கில் வரக்கூடிய பீநச நோய்கள் குணமாகும். வாயில் பிடிப்பதனுல் தொண்டைநோய், சயித்தியம் ஆகிய இவை குண மாகும். மூக்கினுல் பிடித்து வாயினுல் விடுவதுமுண்டு. ஆனுல் வாயினுல் பிடித்ததை மூக்கினுல் திரும்ப விடுவது தகாது. ஏனெனில் அவ்வாறு செய்தல் சிரநோய்களை விளைவிக்கும். சுவாச நோய்கள் முதலியவற்றிற்கு மேற்கூறியவாறு புகை பிடிப்பதுடன் சில இலைகளினுல் குழாய்போலச் செய்யப்பட்ட சுருட்டுகளைப் பயன்படுத்துவர்.

சுருட்டு பிடிக்கக்கூடாத நிலைமைகள்.—கண்ணோய், சிரநோய், பாண்டு, உதர நோய், மேக நோய் ஆகிய இந் நோய்களில் புகை பிடிக்கக்கூடாது.

**வழக்கத்திலுள்ள சில புகைகள் ஆவன.**

| நோய்கள். | புகைகள். |
|---|---|
| 1. சுவாச நோய் .. .. | ஊமத்தைப்பூப் புகை. |
| 2. மூர்ச்சை .. .. .. | அகத்தியர் குழம்புப் புகை. |
| 3. குழந்தைகளின் இசிவு .. | குதிரை குளம்புப் புகை. |
| 4. நீர்ப்பீநசம் அல்லது சல தோடம். | சுக்குத்திரிப் புகை அல்லது மஞ்சட் கொம்புப் புகை. |
| 5. தலைபாரம் .. .. .. | சாம்பிராணிப் புகை. |
| 6. நாசியடைப்பு .. .. | அகத்தியர் குழம்புப் புகை. |
| 7. பற்புழு .. .. .. | கண்டங் கத்திரி விதைப் புகை. |
| 8. அழி வீரணங்கள் .. .. | விரண தூபம். |

குறிப்பு.—மூலம், பகந்தரம், யோனிப்புற்று ஆகிய இந்த நோய்களில் இரசம் சேர்ந்த புகைகளைப் பயன்படுத்தவேண்டும். இவற்றின் முறைகளை "அகத்தியர் இரண வைத்தியம்", "சகல விரணங்கட்கும் புகை பதினறு"

என்னும் தலைப்பின்கீழ்க் காணவும். ஈதன்றி, நோய்கட்குப் பரிகாரம் கூறுமிடத்து, புகைப் பரிகாரத்திற்குரிய நோய்களின் கீழ் அதற்குரிய புகையைக் கூறப்படும்.

## வேது செய்முறை.

*வேது.*—உடலினின்றும் வியர்வையைப் பெருகும்படி செய்வதற்கு ஏற்ற முறைகளில் வேது பிடித்தலு மொன்றாகும். இம் முறையைப் பெரும் பாலும் சோகைப் பிணிகளிலும் ஒரு பக்க வீக்கத்திலும் கையாளலாம்.

சோபை, யானைக்கால், தலை நீர்க்கோவை ஆகிய பிணிகளில் வேதுவை உபயோகித்து நீரை யகற்றுவது வழக்கம். இது நீரை வெளிப்படுத்துவ தன்றி அவ்வப் பாகங்களிலிருக்கும், மலத்துளைகளைச் சுத்தி செய்து மலங் களையகற்றி அவற்றிற்கு ஓர் உற்சாகத்தையும் இலேசத்துவ உணர்ச்சியையும் அளிக்கும்.

## வேது செய்முறை பலவகைப்படும்.

1. நீரைச் சில மூலிகைகளுடன் சேர்த்துக் கொதிக்கவைத்து அதனின் றெழும் ஆவியைப் பிடித்தல்.

2. நீரினுள் சிவக்கக் காய்ச்சிய மண் (செங்கல்), உலோகம் ஆகியவற்றை போட்டு அதனின்றெழும் ஆவியைப் பிடித்தல், இதைத் தேரர் யமக வெண்பாவில் ஒற்றடத்தின் கீழ்க் கூறப்பட்ட செய்யுளால் அறியலாம்.

வேது.—"அரிசனை நொச்சிவெடி யட்டறல்செங் கல்லே."

பற்று.—"அரிசனை நொச்சிவசம் பற்கை—அரிசனை."

ஒற்றடம்.—"எண்ணெய்க் கடமெ யிடிகை யெருக்கிலைநோய் எண்ணெய்க் கடமெய்யை யெய்."

அரிசனை.—மஞ்சட் பொடி புகையும்.

நொச்சி.—நொச்சியிலைப் பொடியைச் சேர்த்துக் காய்ச்சின வெந்நீரின் ஆவியும்.

வெடி.—சாம்பிராணிப் புகையும்.

அட்டறல்.—காய்ச்சின வெந்நீரின் ஆவியும்.

செங்கல்லே.—சுட்ட செங்கல்லை வெந்நீரில் போடக் கிளம்பும் ஆவியும் ஆகிய இவைகளெல்லாம் வேது பிடிப்பதற்கேற்ற கருவிகளாம்.

நீர்க் கோவையில் எலுமிச்சம் பழ விதையை நீரில் போட்டுச் கொதிக்க வைத்து அதினின்றெழும் ஆவியைப் பிடிப்பதும், கொதிக்கும் நீரில் மஞ்சட் பொடியைத் தூவிப் பிடிப்பதும் வழக்கமாம்.

உடல் வலி, திரள்வாயு ஆகிய இவற்றிற்குக் கொதிக்கும் நீரை ஒரு வாயகன்ற பாத்திரத்திலூற்றி, அதில் உப்புப் பொடியை நிரம்பப்போட்டு அதினின்றெழும் ஆவியை முகத்தில் படுமாறு செய்யலாம். இப்படிச் செய்வதால் வியர்வை யுண்டாகி வேதனை தணியும். இதைக் குறித்துத் தேரன் தருவில்,

"நீர்முகத்த முந்திவலி யாலுளைந்து டம்புதளர்
வாதனைக்க டங்கவடு வேதுவைப்ப மூங்கலற
நிதமட்ட புனலுட்ட ணமிருக்க லவணத்தை
யதிலிட்டு முகமிட்டு டனிருக்க வேர்த்திடும்
மேனியிற்பொ ருந்துநளிர் வாதமிக்க வங்கமுனை
வாகுமிக்க ணந்தணலி லேயெரிக்க வெம்புமுடல்
வியர்வுற்று நலியற்று லகுமிக்க மிதுநிச்சய
நிருமித்த பிடகர்க்க வதியிட்ட வாய்ப்பிது—புற
மெலிவுமீது பற்றுளே குமே."

என்று கூறியதனாலறிக.

ஓமம், உப்பு, சுண்ணாம்பு, பெருங்காயம், திப்பிலி இவைகளை வேண்டிய அளவு தண்ணீரில் அரைத்துப் பற்றுப்போடலாம். அவையிற்றையே கொதிக்க வைத்து அதினின்றெழும் ஆவியையும் பிடிக்கலாம். இவற்றால் வாத வுட்டணங்களாலேற்படட உடல் வலி தீரும்.

"மீறியிட்டு டம்புநலி வாதவுட்ட ணங்களற
ஓமமுப்பு டன்சுணமெய் காமன்மெய்க் கியன்றபுனல்
வெடியொக்க வரையட்ட திடுமெய்க்கு ளொருபற்று
ளுலர்வுற்று நலியற்று நலமிக்க நாட்டிடும்."

## ஒற்றடம்

### ஒற்றட மிடக்கூடிய இடங்களும் பொருள்களும்

"ஒளிவட்ட மானகவுள் செவிநாசி குக்கி
ஒடுநெற்றி வெரிந்வாகு பதமுச்சி நாபி
ஒக்க லிடுப்பரை ஒக்கல் விடுத்தெறி
ஒட்டலி ரொப்பன ஒட்டி வலித்தே
ஒதிமெய் யொப்பன ஒசிந லிப்பிணி
ஒழிய நற்றுறை ஒருவகை
ஒற்றடத்தினைப் பரப்பி ஒற்றிடப் பறக்குமே
ஒலிசுதை யடலைகொள் ஒமமிட் டிகைநெல்
ஒலிதவி டட்டறல் ஒவு சிட்டமுமே
ஒன்பது மொன்று பொருந்தத்தீட் டுந்தீப்பால்
ஒடும்பொற் பாம்ஒன் றலறிந்தங் கிடுஞ்சற்றே." (தேரன்–தரு)

"எண்ணெய்க் கடமெ யிடிகை யெருக்கிலைநோய்
எண்ணெயக் கடமெய்யை யெய்."

என்று "தேரன யமுகமும்" கூறுகின்றது.

**குறிப்பு.**—அருஞ்சொற்பொருள்—ஒளிவட்டமானகவுள்—கண்ணடி போ போலுள்ள கன்னம்; குக்கி—வயிறு; வெரிந்து—முதுகு; வாகு—தோள்; ஒக்கல்—பக்கம்; சுதை—பழஞ்சுண்ணாம்புக் காரை; அடலை—சாம்பல்; இட்டிகை—செங்கல்.

1. கம்பளித்துணி அல்லது பருத்தித் துணியைக் கொதிக்கும் வெந்நீரில் நனைத்துப் பிழிந்து வேதனையுள்ள இடங்களில் ஒற்றடமிட நீங்கும். இது வீக்கம், கட்டி இவைகட்கு நல்லது.

2. தைலங்களை நோயுள்ள இடங்களில் பூசி, நொச்சி, எருக்கு, தழுதாழை, ஆமணக்கு, துத்தி போன்ற இலைகளை ஆமணக்கு நெய்விட்டு வதக்கி ஒற்றடமிட, வாதத்தால் உண்டான வீக்கமும் வலியும் தணியும்.

3. மஞ்சள், உப்பு இவ்விரண்டையும் பொட்டணமாகக் கட்டி, கொதிக்கும் எண்ணெயில் தோய்த்துச் சற்று ஆறியபின் அடிபட்ட வீக்கங்கட்கு நோயுள்ள இடங்களில் ஒற்றடமிடலாம். இவ்வாறே எலுமிச்சம் பழத்தை இரண்டாக அரிந்து, துணித்துண்டில் முடிந்து எண்ணெயில் தோய்த்து ஒற்றடமிடலாம்.

"தேரன் தருவில்" கூறியவாறு கருங்கற் பாறைத்தூள், இருப்புக் கிட்டத் தூள், அரிசித் தவிடு, காய்ந்த சுண்ணாம்புக் காரைத்தூள், செங்கற்றூள் இவற்றில் ஒன்றை வறுத்துத் துணித்துண்டில் முடிந்து, மார்பு, தலை, கன்னம், தோள்கள், முதுகு, இடுப்பு, முழங்காள், காலடிகள் ஆகிய இவ்விடங்களில் சூடுண்டாகும்படி ஒறறடமிடலாம். இவ்வொற்றடம் உடம்மை வருத்தக்கூடிய நோய்களைப் போக்கும்.

ஈதன்றியும், முட்டைச் சாம்பல், கொள்ளுமா, ஓமம், நெல், நெருப்பிற் காய்ச்சிய எண்ணெய்க் கலம் இவைகளும் ஒற்றடமிட ஏற்ற பொருள்களேயாம்.

மேற்கூறிய இடங்களேயல்லாமல், மூக்கு, வயிறு, தொப்புள், இரண்டு விலாப்பக்கம், இடுப்பு, அரை ஆகிய இவ்விடங்களிலும் ஒற்றடமிடலாம்.

## ஒற்றடமிடக்கூடிய பொருளும் அதன் குணமும்

1. கருங்கற் பாறைத்தூள்—விட சுர சன்னி போம்.

2. அரிசித் தவிட்டுத்தூள்—சேத்தும உட்டணதாலுண்டான உடல் வலி போம்.

3. சுண்ணாம்புக் காரைத்தூள்—வாதசன்னி, சனி போம்.

4. செங்கற் பொடி—சீதள நோய் போம்.

5. முட்டைச் சாம்பல்—வாத நோய், கப நோய், பித்த சுரம், சீதள சுரம் போம்.

மேற்கூறியவற்றுள் இரும்புச் சிட்டத்தூள் ஒற்றடம் வழக்கத்திலில்லை.

கோதுமை தவிட்டொற்றடம் மார்புச்சளியைக் கரைப்பதற்கும், சீதளத்தால் உடலினுண்டாகும் வலிக்கும் நல்லது.

நொச்சி, தழுதாழை, எருக்கு, வாதநாராயண இலை—வாத நோய், கீல் வாதம், பக்க வாதங்கட்கு நலந் தரும்.

பிரமி இலை—மூட்டு வீக்கத்தைப் போக்கும்.

எருக்கிலை, நொச்சியிலை—வலிப்புக்கு நல்லது.

ஆமணக்கு விதைப் பருப்பு—விடா வயிற்று வலிக்கு நன்மை தரும்.

ஆமணக்கிலை, வெற்றிலை—பிள்ளை வயிற்றுவலியைப் போக்கும்.

எண்ணெய் ஊறிய அகல்—பல் வலி நீக்கும்.

ஓமம், செங்கற் பொடி—கை, கால் சில்லிட்ட குரக்கு வலியைப் போக்கும். மேலே கூறப்பட்ட ஒற்றடங்களெல்லாம் பழக்கத்திலுள்ளன.

**பொட் டணம்.**—இது சில மருந்துகளை துணித்துண்டில் பொட்டணமாக முடிந்து, காது, மூக்கு, எருவாய், பெண்களின் கருவாய் ஆகிய இவ்விடங் களில் வைப்பதற்குறியது.

1. காதுவலி, இரைச்சல் இவைகட்குப் பூண்டு, காயம் இவற்றை யொரு சிறு பொட்டணமாகக் கட்டி காதினுள் வைப்பதும் ஒருவகையாம்.

2. நீர்ப்பீநசத்தில் கருஞ்சீரகத்தையொரு சிறு பொட்டணமாகக் கட்டிச் சிறிது நசுக்கி முகரக் குணந்தரும்.

3. யோனியின் வங்கு வாசல் தளர்ச்சிக்குநாவல், அத்தி, கடுங்காய்த் தோல் இவற்றின் பொடிகளை யொரு சிறு துணியில் முடிந்து, கருவாயின் வழியாக உட்செலுத்துவது. இவைபோன்ற முறைகளைப் பொட்டணம் என்று கூறலாம்.

**காரம்** (க்ஷாரம்).—இது கட்டி, பிளவை, கெட்ட ஊன் வளர்ச்சியுடைய புண்கள், சிலையோடும் புண்கள் ஆகிய இவற்றில் பதனழிந்த தாதுக்களை வெளிப்படுத்துவதில் சிறப்புடையது. எவ்வாறெனின் குற்றப் படாத தாதுக்களைச் சேதஞ் செய்யாது பதனழிந்தவற்றைக் கல்லி, கரைத்துவிடுந் தன்மை இதற்கு உண்டு. சத்திரக் கருவியா லறுத்து அல்லது கீறிக் கெட்ட தசை முதலியவற்றை வெளிப்படுத்துங்கால், குற்ற மடையாத நல்ல தாதுக் களும் வெட்டுப்பட்டு வீணாக வெளிப்படுத்தப்படும். இதனால் அவ்விடத்தி லுள்ள குற்றமானது ஒரு வேலை பங்க மடையாத மற்றத் தாதுக்களையும் கெடுத்துவிடும். ஈதன்றிச் சிலைப்புண்கள், இரத்த நாளம், நரம்புகள் நிறைந்த இடங்களில் பல கிளைகளுடன் வேரூன்றியிருக்கும்போது, கத்தி முதலியவற்றால் அறுவை செய்வதனால் அவ்விடத்தில் பொருந்திய நாடி நரம்புகள் அறுபட நேரிடும். ஆகலின், கார மருந்துகளைப் பயன்படுத்தத் தீங்குகள் விளையாமல் பதனழிந்த தாதுக்கள் மட்டும் வெளிப்படும்.

**கார பரிகாரத்தில் அடங்குபவை.**—(1) காரம், (2) சீலை, (3) களிம்பு, (4) பொடி, (5) நீர், (6) களி, (7) பசை முதலிய.

காரசீலை செய்யும் முறை (**அகத்தியர் விரண வைத்தியம்**).

ஓடும் பச்சைச் சேர்வைக்க
உதித்த நீல மரிதாரம்
பாடும் வகைக்குப் பலமரைதான்
பகரும் வெட்டுப் பலமிரண்டு
நீட வரைப்ப தெள்ளெண்ணெய்
நிலைக்கத் **தண்ணீர் விட்டரைத்தே**
ஆடு மாவப் படத்தல்கு
**லரிவை சீலை தனிலூட்டே.**

ஊட்டி யெடுத்துப் புண்ணிலிட
உதிரங் கிரந்தி யுள்வீக்கம்
நாட்டம் பெரிய நாய்முள்ளு
நசுவக் கிரந்தி நருள்குன்றி
ஆட்டுங் கிரந்தி யரிகிரந்தி
ஆறுப் புண்கள் பவுத்திரமுங்
காட்டு மலரி னிளமாதே
கண்ணு மடக்குங் கண்டாயே.

| | | |
|---|---|---|
| நீலம் | .. .. | பலம் ½. |
| அரிதாரம் | .. | பலம் ½. |
| பச்சைவெட்டு | .. | பலம் ½. |

இவைகளைப் பொடித்து எண்ணெய் விட்டரைத்துப் பிறகு குளிர்ந்த நீர் விட்டு ஏழு முறை அரைத்துச் சுத்தி செய்து சிமிழிலடைத்துக்கொண்டு இரத்தக் கிரந்தி, நருள் குன்றி, கிரந்தி, அரி கிரந்தி, பவுதிரம், ஆறுப் புண்கள் இவற்றின்மேல் போட்டுவர ஆறிவிடும்.

**வேறு.**

கண்ணே துரிசோ டரிதாரங்
கதித்த சூதங் கெந்தியுடன்
நண்ணே ரிலிங்கம் வெங்காரம்
நயமாய் வகைக்குத் தான்கழஞ்சு
தண்ணேர் வெள்ளை யெருக்கம்பூச்
சாறு பலமு மொன்றாக
விண்ணே மத்தஞ் சாறூற்றி
வேண்டுஞ் சீலை யுலர்த்திடுமே.
உலர்த்தி யெடுத்துப் பின்பாக
வுள்ள ரணத்தின் மேற்போட
அலர்த்துஞ் சூலை வெடிநாச
மசுவக் கிரந்தி யளிகுட்டம்
பலத்த வேழந் தானகலும்
பருத்த பனிச்சை பவுத்திரமும்
அலர்த்த பூவின் குடிலணங்கே
ஆறு விரணம் ஆறிடுமே.

| | | |
|---|---|---|
| துருசு | .. .. .. | வராகனெடை 1¼. |
| அரிதாரம் | .. .. .. | ,, 1¼. |
| பாதரசம் | .. .. .. | ,, 1¼. |
| கந்தகம் | .. .. .. | ,, 1¼. |
| இலிங்கம் | .. .. .. | ,, 1¼. |
| வெங்காரம் | .. .. | ,, 1¼. |
| வெள்ளெருக்கம் பூச்சாறு. | | பலம் 1. |
| ஊமத்தஞ் சாறு | .. .. | ” 1. |

சரக்குகளை நன்றாய்த் தூள்செய்து, பின் இருவிதச் சாற்றில் கலந்து அரைத்து துணியில் தடவி வைத்துக்கொண்டு, ஆறாத இரணம், சூலை, வெடிப்பு கிரந்தி, குஷ்டம், இரத்தக் கிரந்தி, பவுத்திரம் முதலியவற்றிற்கு இச்சீலையைப் போட்டு வர ஆறும்.

## ஊன் பூச்சுத் தைலம்

### விருத்தம்.

சங்கெட்கோ தபமார்க்கி மூன்றுஞ் சுட்ட
  சாம்பரிடைக் கஞ்சதுபெய் தலைநீர் வாங்கிப்
பொங்கப்போ காதட்டிச் சிறுநீ ரோடே
  புலரவிட்டவ வுவரையரும் பொடிய தாக்கி
யங்கப்பா மைக்குளெழு மூனைவாளா
  லரிவானே னதையெண்ணெய் யதிற்கு ழைத்துத்
தங்கப்பூ சஃதொழியு மிஃதூன் பூச்சுத்
  தைலமென விரணமருத் துவர்க்குச் சாற்றே.

ஊதுசங்கம், எள்ளுக்காய்த்தோல், செந்நாயுருவி சமூலம் இம் மூன்றை யும் தனித்தனியே சுட்டுச் சாம்பலாக்கி வேண்டிய மட்டும் சமபாகமாக அளந்து பானையில் கொட்டி, இது கண்ட மொத்தத் தொகைக்கு நான்கு பங்கு நீர் விட்டு, மூன்று நாள் வரையில் துடுப்புக் கொண்டு, சாமத்திற்கு ஒரு முறையாகக் கலக்கிக் கொண்டேயிருந்து, நான்காவது நாளில் தலை நீர் மேலாகத் தெளிந்த நீரைச் சட்டியிலிறுத்துப் பொங்காமல் எரித்துச் சுண்டவைத்துச் சிறிது நீரிருக்கும்போது வெயிலிலுலர்த்திஞல் உப்பாகும். அந்த உப்பை வேணடுமட்டும் மெல்லிய தூளாக்கி எண்ணெயில் குழைத்து இரணங்களில் நிலைக்கும்படி பூசுவையாகில், அதில் வளரா நின்ற கெட்ட ஊன் வளர்ச்சியைக் கத்தியால் அறுக்க வேண்டுவ தென்ன ? தானே கரைவதும் அன்றி அவ் விரணங்களும் ஆறிப்போம். (தேரன் தைல வர்க்கம்).

### பச்சை எருவை.

போமே மருந்து வெள்ளையுடன்
  பொருந்துந் தாரங் காசொன்று
ஆமே துரிசு மீரிரண்டு
  அறிவாய் சுண்ணந் தானிரண்டு
தாமே சிவந்த குங்கிலியம்
  தரித்த விதுநா லுடன்கூட்டி
வாமே அரைப்பீ ரெள்ளெண்ணெய்
  மதிக்கத் தண்ணீர் தனில்கழுவே.

கழுவி எடுத்துத் துணியிலிட்டுக்
  கரையா வழிப்புன் மீதிடவே
வளமாய் வளர்ந்த சதைமுளையும்
  மாருப் புண்ணும் அழுகிரந்தி
தழும்பாம் சிங்கி திமிர்கிரந்தி
  தசமாஞ் சூலை வெடிநாசம்
பழமாஞ் செண்டு முலையாளை
  பதமாய் மாறு மிதமாவே

| | | | |
|---|---|---|---|
| வெள்ளைப்பாடாணம் | .. | வராகனெடை.— | 1 |
| அரிதாரம் .. | .. .. | ,, | 1 |
| துருசு .. | .. .. | ,, | 4 |
| கற் சுண்ணம் | .. .. | ,, | 2 |
| சிவப்புக் குங்கிலியம் | .. | ,, | 4 |

இவ் வைந்தில் வெள்ளை, துரிசு இவை தவிர மற்றவைகளை நன்றாய்ப் பொடித்து, துணியில் வடிகட்டி அரிதாரத்தைப் பொடித்துப் பிறகு வெள்ளை, துரிசு இரண்டையுஞ் சேர்த்துச் செல்லத்தக்க எண்ணெய் விட்டு நான்கு சாமமரைத்துக் குளிர்ந்த நீர் விட்டுத் தேய்த்து நீரை இறுத்துவிடவும். இவ்விதம் ஏழு முறை செய்து குப்பியில் வைக்கவும். இதனைத் துணியில் தடவிப் புண்கள் மீது போட்டுவர, சதை வளர்ச்சி, அழுகிரந்தி, ஆருத விரணங்கள், திமிர் கிரந்தி இவைகளில் வளர்ந்து வரும் ஊனைக் கரைத்து விரணத்தை யாற்றும்.

மேற்சொன்ன கலப்புக் காரமருந்துகள் அன்றி இலேசான காரங்களும் உள. அவை : 1. புல்லின் மேற்படும் பனிநீர், (2) கடலைப் புளிப்பு, (3) உழமண்ணும் சுண்ணாம்பும் சேர்ந்த கலவை. இக்கார மருந்துகளை கத்தியினு லறுத்துப் பரிகரிப்பதற்குத் தகுதியற்ற நோயினர்க்கும் கத்தியைப் பயன் படுத்தக் கூடாத சில விரணங்களுக்கும் வழங்கலாம்.

**சீலை.**—சில நஞ்சுச் சரக்குகளைத் தண்ணீரிலாவது சாறுகளிலாவது அரைத்துக் குழம்பாக்கி அதில் துணித் துண்டைத் தோய்த்து இரணங்களின் மேலிடுவது.

**களிம்பு.**—வங்கக் களிம்பு, விரணக் களிம்பு போன்றவை. இது பாடாணங்களையும், துவர்ப்புள்ள காய்ச்சுக் கட்டி, மாசிக்காய் போன்றவைகளையும் பொடி செய்து பசு வெண்ணெயுடன் சேர்த்து நன்றாய் அரைத்து இரணங்களுக்குப் போடுவது.

**பொடி.**—வெங்காரம் பொரித்ததும் அஃதுடன் சில துவர்ப்புள்ள சரக்குகளின் பொடிகளைக் கூட்டி நன்றாய் அரைத்து விரணத்தின் மீது தூவுதல்.

**நீர்.**—புளியிலை, வேப்பிலை குடிநீர், பாலுள்ள மரப்பட்டைக் குடிநீர், சில நஞ்சுச் சரக்குகளை மிக்க நீரிலரைத்துக் கலந்து இரணங்களைக் கழுவுதற்குப் பயன் படுத்துவது. (எடுத்துக்காட்டு) துத்த நீர், வீரநீர், படிகநீர் போல்வனவாம்.

**களி.**—ஆளிவிதையைப் போன்ற சில விதைகளை அரிசிமாவுடன் சேர்த்து நீர் விட்டரைத்துக் களிபோல் இண்டி, கட்டி, வீக்கம் இவற்றின் மீது வைத்துக் கட்டுவது.

**பசை.**—குங்கிலியம் போன்றவைகளை மெழுகுடன் சேர்த்து எண்ணெய் விட்டு உருக்கிப் பசையாகச் செய்துகொண்டு வேண்டியபோது உருக்கித் துணியில் தடவி இரண முவலியவைகட்குப் போடுவது.

**வீக்கம் அல்லது தடிப்பு.**

குற்றங்களை தன்னிலை பிறழ்ந்து வேற்று நிலை வளர்ச்சி யடைந்து இயற்கை யளவின் மிகுவதால் வேற்றிடத்திற்குப் பரவும். அவ்வாறு பரவி உடலில் ஓரிடத்திற்றங்கும்.

அவ்வாறு தங்குவதற்குக் காரணமாவது அவ்விடத்துனுள்ள உடற் கட்டின்றீ (தாது அக்கினி) யானது சம அளவில் இல்லாதிருப்பதுடன் அவ் விடத்திலுள்ள உடற்கட்டுகளும் மெலிந்த நிலையிலிருக்கவேண்டுமென்ப தேயாம். இவ்வாறு குற்றங்கள் ஓரிடத்தைப் பற்றி வீக்கத்தையுண்டாக்கும்.

இவ் வீக்கங்களை செவ்வனே குணப்படுத்தாதபோது அவை கட்டி, கிரந்தி, இரணங்களாக மாறிவிடும் என்பதற்கையமில்லை. அவ்வாறு தோன்றும் வீக்கமானது ஐவகைப்படும் :—

1. **வளிவீக்கம்**—இது கரிய செம்மை நிறமும் பொருந்தியதாய் சுரசுரப்புடன் தாங்கொணு நோயைத் தரும். இவ் வீக்கம் ஓரிடத்தில் தோன்றித் தங்கி வெவ்வேறிடங்களிலும் பரவும்.

2. **அழல்வீக்கம்**.—இது மஞ்சள் நிறத்துடன் கூடியதாயும், மென்மை பொருந்தியதாயும், கையாலழுத்திஞல் பதியத்தக்கதாயும் இருக்கும் எரிச்சலுடன் கூடிய வேதனையைக் கொடுக்கும்.

3. **ஐய வீக்கம்**.—வெண்மையாகவாவது அல்லது கபில நிறத்துட ஞவது காணும். மினுமினுப்புத் தோன்றும். தொட்டுப் பார்க்கின் குளிர்ந்திருக்கும். ஒருவித நமைச்சலுடன் கூடிய வேதனை ஓரிடத்தில் தோன்றி வேருேரிடத்திற்கு மிகவும் மெல்லப் பரவும்.

4. **இரு குற்ற முக்குற்றம் கலப்பு வீக்கம்**.—இவ் வீக்கத்தில் தனித் தனிக் குற்றங்களாலேற்பட்ட வீக்கங்களிற்ருேன்றும் இலக்கணங்கள் கலந்து தோன்றும்.

5. **அடிப்பட்ட வீக்கம்**.—இவ் வீக்கமானது பெரும் பான்மையும் பித்த வீக்கத்தின் குறி குணங்களைப் பொருந்தி யிருக்கும்.

**பரிகாரம்**.—வீக்கங்களை உள்மருந்துகளாலும் வெளி மருந்துகளினுலும் குணப்படுத்தலாம்.

**உள்மருந்துகள்**.—மலத்தைக் கழிப்பதனுலும் வாந்தியை யுண்டாக்கச் செய்வதனுலும் ஒருவாறு முக் குற்றம் நீங்கும். பிறகு, சாரம், செந்நீர் இவற்றைச் சுத்தி செய்யக் கூடிய மருந்துகளை வழங்கவேண்டும்.

**பேதிக்குரிய மருந்துகள்**.—வெள்ளை எண்ணெய் (பூர எண்ணெய்), ¼,½, ¾, 1, அவுன்ஸ் அளவு, அகத்தியர் குழம்பு அல்லது கவுசிகர் குழம்பு ¼, ½, ¾, 1, குன்றி பண வெல்லம் அல்லது சுக்குச் சாந்து துணை மருந்து ஆகும்.

**ரசாத்தையும் செந்நீரையும் சுத்திசெய்யும் மருந்துகள்.**—1. கந்தக இரசாயனம், 2. இரசகந்திமெழுகு, 3. கந்தகச் சுடர்த்தைலம், 4. அயச் செந்தூரம், 5. அயக்காந்தச் செந்தூரம்.

### வெளி மருந்துகள்.

1. **தொக்கணம்.**—இதை இடம் நோக்கி தொக்கண விதியிற் கூறியபடி கையாளவேண்டும்.

2. **ஒற்றடம்.**—இது வீக்கத்திற்குப் பொருந்துமாறு செய்ய வேண்டும்.

3. **வெளிப்பாடு.**—குருதியை அட்டை விட்டு வெளிவாங்கலாம்.

4. **பூச்சு.**—சந்தனத்தையும் செம்மண்ணையும் அரைத்த சாந்தை அழல் வீக்கத்திலும், சுண்ணும்பும் தேனும் சேர்ந்த கலவையை ஐய வீக்கத் திலும், ஆளிவிதை போன்ற எண்ணெய்ப் பசையுள்ள கலப்பினை வளி வீக்கத்திலும் வழங்கலாம்.

5. **வேறு.**—சுட்ட செங்கல்லை நீரினுள்ளிட எழும் ஆவியை வீக்கத்தின் மீது படும்படி செய்ய வியர்வை பெருகி வீக்கம் குறையும்.

### கட்டிகள்.

**காரணம்**—குருதி நிரம்பிய தசை, வளிவழங்கும் கிழங்கு வகைகள் ஆகியவற்றை அளவு மிகுந்துண்பதாலும், கார்ப்புச் சுவையுள்ள பொருள் களையும், சூடு பொருந்திய உணவுப் பொருள்களையும் மிகுதியாகப் புசிப்ப தாலும், விரைவுகளை (வேகங்கள்) அடக்குவதினுலும், புணர்ச்சி மிகுதி யாலும், செந்நீர் கேடடைந்து, அதன் பின்னர்த் தசை, கொழுப்பு, என்பு ஆகிய உடற்கட்டுகளையும் கெடுத்துக் கட்டிகளை யுண்டாக்கிவிடும்.

கட்டிகள், தசையையும் தோலையும் குற்றப்படுத்தி நிற்கையில் "சிறு கட்டிகள்" என்றும் தோல்முதல் என்புவரை கெடுதியடைந்திருப்பின் "பெருங்கட்டிகள்" எனவுங் கூறப்படும்.

**கட்டிகள் பழுக்குமுன் தோன்றுங் குறிகள்.**—பழுக்காமலிருக்கும் கட்டி யானது சற்று வீக்க முள்ளதாயும் தொட்டுப்பார்க்கையில் கடினமுள்ள தாயும், அற்ப சூடுள்ளதாகவுமிருக்கும். நிறவேற்றுமை காணப்பட மாட்டா.

**கட்டிகள் பழுக்கும்போது காணப்படும் இலக்கணம்.**—வீக்கம் பெரியதாக வும் மிக்க சூடுமுடையதாகவும், ஈட்டியால் குத்துவது போன்ற வேதனை யும், எறும்பு ஊர்வது போலவும், நெருப்பில் சுடுவது போலவும் உணர்ச்சி யைக் கொடுப்பது மன்றித் தொட்டால் பொறுக்க முடியாத நோயையுந் தருவதாயிருக்கும்.

ஈதன்றிக் காய்ச்சல், தூக்கமின்மை, பசியின்மை, நீர்வேட்கை ஆகிய இவைகளுங் காணப்படும்.

**கட்டிகள் பழுத்தபின் உண்டாகும் குறிகுணங்கள்.**—வீக்கத்தின் மேற்றோல் சிறிது சுருங்கி வெளுத்திருக்கும். ஓரிடத்தில் " முகை " போன்று கையால் தொட்டுப் பார்க்கையில் தோற்பையுள் நீர் ஓடுவது போல ஒருணர்ச்சியும் தோன்றுவது மன்றி, வெப்பம், நோய் இவை குறைந்து தூக்க முண்டாகும்.

**கட்டிகளை வகுக்கும் வகை.**—(1) வெளிப்புறத்தே தோன்றுங் கட்டிகள், (2) உட்புறத்தே தோன்றுங் கட்டிகள் என்றும்.

**குற்றத்தினளவாக.**—(1) வளிக்கட்டி, (2) அழற்கட்டி, (3) ஐயக் கட்டி, (4) இருகுற்ற முக்குற்றக் கலப்புக் கட்டி, (5) குருதிக் கட்டி, (6) அடி படுதலாலேற்படுங் கட்டி எனவுங் கட்டிகளை வகுக்கலாம்.

**உட்புறத்தே தோன்றுங் கட்டிகள்.**—தமரகம், பக்க விலாக்கள், சோற்றுப்பை, கல்லீரல், மண்ணீரல், கொப்பூழ், மலவாயில், மூத்திர நாளம், தொடையிடுக்கு, அண்டமாகிய இடங்களில் தோன்றுவனவாம்.

**மேற்படி கட்டிகளின் குறிகுணங்கள்.**—கொப்பூழிடத்திலுண்டாகுங் கட்டி முன் வளைவதற்காவது, நிமிர்வதற்காவது, பக்கத்தில் திரும்புவதற்காவது முடியாமை, வீக்கம், விக்கல் ஆகிய குணங்கள் காணப்படும்.

**மூத்திர நாளத்திலுண்டாகுங்** கட்டிகளில் மூத்திரக் கிரிச்சர நோயில் காணப்படும் குறிகுணங்கள் தோன்றும்.

**கல்லீரல்கட்டியின் குறிகுணங்கள்.**—மூச்சு விடுவதற்குக் கடினத்தையும் மேல் வயிற்றில் நோவையும், விலாப் பக்கத்தில் கொதிப்புடன் கூடிய ஒருவித வேதனையையும் தரும்.

**மண்ணீரற் கட்டியின் பண்பு.**—நீர் வேட்கை, உடற்கனதி, கடின மூச்சு முதலியவை தோன்றும்.

**பக்கவிலாக் கட்டியின் பண்பு.**—தொண்டையிலடைத்தாற் போன்ற வோருணர்ச்சி யேற்படும்.

**மார்பு அல்லது தமரகத்திலேற்படும் கட்டியின் குறிகுணங்கள்.**—உடல சதியும், மன அசதியும், கடின மூச்சும் எற்படும்.

**இரப்பையிற் கட்டி தோன்றில்.**—வயிற்றிலும் விலாப் பக்கங்களிலும் மிக்க துன்பமும் உணவில் அதிக வெறுப்பு முண்டாகும்.

**தொடையிடுக்கில் கட்டி யேற்படின்.**—காலை யசைக்கக்கூடாத துன்ப மேற்படும்.

**அண்டத்தில் கட்டி தோன்றின்.**—முதுகிலும் இடுப்பிலும் துன்பம் மிகுத்துக் காணும்.

**எருவாயில் கட்டி உண்டாயின்.**—அவ்வழியே காற்றும் மலமும் வெளிப்படும்போது ஆற்றலாகாத வருத்தங் கொடுக்கும். அக்கட்டி உடைந்தபின் சீழ் வெளியாகும்.

**கொப்பூழுக்கு மேலிருக்கும் உறுப்புக்களில் உண்டாகும் கட்டிகள் உடைந்தால்.**—சீழ், வாயின் வழியாகவும் கொப்பூழுக்குக் கீழிருக்கும் உறுப்புகளில் ஏற்படும் கட்டிகள் உடைந்தால் சீழ் எருவாய் வழியாகவும் வெளிப்படும்.

**தீரும் தீராதவை.**—வெளிப்புறத்தே தோன்றுங் கட்டிகளில் முக்குற்ற வகுப்பைச் சேர்ந்த கட்டிகள் தீராவாம்.

உட்புறத்தே தோன்றுங் கட்டிகளில், சீழானது வாயால் வரக் கூடிய கட்டிகள் தீராவாம்.

### பரிகாரம்.

உட்புறத்தே, சாரம், குருதியாகிய உடற்கட்டுகள் கேடடைவதினுனும், குற்றங்களின் வேற்றுமையாலும் கட்டிகள் ஏற்படுவதால் அவற்றின் குற்றங்களை நீக்கவேண்டும்.

இந்நோக்கத்துடன் மல மூத்திரங்களை முறையே வெளிப்படுத்தியும், வாந்தி பரிகாரம் செய்வித்தும், வியர்வையை யுண்டாக்கியும் குற்றங்களை வெளிப்படுத்தலாம். ஈதன்றி, உடலுக்கு நெய்ப்புத் தன்மையை யுண்டாக்குவான் பொருட்டு மருந்து நெய்களை (தைலங்களை) மேற் பூச்சாக வழங்கலாம்.

### உள்ளுக்குக்கொடுக்கும் தைலங்கள்.

1. சாரணைக் கள்ளித்தைலம் 10 முதல் 40 துளிகள் நிசித் தண்ணீரிலேனும், சோம்புத் தீநீரிலேனும், பன்னீரிலேனும் கொடுக்கலாம்.

(தேரன் தைல வர்க்கச் சுருக்கம்.)

2. கழற்சி யெண்ணெய் 1/8 முதல் ¼ அவுன்ஸ் வரை கொடுக்கலாம்.

(தே. தை. வ.சு.)

3. மெருகுள்ளித்தைலம் ¼ முதல் ½ அவுன்ஸ் வரை கொடுக்கலாம்.

(தே. தை. வ.சு)

4. வெள்ளை எண்ணெய் ½ முதல் 1 அவுன்ஸ்.

5. வாத நாசத் தைலம் ½ முதல் 1 அவுன்ஸ்.

மேலுக்குச் சவுரித் தைலத்தை உபயோகிக்கலாம்.

கட்டிகள் தோன்றும்போது மேற்கூறிய மருத்துவங்களைச் செய்யலாம். இப்பரிகாரத்துடன் குருதியைச் சுத்தி செய்ய கந்தக ரசாயனம், கந்தக மெழுகு, கந்தகச் சுடர்த் தைலம், 5 முதல் 10 குன்றி, 2 முதல் 3 மிளகளவு, 3 முதல் 10 துளி முறையே சர்க்கரையில் வழங்கலாம்.

பரங்கிப்பட்டை இரசாயனம் ½ முதல் 1 வராகனெடை கொடுக்கலாம்.

கட்டியின் துவக்க நிலையில் அது மறையும்படி பரிகரிக்கலாம்.

அதற்கு (1) **ஒற்றடம்.**—வளிக்கட்டிக்கு ஆமணக்கிலை, தழுதாழையிலை, ஊமத்தையிலை, அந்தி மல்லியிலை, சீந்திலிலை, துத்தியிலை இவைகளிலொன்றை ஆமணக்கு நெய்விட்டு வதக்கி ஒற்றமிடலாம்.

**ஐயக் கட்டிகளில்.**—தவிடு, மஞ்சள், செங்கற்றூள் இவற்றை வறுத்து ஒற்றடமிடலாம். அழற்கட்டிக்கு வெந்நீர் ஒற்றடமிடலாம்.

**குறிப்பு.**—பித்தக் கட்டிக்கு ஒற்றடமிடக்கூடாதென்பது சிலர் கொள்கை.

2. **தொக்கணம்.**—தைலத்தைத் தடவியேனும் தடவாமலேனும், தடவித்தடவிக் கொடுத்து வரக் கட்டி கரையும்.

3. **குருதி வாரங்கள்**—இதற்கு அட்டையைக் கட்டியைச்சுற்றி விடலாம்.

4. **மேற்பூச்சுகள்**—கட்டியை மறையும்படி செய்யும் பூச்சுகள்.—

கடுகு—வராகனெடை—1
காயம் ,, ,,
வாளம் ,, ,,
மூசாம்பரம் ,, ,,
அபின் ,, ,, இவைகளை எருக்கிலைச் சாற்றாலரைத்துப் பூசலாம்.

**வேறு.**

மூசாம்பரம்
கருஞ்சீரகம்
காயம்
பூண்டு
நாபி
கொடிவேலி வேர்ப்பட்டை
} ஒத்த நிறை.

திருகு கள்ளிச்சாறு விட்டரைத்துப் பூசலாம்.

**வேறு.**

கற்சுண்ணும்பு, வெங்காயம், வசம்பு, பேய்ப்பீர்க்கு, முருங்கைப் பட்டை இவை ஒத்த நிறை எருக்கம் பாலிலரைத்துப் பூசலாம்.

**வேறு.**

**வெள்ளை மெழுகு.**

1. வெள்ளைப் பாடாணம்—1 வராகனெடை.
2. தேன் மெழுகு—1 பலம்.
3. தேங்காய் நெய்—½ பலம்.

வெள்ளைப் பாடாணத்தை மெல்லிய துகளாக்கி, தேன் மெழுகை யுருக்கும் முகத்தில் தேங்காய் நெய்யைச் சேர்த்து, சற்று இளஞ்சூடாயிருக்கும்போது பாடாணப் பொடியைத் தூவிக் கிண்டி வைக்கவும்.

இதை வேண்டும்போது துணித் துண்டிற்றடவி அனலில் காட்டி கட்டிகள் மீது போடலாம்.

வேறு.—கற்சுண்ணும்பு, கோழிமுட்டை வெண்கரு இரண்டையுஞ் சேர்த்தரைத்துப் பூசுவதால் கட்டிகளும் வீக்கங்களுங் கரைந்துவிடும்.

**கட்டி பழுத்து வரும்போது பயன்படுத்தும் பூச்சுகள்.**—விட மூங்கிற் கிழங்கை நெருப்புத் தணலில் வைத்துச் சுட்டுக் கடைந்து இளஞ் சூட்டில் வைத்துக்கட்ட, கட்டி முகங் கொண்டுடையும்.

**வேறு.**—அந்தி மல்லியிலையைக் காடியில் வேகவைத்துக் கடைந்து வைத்துக் கட்டலாம்.

**வேறு.**—அன்னபேதியைத் தண்ணீர் விட்டரைத்துச் சுடவைத்து மேல் பூசலாம்.

**வேறு.**—துத்தியிலையை ஆவியிலவித்து மஞ்சட்பொடி தூவி ஐயக் கட்டிக்கு வைத்துக் கட்டலாம்.

**கட்டிகளையுடைக்க வழங்கும் பூச்சுகள்.**

பால்சாம்பிராணி—4 பங்கு
படிகாரம்— 2 பங்கு
சூடன்— 4 பங்கு

சோற்றுடன் சேர்த்தரைத்துக் கட்டியின் மேற் பூசலாம்.

**வேறு.**—இலிங்கம் வராகனெடை 4—இதை எண்ணெயிலரைத்து அத்துடன் 4 பலம் குங்கிலியத்தை எண்ணெயிலுருக்கி, அத்துடன் வராகனெடை சூடனை உருக்கிய மெழுகிற் சேர்த்து, பிறகு எல்லாவற்றையும் ஒன்று சேர்த்து நன்றாக அரைத்துக் கட்டிகட்குப் பூசக்கட்டிகளுடைவது திண்ணம்.

**வேறு.**—ஆளிவிதை மாவைக் களிகிண்டி வைத்துக் கட்டினால் கட்டியுடைந்து விடும்.

**வேறு.**—துத்தியிலையைச் சோற்றுடன் சேர்த்தரைத்துக் கட்டிகளின் மேல் பூசலாம்.

**பழுத்த கட்டிகளை அறுவைசெய்முறை.**—நன்றாகப் பழுத்தக் கட்டிகளை கத்திகொண்டு அறுத்தல் வேண்டும். அவ்வாறு செய்யாவிடின் சீழ் உட்புற உடற்கட்டுகளில் மேலும் மேலும் பரவி யவைகளை யழித்துவிடும். இதனை யறியாது, கட்டிகளைக் கீறுது, காலந் தாழ்த்துவரின் தீங்குண்டாகு மாதலால் மருத்துவர் கருத்தூன்றிச் செய்தல் நலமாம்.

நேரமறிந்து கத்தியைப் பயன்படுத்தாத மருத்துவன் இரக்கமற்றவனாவான். இவ்வாறு கூறினும் கட்டிகள் குழந்தைகட்கும், வயது சென்றவர்கட்கும், மெலிந்தவர்கட்கும், கோழை நெஞ்சுடையவர்கட்கும் தோன்றின் அவற்றைக் கார மருந்தினுல் உடையவைப்பதே முறைமையாகும்.

நன்கு பழுத்துக் கீறுவதற்குப் பக்குவமடையாத கட்டிகளைக் கீறுவதால் பொறுக்க முடியாத துன்பமும், குருதிப் பெருக்கும் காண்பதுடன் மிகச் சிறிய முளைகளுண்டாகி, அவ்விடத்தைப் பொருந்திய குற்றம் மற்றைய உடற்கட்டுகட்கும் பரவிப் பதனழியத் தொடங்கிவிடும்.

**கட்டிகளைக் கீறுவதற்கு முன் செய்யத்தக்கன.**

கட்டியைக் கீறும்போது, மூர்ச்சை, மயக்கம் ஏற்படுமாகையால் அவ்வாறு அவை ஏற்படா வண்ணம் தடுப்பதற்குச் சாரமாகிய உடற்கட்டை வளர்க்கக் கூடிய நல்லுணவைக் கொடுத்தும், மதுபானம் செய்வித்தும் கட்டியைக் கீறல் மிக்க நலமாம்.

**புண்கள்**

கட்டியுடைந்த பின் விரணமாகிவிடும். ஈதன்றிக் கருவியினாலும் அடிபடுதலானும், நெருப்பினாலும் பிறவுயிர்களின் கடிகளாலும் உடம்பில் புண்கள் நேர்தல் கூடும்.

ஆகவே இரணங்களை உடலிலுள்ள குற்றத்தினால் உண்டாகும் புண்ணென்றும், அடிபடுதலாலுண்டாகும் விரணமென்றும் இருவகையாகப் பிரிக்கலாம்.

ஈதன்றி, விரணங்களின் குறிகுணங்களைக் கொண்டும் அவைகளின் தீரும் தீரா இலக்கணங்களையறிந்தும் துஷ்ட விரணங்களென்றும், அதுஷ்ட விரணங்களென்றும் இருவகையாகப் பிரிக்கலாம். ஆகவே துஷ்ட விரணம் 15, அதுஷ்ட விரணம் 45 எனக் கூறப்பட்டிருக்கின்றது.

இங்ஙனம் கூறியிருப்பினும் குற்றங்களைப் பொருந்தி 16 வகையாகப் பிரிக்கப்படும். அவை :—

1. வளிப்புண், 2. அழறபுண், 3. ஐயப்புண், 4. வளிபித்தப்புண், 5. வளி ஐயப்புண், 6. பித்த ஐயப்புண், 7. முக்குற்றப்புண், 8. குருதிப் புண், 9. குருதித்தீப்புண், 10 குருதிவளிப்புண், 11. குருதிஐயப்புண், 12. குருதிவளி பித்தப்புண், 13. குருதிவளி ஐயப்புண், 14. குருதிபித்த ஐயப்புண், 15. குருதி முக்குற்றப்புண், 16. வெளுத்த குருதிப்புண் என்பனவாம்.

**1. வளிப்புண் இலக்கணம்.**—இதன் முகமானது, கருப்பு, சிவப்பு, என்பு, சாம்பல், வெண்மை ஆகிய நிறங்களைப் பெற்றிருக்கும். இதினின்று வடிகின்ற நீரானது புன்செய்த் தானியங்களையும், தசையையும் கழுவின நீரின் நிறத்தையும் தெளிந்த மோரின் நிறத்தையும் பெற்றிருப்பதுமன்றிச் சிறிது சிறிதாகவும் வடியும்.

இதனால், அவ்விடத்து, தசை கரைதல், நோதல், குத்தல், வறளல், உள்ளிடத்திலே சிடுசிடுப்பு ஆகிய ஓரோசை என்னும் குணங்கள் காணப்படும்.

**2. அழற்புண் இலக்கணம்.**—விரைவில் பிறந்து மஞ்சள், செம்மை கருஞ்செம்மை, வெண் செம்மை ஆகிய நிறங்களைப் பெற்றிருக்கும்.

இதினின்றும் வடியும் நீரானது, பசுமூத்திரம் போலவும், வெண்ணெய் போலவும், சூடுகையுடன் அதிகமாகவரும். ஆனால் அவ் விடத்தில் உப்பு நீரைத் தெளித்தாற் போன்ற எரிச்சலும், அடிப்பட்டது போன்ற நோயும் அணலிலிருக்கின்ற தசையைப் போலச் சிவத்தலும் உண்டாகும்.

**3. ஐயப் புண்ணிலக்கணம்.**—இது நமைச்சலுடன் வெளுத்துக் கெட்டியாகவுயர்ந்து சுடுகையைப் பெற்றும், நரம்புகளில் சிலையோடுவதாயும், இதினின்று பாயும் நீரானது, வெளுத்து, பிசினைப் போலகுழம்பாயும், மிகுதியாகவும் வடியும். அப்போது குத்தலோடு கூடிய நோயுண்டாகும்.

**4. வளி பித்தப்புண்ணிலக்கணம்.**—இது, வளிப் புண்ணினும், பித்தப் புண்ணினும் தோன்றுங் குணங்களைப் பெற்றிருக்கும்.

**5. வளி ஐயப்புண்ணிலக்கணம்.**—இது, வளிப் புண்ணினுண்டாகும் குணங்களையும், ஐயப் புண்ணினுண்டாகும் குணங்களையும் பெற்றிருக்கும்.

**6. பித்த ஐயப் புண்ணிலக்கணம்.**—இது பித்தப் புண்ணினும், ஐயப் புண்ணினும் ஏற்படும் குறிகுணங்களைப் பெற்றிருக்கும்.

**7. முக்குற்றப் புண்ணிலக்கணம்.**—வளி, பித்த, ஐயப் புண்களிற்றோன்றும் குறிகுணங்களையெல்லாம் ஒருஙகே பெற்றிருக்கும்.

**8. குருதிப் புண்ணிலக்கணம்.**—இது பவழத்தைப் போலவும்,குருதியைப் போலவும் நிறத்தைப் பெற்று துஷ்ட விரண குறிகுணங்களைப் பெற்றிருப்பதுமன்றி, குதிரை மந்துரையில் வீசுகின்ற வாசனையையும் பெற்றிருக்கும்.

**9. குருதிப் பித்தப்புண்ணிலக்கணம்.**—இது குருதி நிறமாயும், மஞ்சள் நிறமாயுமிருக்கும். இப்புண்ணினின்று பசுமூத்திரம் போன்றும், குருதி போன்றும் நீரொழுகும். இதனால் எரிச்சலும் விறுவிறுப்புமுண்டாகும்.

**10. குருதி வளிப்புண்ணிலக்கணம்.**—இது பவழத்தைப் போலும் கரியைப் போலும் நிறமுள்ளதாயுமிருக்கும். இதினின்றும் செந்நீரைப் போன்றும் தயிர்த்தெளிவு நீர் போன்றும் நீரொழுகும். இதனால் குத்தலும், வாந்தியுமுண்டாகும்.

**11. குருதி ஐயப் புண்ணிலக்கணம்.**—சிவந்தும் பழுத்துமிருக்கும். இதனால் வீக்கமும் வாந்தியுமுண்டாகும். இதினின்று சீதமும் செந்நீருமொழுகும்.

**12. குருதி வளிபித்தப் புண்ணிலக்கணம்.**—இது, குருதிவளி, குருதி பித்தப் புண்களின் குறிகுணங்களைப் பெற்றிருக்கும்.

**13. குருதி வளி ஐயப் புண்ணிலக்கணம்.**—இது, குருதிவளி, குருதி ஐயப் புண்களின் குறிகுணங்களையுடையதாயிருக்கும்.

**14. குருதி பித்த ஐயப் புண்ணிலக்கணம்.**—இது, குருதிப் பித்த, குருதி ஐயப் புண்களின் குணங்களைப் பெற்றிருக்கும்.

**15. குருதி முக்குற்றப் புண்ணிலக்கணம்.**—இது, குருதிவளி, குருதிப் பித்தம், குருதி ஐயப் புண்களின் குறிகுணங்களையுடைத்தாயிருக்கும்.

**16. வெளுத்த குருதிப் புண்ணிலக்கணம்.**—இது, நாக்கின் நிறத்தையொத்து, புண்ணின் நடுவினுயர்ந்தும், மினுமினுப்புடன் கூடியிருப்பதுமன்றி நீர்க்கசிவின்றிச் சூட்டுடன் பொருந்தியதாயுமிருக்கும்.

**ஆறிவரும் புண்ணின் குறி குணங்கள்.**

சாம்பலும் மஞ்சளுங் கலந்த நிறத்துடன் இருக்கும். அதன் அடிப் புறம் தடிபபின்றியும், நீர்க்கசிவின்றியும் அதன் ஓரங்கட்கருகில் சற்றுத் தடித்துமிருக்கும்.

**ஏறக்குறைய ஆறிவரும் புண்ணினிலக்கணம்.**

சாம்பல் நிறத்துடன் சிறு கறுப்புப் புள்ளிகள் போன்று காணப்படும். ஆறிவரும் ஓரங்கள் நோய்க்கண்படாத தோலின் நிறத்தை யொத் திருக்கும்.

**தீரும் தீராதவை.**

1. நோயாளியின் எழு உடற்கட்டுகளின் நிலையைப் பொருந்தியதா யிருக்கும். எவ்வாறெனில், சாரம், செந்நீர் முதலிய தம் நிலையில் கூடி யாவது, குறைந்தாவது, இருத்தல், வளி, பித்த, ஐயங்கள் தன்னிலை வளர்ச்சியடைந்து கலந்திருத்தல்.

2. நோயினன் வயது.

3. புண்ணேற்பட்ட உறுப்பு, எடுத்துக் காட்டாகக் காலின் முன்பக்கம், தொடையிடுக்கு, அக்குள், குதிக்கால் ஆகிய விடங்களிற்றோன்றும் புண்கள் மற்றைய விடங்களிலுண்டாகும் புண்களைப் போல விரைவில் குணமடையா.

ஈதன்றி, மர்ம நிலைகளில் புண்கள் ஏற்பட்ட காலத்தும் அமுத நிலைகள் வாழிடங்களில் அடிப்படுவதால் பிறந்த புண்களும் விரைவில் குணப்படா.

4. புண்ணின் அமைப்பைப் பொருந்தியதாகவுமிருக்கும்.

புண்ணனது வட்டவடிவமுள்ளதாயும், முக்கோண வமைப்பைப் பொருந்தியதாகவும், நான்கு மூலைகளையுள்ளதாகவும் இருப்பின்றீரும்.

மேற்கூறிய வடிவங்களிலொன்றிலாவது பொருந்தாத புண்ணனது ஆற்றிக் கொள்ள முடியாததாகும்.

கீழ்க் கூறப்படுமிடங்களிற்றோன்றும் புண்கள் அரிதிற்றீர்வனவாம்.— 1. கண், 2. கடைக்கண், 3. மூக்குத்துளை, 4. எயிறு, 5. மார்பு, 6. நகில், 7. பூட்டுகள்.

மேலும், மதுமேகம், கயம், பெருநோய் ஆகிய இந்நோய்களில் வருந்து பவர்களில் உண்டாகும் புண்ணனது மிகக் கொடுமையுடையதாகும்.

துவக்கத்திலேயே தகுந்த மருத்துவம் செய்யாது தவறுவதின் காரண மாகக் கெடுதியடைந்த புண்களும் விரைவில் குணமாகா.

நன்கு அறுவை முறைகளைக் கற்றுணராதவனும், கைதேர்ச்சியற்ற வனுமான மருத்துவன் பரிகரிக்கும் விரணங்களும் மிக அரிதிற்றீரும்.

கிரந்தி முதலியவற்றிலுண்டாகும் புண்களும், ஊன் கசியும் புண் களும், வரம்புயர்ந்திருக்கும் புண்களும், அடிப்புறம் பள்ளமுள்ளதாயிருக் கும் புண்களும், பிளப்புடன் கூடிய புண்களும் மருத்துவத்தில் குண முடையாவாம்.

உச்சி, விரல்நுனி, வர்மங்கள், எலும்பு, எலும்பினுள்ளிருக்கும் மூளை தெரியக்கூடிய நிலைமையிலிருக்கும் புண்களும், உடலினுட்புறத்தேயிருக்கும் ஆசயங்கள் கெடுதியடைவதனால் உண்டாகும் புண்களும் மருத்துவத்திற்கு வயப்படா.

ஈதன்றி, விரைவில் ஆறக்கூடுமெனக் கூறப்பட்டுள்ளவிடங்களிலேற்படும் புண்களும், எழுடற் கட்டுகளும் அக்கினி வன்மையில் குறைந்திருக்குமாறாலும் விரைவில் குணப்படா.

**மருத்துவம்.**

முதலில் புண்ணேயுற்றோன் வாழ்வதற்கேற்றவோரிடத்தில் தங்கி வரவேண்டும்.

நடத்தல், ஓடல், ஆடல் ஆகிய தொழில்களைத்தவிர்த்து, பொறுமையுடன் ஓரிடத்தில் அமர்ந்திருக்கவேண்டும். அவனது படுக்கையானது மிகவும் விசாலமுள்ளதாகவும், மேடுபள்ளமில்லாததாகவுமிருக்கவேண்டும். அவனிருக்கும் அறையானது நன்கு அமைக்கப்பட்டதாகவும், அழுக்கின்றிப் புனிதமானதாகவும், நல்ல வெளிச்சம், காற்று உலவக் கூடியதாகவும் அமைக்கப்பெற்றிருத்தல் வேண்டும்.

இதுவன்றி, நாளும் புகை போட்டும், கழுவிச் சுத்தம் செய்து வைத்தல் வேண்டும். கெட்டழுகிய புண்கள் துர்நாற்றத்துடனிருக்கையில் கந்தகம், அகில், தேவதாரு இவற்றாலாகிய புகையைப் பயன்படுத்தலாம். தொத்து நோயுள்ள காலத்தில் கண்டங்கத்தரி, பேய்ப்புடல், பேய்ப்பீர்க்கு, உலர்ந்த வேப்பிலை இவைகளைப் புகைக்கலாம்.

மட்டிப்பால், கார்போகரிசி, தேவதாரு, அகில் முதலியவைகளையும் புகைப்பதற்குப் பயன்படுத்தலாம். பளிங்கு சாம்பிராணி, பூனைக்கண் குங்கிலியமாகிய இவைகளும் மேற்கூறப்பட்ட புகைபோடுதலுக்காகும்.

**உள் மருந்துகள்.**

உடலிலுள்ள குற்றங்களையும் உடற்கட்டுகளையும், தூய்மைப்படுத்தும் வகையில் மலத்தை முறையாகக் கழிக்க வேண்டும். எக்குற்றம் தன்னிலை பிறழ்ந்திருக்கிறதோ அதற்கேற்ற பேதி மருந்துகளைக் கொடுத்து மலம் போக்கல் வேண்டும்.

இதுவன்றி, சாரம் முதலிய உடற்கட்டுகள் தம் வன்மையில் குன்றியிருந்தால் அவற்றை வளர்ப்பதற்காவன மருந்துகளைப் பயன்படுத்த வேண்டும்.

சாரம் கெட்டிருக்கும்போதும், தோல் பிணிபட்டிருக்கும்போதும், கந்தகம் சேர்ந்த மருந்துகளையும் பரங்கிப்பட்டை சேர்ந்த மருந்துகளையும் வழங்கலாம்.

செந்நீர் கெட்டிருக்கையில் இரும்பு, கந்தகம், ஈயம், செம்பு, நீராடு முத்து, சேங்கொட்டை ஆகிய இவை சம்பந்தமான மருந்துகளைக் கொடுக்க வேண்டும்.

தசை, மூளை இவைகள் கேடடைந்திருக்கையில் இரும்பு, பவழம், இரசம், செம்பு முதலியவைகளால் முடிந்த மருந்துகளைக் கொடுக்க வேண்டும்.

## வெளி மருந்துகள்.

புண்களையவற்றின் நிலைமைக்கு ஏற்றவாறு பரிகரிக்க வேண்டும்.

**புண்கள் தோன்றியவுடன் மருத்துவம் செய்முறை.**—புண்ணைத் தூய்மை செய்தலும், பக்கங்களிலிருக்கும் அழுக்கை அகற்றலுமாம்.

**வளிப் புண்.**—பாலுள்ள மரங்களின் குடிநீரைக் கொண்டு கழுவித் தூய்மை செய்தலுமாம். இதற்கு ஆல், அத்தி, இத்தி, அரசு இவை முதலிய பயன்படும்.

**அழற் புண்.**—கைப்பும் இனிப்பும் பொருந்திய பொருள்களாலாகிய குடிநீரை உபயோகிக்கலாம். இதற்கு அதிமதுரம், நிலவேம்பு, வேம்பு, பேய்ப்புடல் இவை முதலிய பயன்படும்.

**ஐயப் புண்.**—சிறிது காரமுள்ள பொருள்களும், துவர்ப்புப் பொருள்களும் சேர்த்துச் செய்யப்பட்ட குடிநீர் பயனுகும். இதற்கு முக்கடுகும் முப்பலேயும் உதவும்.

**விரநீர்.**—ஐயப் புண்ணுக்கும், பித்தப் புண்ணுக்கும் பயன்படும்.

**குளிர்ந்த நீர்.**—இது அழற் புண், வளிப் புண் இவற்றில் பயன்படும்.

**படிகார நீர்.**—அழல், ஐயப் புண்களுக்குப் பயன்படும். வளிப் புண்ணில், சிறிது நெய்ப்புத் தன்மையுள்ள பொருள்களும் பயனும்.

**குணப்படுத்துதல்.**—புண்ணிலிருக்கும் மலினங்களையும் பதனழிந்த உடற்கட்டுகளையும் வெளிப்படுத்த் வேண்டும். இதற்காக ஐயப் புண்ணில் காரங்களையும், அழற் புண்ணில் களிம்புகளையும், வளிப் புண்ணில் நெய்ப்புத் தன்மை பொருந்திய புற்கைகளையும் வழங்கலாம்.

நாயுருவியுப்பை ஐயப் புண்ணிலிருக்கும் கெட்ட தசைகளை நீக்க வழங்கலாம்.

அழற் புண்ணில் காணப்படும் கெட்ட தசையை நீக்குவதற்குத் துருசை உபயோகித்து அன்ன பேதி நீரினுல் கழுவ வேண்டும்.

வளிப் புண்ணின் கெட்ட தசை தானுகவே வெளி வந்துவிடும்.

**புண்ணை நிரவவைக்கும் மருந்துகள்.**—ஐயப் புண்ணைத் தூய்மை செய்து, பிறகு, துவர்ப்புள்ள குடிநீரில் துணித் துண்டை நனைத்து வைத்து கட்டலாம். சிலர் தேனையும் பயன்படுத்தலாம் என்கின்றனர்.

பித்தப் புண்ணில் மருந்து நெய்களைப் பயன்படுத்தலாம். வளிப் புண்ணில், எண்ணெயும், தேங்காய் நெய்யும், பயன்படும். பித்தப் புண், வளிப்புண் இவ்விரண்டிலும் (அமிர்தமெழுகு) வீரவெண்ணெயும், ஐயப் புண்ணில் வெங்காரப் பச்சையும், மாசிக்காய், கடுக்காய், களிப்பாக்கு இவற்றால் ஆகிய பொடியும் தூவு மருந்தாக வழங்கலாம். புண்கள் முற்றும் ஆறியபின் தேங்காய் நெய்யை வெளியில் பூசலாம்.

தோலின் நிறம் உண்டாவதற்கு யானைத்தோல் கருக்கை தேங்காய் நெய்யில் குழைத்துப் பூசலாம். அவ்விடத்தில் மயிர் முளைப்பதற்கு யானை மயிரைச் சுட்டு, தெங்கு நெய்யில் குழைத்து பூசலாம். இதற்கு யானைத்தந்தமும் பயன்படும்.

**குறிப்பு.**—மருதோன்றி மணப்பாகும், இலுப்பைப்பட்டைப் பூச்சும் தோலின் நிறத்தையுண்டாக்குவதற்குப் பயன் படுத்தலாம்.

**சிலைப்புண்**

இதனையே நாடி விரணமென்றுங் கூறுவர். இவை பெரும்பாலும் நாடி நரம்புகளிலுண்டாகும். அன்றியும், தசை நார்களின் இடைச் சந்து களிலும் உண்டாகும். இவைகள் துவக்கத்தில் சிறுகட்டிகள் போலவே தோன்றும்.

**சிலைப்புண் பிறக்கும் வகை.**—நாடி நரம்புகளில் பிறக்கின்ற கட்டியா னது பழுத்து உடைந்து நச்சுத் தன்மை யடையின், அந்த நரம்பைப் பற்றிய தசை முதற்கொண்டு என்புவரை சிலையோடும். எவ்வாறெனில், அது ஒரு நரம்பைப்பற்றினும் அதற்கு பல நரம்புகளும் சம்பந்தப் பட்டு வலைப் பின்னலைப் போலிருப்பதால், சிலையோடுதற்கும், சீழ் கொள்ளு தற்கும், ஒரு வழியேயன்றிப் பல வழிகளுமுண்டென்றறிக. ஆகையால் சிலையோட வொட்டாமல் வகையாக உட்படுத்தவேண்டும்.

**எண்**—இது 1. வளிசிலைப்புண், 2. பித்தசிலைப்புண், 3. ஐயசிலைப்புண், 4. முக்குற்றச்சிலைப்புண், 5. என்புச் சிலைப்புண் என ஐவகைப்படும்.

**வளிசிலைப்புண்.**—இது நுட்பமான முகத்துடன் நிறமாற்றத்துடன் பிறந்து மிக்க நோயைத் தரும். இக்கட்டியானது பழுத்தடைந்த பின், அதில் நுறைத்த நீர் வடியும். அந் நீரானது கருஞ்செம்மை நிறம் பொருந்தியதாகவும், இராக் காலங்களில் மிகவும் பெருகுவதாயுமிருக்கும் வருத்தமும் சற்று மிகுந்தேயிருக்கும்.

**பித்தசிலைப் புண்.**—இப்புண் பிறக்கையில் அவ்விடத்தில் எரிச்சலும், சுரமும், நீர் வேட்கையும் உண்டாகும். பழுத்துடைந்தபின், மஞ்சள் நிறத்துடன் சுடுகையுள்ள துர்நாற்றச்சீழும் குருதியும் பகற் காலத்தில் ஒழுகுவதாயிருக்கும்.

**ஐயசிலைப்புண்.**—இது தடித்துக் கெட்டிப்பட்டு மினுமினுப்புடன் இருக் கும். இக்கட்டி பழுத்துடைந்தால் சீழ் வடியும். மிக்க நமைச்சலுண் டாகும்.

**முக்குற்றச்சிலைப் புண்.**—இது வளி முதலிய மூன்று சிலைப்புண்களுக்கு முள்ள குணங்களையெல்லாம் பெற்றிருக்கும். இது குணமடையாது.

**என்புச்சிலைப்புண்.**—என்பின் நரம்புகட்குத் துன்பத்தைக் கொடுக்கும். இது பழுத்துடைந்தால் இதினின்றும் குருதியும் சீழும் வடியும். அவ் வாறு வடியும் குருதியும் சீழும் சிறிது சுடுகையுடன் பொருந்தியதாயிருக் கும். இப்புண் மிக்க நோயைத் தரும். இது தீராதாம்.

**பொதுப் பரிகாரம்.**—சிலேப்புண்களில் முதலில் அவற்றிலுள்ள மலி னங்களை வெளிப்படுத்தவேண்டும். இதற்குச் சிறந்தது காரமேயாகும். குற்றத்திற்கேற்றவாறு காரத்தை வளிசிலேப் புண்ணேயில் மருந்தெண் ணெயுடனும், பித்தசிலேப்புண்ணில் ஆனெய்யுடனும், கபசிலேப்புண்ணில் தனியாகவும் வழங்கவேண்டும். அவ்வாறு செய்வதால் சிலேப்புண்ணி லேற்பட்ட புரைகளிலிருக்கக்கூடிய அழுக்குகள் வெளிப்படும். பிறகு, புண்ணை ஆற்றக்கூடிய மருந்தெண்ணெய்களைப் பயன் படுத்தவேண்டும்.

**ஊன் பூச்சுத் தைலம்.**—இம் மருந்தெண்ணெயால் புண்களிலுள்ள கெட்டுப்போன தசைகள் நீக்கப்பட்டு குற்றம் நீங்கிப் புண்கள் ஒழுங்காக நிரவிவரும். இம் மருந்தில் சங்கு சுட்டபொடி, செந்நாயுருவிச்சாம் பலுப்பு, எள்ளுக்காய்த்தோல் சாம்பலுப்பு என்பவை சேரும்.

சிலேபபுண்கள் ஒருகால் புரையோடி வேறேரிடத்தில் இன்னொரு முகம் காண்பித்துடைதலுமுண்டு. இதை மெழுகுத்தைலம், புங்கெண்ணெய் இவ்விரண்டை ஒரளவாகக் கலந்து புண்ணில் பீச்சவேண்டும்.

பூவரசம்பட்டைத் தைலத்தை உள்ளுக்குங் கொடுத்து மேலுக்கும் பூசலாம். பூதகரப்பான்பட்டைத் தைலம் மேலே பூசப் பயன்படும்.

ஈரிடத்தில் கட்டியுண்டாகியோ அல்லது ஓரிடத்தில் கட்டியுண்டாகியோ உடைந்துண்டாம் இலேப்புண்களை வெள்ளிச் சலாகை கொண்டு புண்ணின் ஆழத்தை அறிந்து கொள்ளவேண்டும். பிறகு இதனைக் காரசீலை கொண்டு பெருக்கவேண்டும்.

**சிலேப்புண்ணைப் பெருக்கக்கூடிய மருந்துகள்.**

நாயுருவியப்பு, எள்ளுக்காய்த்தோலுப்பு இப்விரண்டையும் வேப்பமுத்து நெய் அல்லது எள்நெய்யிற் கலந்து துணித்துண்டிற்றேய்த்து வைக்கலாம். இவ்வாறு செய்யின் குருதி மிகுதியாய்ப் பெருகுமாஞல் உடனே அதை நிறுத்திவிடவும்.

கெட்ட ஊன் வளர்ச்சி யிருப்பின் மேலும் இம்மருந்தையே வழங்க லாம். கெட்ட ஊனில்லாதிருப்பின் புண்ணையாற்றக் கூடிய மருந்தைப் பயன்படுத்த வேண்டும். அவை.—1. மயில் துத்தம், 2. ஊமத்தைச்சாறு, 3. குப்பைமேனிச்சாறு, 4. தெங்கு நெய் இவை சேர்த்துக் காய்ச்சிய மருந்தாயின் மிக்க பலன் தரும். ஏனெனின் கெட்ட ஊன் வளர்ச்சியைக் கரைப்பதற்கும் புண்ணை ஆற்றுவதற்கும் வன்மையுடைய பொருள்கள் சேர்ந்திருக்க வேண்டும். அல்லாமலும் எருவாயிலுண்டாம் புண்கள் பெரும்பான்மை நோயுள்ளதாகையால், அதனைத் தணிக்கக்கூடிய தழை களும், சேர்ந்துள்ளதாயிருத்தல் நலம். மேற்கூறிய பொருள்களுள் 1. துரிசு கெட்ட ஊன் வளர்ச்சியைத் தடுக்கும், 2. ஊமத்தைத் துன்பத்தைக் குறைக்கும், 3. தேங்காய் நெய் புண்ணையாற்றும், 4. குப்பைமேனி கிருமியையணுகவொட்டாது.

மேற்கூறியவாறு, சிலேப்புண்ணேற்படின் அதை வெள்ளிச் சலாகை கொண்டு நிதானித்தபின் காரநூல் கொண்டு அதனை அறுத்துவிட வேண் டும். இச்சிலேப் புண்ணனது எருவாய்க்கருகிருப்பின் சலாகையை அதன் வழியாகச் செலுத்தியதனை எருவாயினுட் புறத்தில் வரும்படி செய்யு

வேண்டும். அதன்பின் கார நூலை தக்கவாறு செலுத்தி எருவாயின் உள்வழியாக இழுத்தெடுத்தல்வேண்டும். பின்னர் இருபக்க முனைகளை யும் சேர்த்து முடியவேண்டும். அறுபட்ட புண்ணையாற்றுவதற்குப் புங்கு நெய்யைப் பயன்படுத்தவேண்டும்.

**கார நூல் செய்விதம்.**—உத்தாமணிப்பால், எருக்கம்பால், துரிசு ஒரெடை. இப் பாலில் மயில் துத்தத்தையும் மஞ்சளையும் இழைத்து அதில் நூலை நனைத்துக் காய வைக்கவும்.

## மூலம்.

“ அனில பித்த தொந்த மலாது மூலம் வராது.”

### காரணம்.

“ காயத்தின் மூலங் கண்டவிதங் கேளு
பாயொத்த தீபனம் பரிந்தே யடக்கினும்
மாயை மயக்க மலத்தை யடக்கினும்
ஓயுற்ற குண்டலிக் குள்புகும் வாயுவே.”
“ வாயு புகுந்து மலத்தோ டபானத்தைத்
தேயுவைக் கூட்டித் திரட்டிச் சுருக்கிடும்
தோயும் மலம்வரின் சுருக்கி முன்னேநின்
றேயு முளைபோ லபான னிருக்குமே.”

**வகை.**—இதனைச் சிலர் அறுவகையென்றும், வேறு சிலர் 9 வகை என்றும், மற்றும் சிலர் 21 வகையென்றும் கூறுவர்.

**மூலம் 21 வகை.**—1. நீர் மூலம், 2. செண்டு மூலம், 3. முளை மூலம், 4. சிற்று மூலம், 5. வறள் மூலம், 6. குருதி மூலம், 7. சீழ் மூலம், 8. ஆழி மூலம், 9 தமரக மூலம், 10. வளி மூலம், 11. பித்த மூலம், 12. ஐய மூலம், 13. இருகுற்றக் கலப்பு மூலம், 14. வினை மூலம், 15. மேக மூலம், 16. பவுத்திர மூலம், 17. கிரந்தி மூலம், 18. குத மூலம், 19. புற மூலம், 20. சுருக்கு மூலம், 21. சவ்வு மூலம் என்பவையாம்.

1. **நீர் மூலம்.**—கொப்பூழில் வலியுண்டாகும், அடிவயிறு பொரு மும், மலம் வறளும், வாயில் நீர் சுரக்கும், காற்றுப் பரியும்போது அத னுடன் நுரைநீர் வெளிப்பட்டு, விரைவில் மலம் வருவது போலக் காணப் பட்டு அடிக்கடி எருவாய் வழியாய் நீர்ப் பாயும்.

2. **செண்டு மூலம்.**—எருவாயில் கருணைக் கிழங்கின் முளையைப் போல உண்டாய் மூன்று நாட்குப் பிறகு மிகவலியுண்டாகி மலம் தீய்ந்து, குருதியும் தண்ணீருமாகக் கசிந்து, இரைச்சலுடன் எருவாய் சுருங்கிவிடும்.

3. **முளை மூலம்.**—எருவாயில் மஞ்சளின் முளையைப் போல ஒரு முளை தோன்றிக் கடுத்துத் தடித்து எரிச்சலுண்டாகும். அடி வயிறு கல் போலாகும். எருவாய் சுருங்கி நமைச்சலுடனும், இரைச்சலுடனும் குருதி இறங்கும். எப்பம் அடிக்கடி நேரிட்டு மலந் தீயும்.

4. **சிற்று மூலம்.**—எரு வாயில் சிறுமுளைகள் பலதோன்றி உடலெரிச்சல், மயக்கம், வயிறு மினுமினுத்துக் குத்தல், இரைச்சல், இழுத்துப் பிடித்தல், பொருமல், இளைப்பு, உடல் வெளுப்பு, பசியின்மை அல்லது குறைவு முதலிய காணும்.

5. **வறள் மூலம்.**—மலக்கட்டு, செந்நீர் துளித்துளியாய் விழுதல், எப்போதும் உடல் வெப்பமாகவே இருத்தல், உடல் உலர்தல், உடல் வன்மை குறைதல், எருவாயில் நோயினன் அறியமுடியாதபடி முளைக்களிருத்தல், சாந்தமின்றிச் சண்டையிடுதல் ஆகியவை யுடையதாம்.

6. **இரத்த மூலம்.**—கொப்பூழில் நோவெடுத்து மலவாயில் சிறிய கதிர்போலச் சரேலென்று குருதி ஒழுகுதல், உடல் வற்றி வெளிறுதல், கைகால் ஓய்தல், சோகை, மார்பிடிப்பு, தலைவலி யுண்டாதல், கண்ணிரண்டும் மஞ்சள் போலாதல், தள்ளும்படியான மயக்கம் காணலாய குணங்களுண்டாகும்.

7. **சீழ் மூலம்.**—எருவாய் கடுத்து எரிதல், சீழும் தண்ணீருமுண்டாதல், உடல் உலர்ந்து வெளுத்து மஞ்சளாதல், வாய் நீர் சுரத்தல், நடை குறைதல், சிறுநீர் மஞ்சளாகலாயிறங்கிய தன்மையுடைத்து.

8. **ஆழி மூலம்.**—எருவாயில் நீண்ட ஒரே முளை வள்ளிக் கிழங்கு போல் திமிர்த்துத் தோன்றுதல், நீர், சீழ், குருதி இவை யொழுகல், மலச்சிக்கல், வன்மை குன்றல், அயர்ச்சி, காரமுள்ள பொருள்களில் பிரியமின்மை உண்டாகுதலாம்.

9. **தமரக மூலம்.**—எருவாயில் உலக்கைப் பூண் போலாவது தாமரைப்பூப் போலாவது மலர்ந்திருத்தல், மலம் துண்டு துண்டாயிறங்கல், குருதி வெளிப்படல், நமைச்சல், வயிறிரைதல், ஊதல், நீரிழிதல், பசி மந்தம், மேல் மூச்சு, அசதி முதலியன வுளவாம்.

10. **வளி மூலம்.**—எருவாயானது கொவ்வைப் பழத்தைப் போல் சிவந்து, வாதுமைப் பூப்போல் வளர்ந்து, கருப்பாயும், மெல்லியதாயும், கடுப்பு, நமைச்சல், குத்தல், திமிர்த்தல் உண்டாயிருக்கும். அவ்விடத்தில் மயிர் அதிகமாக முளைத்திருக்கும். மலம் சிக்கிச் சுருக்கும், சில வேளையில் வெண்மையாய்ப் பேதியாகும். குடலில் வலி, தலைவலி முதலியவை யுண்டாகும்.

11. **பித்த மூலம்.**—எருவாயில் பருத்திக் கொட்டையைப் போலவும் நெல்லைப் போலவும் முளைகளுண்டாதல், தலைவலி, மலக்கட்டு, மலம் ஆட்டுப் புழுக்கையைப்போலத் திரிதிரியாகவும் செந்நீருடனும் சீதத்துடனும் வெளிப்படல், எருவாயில் காப்பு, எரிச்சல், நீர் வேட்கை, வியர்வை, கலக்கம், சீற்றம், வன்மைக் குறைவு ஆகிய இவையுண்டாகும்.

12. **ஐய மூலம்.**—எருவாயில் வெண்மையான முளைதோன்றுதல், எந்நேரமும் நமை, எரிச்சல், கடுப்பு, சீழ் தண்ணீருடன் கடுத்துக்கொண்டு மலமிறங்கல், சிறுநீர் சூடாயிறங்கல், அறிவு மாறுட்டம், விந்து குறைவு, உடல் வெளுத்தல், சுவை கெடல் உண்டாகு மென்பதாம்.

**13. இரு குற்றக் கலப்பு மூலம்.**—எருவாய் குறுகி, கோழிக் கொண்டையை யவ்விடத்தில் பதித்து வைத்ததுபோற் காணல், நடக்கக் கூடாமை, வயிறு பொருமல், வருத்தம், நடுக்கம், வியர்வை, நீர் வேட்கை, பேதி, உடல் அட்டையைப்போல் சுருங்கல், திடுக்கிடுதல் ஆகியனவையுடையதாம்.

**14. வினை மூலம்.**—சோறு செரியாதிருத்தல், பசியின்மை, புளியேப்பம், அடிவயிற்றில் குத்தல், சீற்றம், மலக்கட்டு, கைகால் ஓய்ச்சல், வயிற்றிரைச்சல், நரம்புகள் யாவும் இழுத்தல், கடுத்தல் முதலியவையாம்.

**15. மேக மூலம்.**—ஆண் குறியில் வெள்ளை விழுதல், எருவாயில் குருதி போதல், இரைச்சலுடன் பேதி, சிறுநீர் எரிவு, கால் வீக்கம், தலைவலி, உடல் பாரமாய்க் காணல், திமிர், சிறுநீரில் சர்க்கரையுண்டாதலாகும்.

**16. பவுத்திர மூலம்.**—எருவாயில் கட்டி தோன்றும், சிறுநீர் அடிக்கடி கசியும், கால் கை வீங்கும், எருவாயில் கோழிக் கொண்டையைப் போலிருக்கும், பூக்கள் போல் முளைகள் உண்டாகி அவைகள் கொவ்வைப் பழம்போல் சிவக்கு மெனறபாலதாம்.

**17. கிரந்தி மூலம்.**—ஆண்குறியில் புண், கை கால் கடுப்பு, எருவாயினுள் புண்ணுண்டாகி, கொடி கொடியாய் முளைகள் இளைத்துச் சீழ், செந்நீர், தண்ணீர் இவைகளை வெளிப்படுத்தல், எரிச்சல், கடுப்பு, மலம் கெட்டியாய் வறண்டு எருவாய் வெடிக்கும்படி மலம் வெளிப்படல் உண்டாகும்.

**18. குத மூலம்.**—எருவாயில் மூங்கில் குருத்துப் போல் ஒரு முளை வெளிபபட்டுத் தள்ளினால் சிலருக்கு வருத்தத்துடனும் சிலருக்கு வருத்தமின்றியும் உள்ளே போய்விடுவதாயிருத்தல். சீழ், குருதி போதல், வயிறு மிகவும் பொருமிக் கொள்ளுதல், கால் கைகள் வீக்கம், அடிக்கடி நாவறட்சியுடன் நீர்வேட்கை, தொடைவலி, சீற்றம் இவைகள் உண்டாகலாம்.

**19. புற மூலம்.**—எருவாயில் எண்ணெய் போலவும் தண்ணீர் போலவும், கடுப்புடன் சீழ் இறங்கல், நமை, திமிர், சிறு சிறு சிரங்குகள் மேலெல்லாம் உண்டாதல், கீழ்வாயில் பருப்புபோல் முளை, படுக்க முடியாமை பிணத்தின் முகம் போல முகம் வாடியிருத்தல் உண்டாகும்.

**20. சுருக்கு மூலம்.**—குருதியும் சீழும் தடிப்பாயிறங்கல், செந்நீர் உடலினின்றும் குறைந்து விடுவதால் வேற்றுடம்பாய் வெளுத்தல், உடல் அசைய முடியாமை என்பவையாம்.

**21. சவ்வு மூலம்.**—மூலம் மிகுதியாய் எருவாயினில் சவ்வுபோல் சுற்றிச் சீழும் தண்ணீரும் கசிவதுடன் எரிச்சலுண்டாதலாம்.

## தீரும் தீராதவை.

குத மூலம், செண்டு மூலம், சீற்று மூலம், சீழ் மூலம், ஆழி மூலம், தமரக மூலம், வினை மூலம், ஐய மூலம், இரு குற்றக்கலப்பு மூலம் ஆகிய இவை ஒன்பதும் தீராவாம்.

**மருத்துவம்.**—நாகச் செந்தூரம், இரசகந்தி மெழுகு, அக்கினி குமாரன் பயன் படுத்தலாம்.

**சூரணம்.**—தூதுளைவேர், மருட்கிழங்கு, கருணைக்கிழங்கு, பிரண்டைவேர், ஆரை, காட்டுக் கருணை, மிளகரணைவேர், அறுக்கன்வேர், நீர்முள்ளிவேர், இவைகளை ஓர் நிறையாக எடுத்துத் தூள் செய்து காலை மாலை வெருகடி அளவில் தேனில் கொடுக்கலாம்.

மூல நோயினனுக்கு மலக்கட்டிப்பருப்பின் மூலக்குடார நெய் மிகவும் நன்மைதரும். பழங்கள் சேர்ந்த பேதி மருந்துகளும், பன்னீர்ப்பூத் தேனூறல், கொட்டைத் திராட்சை, பன்னீர்ப்பூமொட்டு, ஆல்பகோரா இவை களையும் வழங்கலாம்.

**மூலத்திற்குநாயுருவி நெய்.**—செந்நாயுருவி முழுவதும் 100 பலம் இதைப் பொடியாக வெட்டிப் பஞ்சுபோலிடித்து, மட்பாண்டத்திலிட்டுத் தூய்மையான ஆற்று நீர் 16 படிவிட்டு, இரண்டு படியாகச் சுருக்கி வடித்து வேறு பாண்டத்திலூற்றி, அதில் ஆனெய் 20 பலம் சேர்த்து, அதிமதுரம், கடகரோணி, செங்கழுநீர்க் கிழங்கு, இலுப்பைப்பூ, கோட்டம், சதகுப்பை, கீழ்க்காய் நெல்லி, சிறுதேக்கு, விடங்கம், சுக்கு, திப்பிலி, மோடி வகைக்கு வராகனெடை $3\frac{1}{2}$ பொடித்துப் பசுப்பால் விட்டரைத்து மேற்படியிற் கரைத் துச் சிறு தீயில் எரித்துப் பதத்தில் வடித்துக் காலையில் ஒரு வேளை $6\frac{1}{2}$ குன்றியெடை கொடுத்து, உடனே சிறிது வெந்நீர் உட்கொள்ளச் செய்யவும்.

**பத்தியம்.**—கைப்பு, புளிப்பு, நீக்கி, பால், நெய், பத்தியப் பொருள்கள், கோழிமுட்டை, பத்திய மீன் இவை ஆகும்.

## மூலத்திற்கு கப்பிரண்டைச் சூரணம்.

கோப்பிரண்டை, வெண்சாரணைவேர், கவிழ்தும்பைவேர், வகைக்குப் பலம்—6, கல்லுப்புப் பலம்—20, கடுக்காய்—20, காய் எல்லாவற்றையும் ஒன்றுபடச் சேர்த்திடித்து வெயிலுலர்த்தி மறுபடியுமிடித்து, துணியில் வடிகட்டி அதில் பலம்—16 எடுத்து, சுக்கு, மிளகு, திப்பிலி, சிலாசத்து, அதிமதுரம், கடகரோணி, அத்தித் திப்பிலி, இந்துப்பு, கடுக்காய், சத்திச் சாரணைவேர், மரமஞ்சள், சதகுப்பை, ஓமம், திப்பிலிக்கட்டை, கோட்டம், மூங்கிலுப்பு, கடுகு, நிலவாகை, நெல்லி, தான்றி, அரத்தை, செவ்வியம், கொடிவேலி வேர்ப்பட்டை, கடுக்காய்ப்பூ, சிவதைவேர் கடுஞ்சீரகம், கரிப் பான், சிறு இலவங்கப்பட்டை வகைக்கு வராகனெடை—6, புன்வறுகலாக வறுத்து இடித்த சூரணத்தை மேற்படி சூரணத்துடன் சேர்த்து, உடல் வன்மை, நோய்வன்மை, காலம், இவைகளை உன்னி, இஞ்சிநீர், சுக்குநீர் சர்க்கரை, நல்ல வெல்லம், சிற்றாமணக்கு நெய், வெந்நீர் ஆகிய இவை களில் ஒன்றைத் துணைமருந்தாகக் கொடுக்கலாம். சூரண அளவு—$\frac{1}{2}$ முதல் 1 வராகனெடையாகும்.

மேலும் இம்மருந்து எருவாய்ச் சுருக்கு, எருவாய்ச் சுற்றியதடிப்பு, எரு வாய்த்தினவு, எருவாய்ப்புண், கொப்பூழ்ச்சூலை, வளியினால் சூலையில் மோதல், குடல்வளி, வளிசம்பந்த நோய்கள், அக்கினி மந்தம், செரிய யாமை இவைகட்கும் பயன்படும்.

**நத்தை இலேகியம்.**—நன்குகக் கொழுத்துப் பருத்த நத்தைகளைக் கொண்டுவந்து கழுவி ஒரு பானையிலிட்டு நீர் ஊற்றிக் கொஞ்சம் உப்பிட்டு வேகவைத்து, ஓட்டை நீக்கி, தசையை அம்மியில் வைத்துப் பால் விட்டரைத்துத் திப்பியில்லாமல் அரைத்து அரைத்து வடிக்கட்டவும். நத்தைத்தசை பலம் 10, இருப்பின் பனங்கற்கண்டு பலம்—10, பசுப்பால் படி—1, கரைத்து வடிக்கட்டி, சாதிக்காய், சாதிபத்திரி வகைக்கு வராகனெடை—2, இவைகளைப் பொடித்து அதில் கலந்து சிறு தீயில் கொதிக்க வைத்து இலேகிய பதம் வரும் வரை சுண்டவைத்து இறக்கவும். தேவையிருப்பின் சிறிது நெய் சேர்க்கலாம். கடைசியில் குங்குமப்பூ ½ முதல் 1 வராகனெடை பொடித்துத் தூவிக் கலந்து விடவும்.

**அளவு.**—புன்னைக் காயளவு—இரு வேளை கொடுக்க மூலத்தில் இரத்தம் வடிவதற்கு இது மிகவும் சிறந்தது.

### ஆமை இலேகியம்—இதுவே கச்சப லேகியம்.

வெங்காயம் பலம்—5, பூண்டு பலம்—¼, கிராம்பு பலம்—¼, கருவாப்பட்டை பலம்—¼, சோம்பு பலம்—¼, உருளரிசி பலம்—¼, சாதிக்காய் பலம்—¼, சாதி பத்திரி பலம்—¼, மஞ்சள் பலம்—¼ இவைகளைப் பொடித்துப் பால் விட்டரைத்துக் கொள்ளவும்.

காராமை.—மேலே நத்தைக்குக் கூறியது போலத் தூய்மை முதலிய செய்துக்கொள்ளவும். பனங்கற்கண்டினளவு, கற்கம், ஆமைத்தசை இவைகள் இரண்டுங்கூடிய நிறை இருக்கவேண்டும். நெய் கொள்ளுமளவு சேர்க்கவும்.

**அளவு**—கொட்டைப்பாக்களவு, குழந்தைகட்குத் கழற்சிக்காயளவு, 2 முதல் 3 வேளை, இச்சா பத்தியம்.

**கருணைக்கிழங்குச் சூரணம்.**—காய்ந்த கருணைக்கிழங்கைப் புளித்த காடியில் வேகவைத்து மேற்றெல் நீக்கிச் சிறு துண்டுகளாக அரிந்து மூங்கில் அல்லது மரத்தட்டில் பரப்பி, நிழலிலுலர்த்திப் பெரும்பான்மையான ஈரம் வற்றிய பிறகு, வெயிலிலுலர்த்தி இடித்துத் துணியில் வடிகட்டிய தூள் பலம்—8, கொடி வேலி வேர்ப்பட்டைத்தூள் பலம் —4, சூரத்துக் கடுக்காய் தோல் தூள் பலம்—1, தோல் நீக்கிய சுக்குத் தூள் பலம்—1 இவைகளைக் கலந்து வேண்டியபோது 1 பலம் எடுத் அதற்குச் சமன் நல்ல வெல்லம் சேர்த்து அரைத்து ½ முதல் 1 கொட்டைப் பாக்களவு கொடுக்க, மூலம், தீர்வதன்றி, வயிற்றுவலி, வயிற்றுப்பொருமல், மலக்கட்டு பசித் தீக்குறைவு இவைகள் தீரும்.

**வேறு.**—வெள்ளிய பற்பத்தைத் தேற்றான் கொட்டை இளகத்தில் கொடுக்க மூல நோய் தீரும்.

## வெளி மருந்துகள்.

கோவையிலையை யிடித்துப் பிழிந்த சாற்றில் கம்பை வேகவைத்துச் சோறாக்கி, அதை யுருட்டி ஒரு பாத்திரத்திலிட்டு, நீர்விட்டு, மறுநாள் அந்நீரை வடித்துப் பின் புதிய நீர் விடவும். இப்படி 8 நாள் செய்து 9-ஆம் நாள் வேண்டிய அளவு சோறெடுத்து அதற்குச் சம நிறை கோவையிலையைச் சேர்த்து, அரைத்து வில்லைதட்டி மூலமுளை மீது 6 நாள் வரை கட்டிவர முளைமூலம் நீங்கும்.

**வேறு.**—காட்டாமணக்கிலையை ஆமணக்கு நெய் விட்டு வதக்கியாகிலும், காடி நீர்விட்டு வேக வைத்தாகிலும் முளைமீது வைத்துக் கட்ட முளை பெயர்ந்து விழும்.

**கழுவுநீர்.**—ஆல், அரசு, அத்தி இவற்றின் பட்டைகள் வகைக்குப் பலம்—10, நன்றாயிடித்து ஒரு பாண்டத்திலிட்டு நீர்படி 6 விட்டு, 1 படியாய்ச் சிறுக்கிய குடி நீரை முளை மூலத்தின் மீது காலை மாலை 12 நாள் மட்டும் விட்டுக் கழுவுவதுடன், சிவகரந்தை, விட்டுணுகரந்தையிவ்விரண்டையும் ஓர் நிறையாக நிறுத்து அரைத்துச் சுண்டையளவு காலை மாலை பத்திய மின்றி உண்டு வர முளையுதிர்ந்து விழும்.

வேறு

**முளைவிழ.**—கருங் குருவையரிசி படி ½, வெள்ளாட்டுப் பாலில் உலை வைத்து, அதில் ஆலங் குமிழ் 1 பிடி, அத்திக் கொழுந்து 1 பிடி சேர்த்துப் பொங்கிப் பிசைந்து 10 உருண்டையாய்ப் பிடித்து 10 நாள் காலையில் பசுமோரில் கரைத்துக் குடிக்கவும், முளை அழுகிக் கீழே விழும். உடல் வன்மையறிந்து பத்தியம் வைக்கவும்.

**ஆவி.**—புளியிலை, துத்தியிலை, முசுமுசுக்கையிலை இவைகளின் சாறு வகைக்குப் படி ¼, 1 பாத்திரத்திலூற்றி, வெள்ளைப் பாடாணம் வராகனெடை ஒன்றை மைபோல் பொடித்துச் சாற்றில் கலக்கி, செங்கல்லைச் சிவக்கச் சுட்டுப் போட்டு, மூலத்திற்கு ஆவி பிடிக்கவும்.

**மேல்பூச்சு.**—கோமூத்திர சிலாசத்தைச் சந்னத்தைப் பன்னீர்விழைத்துத் துணியில் ஊற்றி அதனின்று வடியும் தெளிநீரிலிழைத்து மூலத்திற் குப்பற்றிட, எரிச்சல், வருத்தம் இவை நீங்கி, மூலம் சுருங்கும் காரம், அக்கினி, சத்திரம் முதலியவும் செய்யலாம்.

**காரம்.**—(க்ஷாரம்) **செய்முறை.**—மிருதார சிங்கி, கவுரி, தாளகம், வெள்ளை, துத்தம் வகைக்குப் பலம் ¼, துணி சுட்ட சாம்பல் பலம் ½ எல்லாவற்றையும் பொடித்து ஒன்றாகச் சேர்த்துக் காரமாக வழங்கலாம்.

**வேறு.**—மஞ்சள், வசம்பு, சங்கு, பேரண்டப் பொடி, பால் துத்தம், வெள்ளை ஓர் நிறை, துணிச்சாம்பல் ஒருபங்கு கலந்து பயன் படுத்தலாம்.

வீக்கங் கொண்டிருக்கும் மூலத்திற்குத் துத்தியிலையை அவித்து இளஞ் சூட்டில் வைத்துக் கட்ட, குணப்படும். மேற்படி இலையைச் சிற்றாமணக்கு நெய்விட்டு வதக்கியுங் கட்டலாம்.

**புகை.**—வீரம் பங்கு (1), மனித என்புப் பொடி பங்கு (10), ஈய இலைகள் பங்கு 10), பெருச்சாளி மலம் பங்கு (10) நன்றாயுலர்த்திப் பொடித்துப புளியம் பொருக்கினாலுண்டாகுகப்பட்ட தணலில் மேற்படி பொடியைப் போட்டு அதனின்றெழும் புகையை மூலத்தில் தாக்கும்படி செய்யவேண்டும். இவ்விதப் புகை சென்று மூலத்திற்கு மிகவும் பயன் படும்.

மூல நோயில் சத்திரத்தினால் (க்ஷத்திரம்) மருத்துவம் செய்யும் பொழுது தவறு ஏற்படின் அதனாலுண்டாம் தீப் பண்புகள்.

(1) எருவாயி லெரிச்சல்.

(2) கீழ்க்குடலில் வளிதங்குவதால் ஒலி.

(3) மலமும் நீரும் கட்டுப்படல்.

(4) நாட்பட்ட வேதனையும் ஆண் தன்மைக்குக் குறைவும் ஏற்படும்.

அற்பவிரணம்.

1. **கொப்புளம்.**—உடலில் சூடு மிகுவதாலும், வேனில், முதுவேனில் பெரும் பொழுதாலும் உடல் வறண்டு சிறு சிறு கொப்புளங்கள் தோன்றும். இதனைச் சந்தனச் சாந்து, வெங்காரப் பொரி, தேங்காய் நெய் இவைகளால் குணப்படுத்தலாம்.

2. **முகப்பரு.**— இவை பெரும்பாலும் காளையர்க்கு முகங்களிலுண்டாகும். இது இலவம் முள்ளைப் போல் அடிபருத்தும் முனையில் கூர்மையுள்ளதாகவும் வருத்தங் கொடுப்பதாயுமிருக்கும். இதனை நகத்தினால் கிள்ளப்பெறின் மிகவும் வருத்தத்தையும் நோக்காட்டையுந்தரும் இதுவன்றி விருத்தியுமாகும். இந்நோயில் அழலும் ஐயமும் தனனிலை வளர்ச்சியடையும்.

**மருத்துவம்.**—சந்தனப்பசை, சங்குப்பசை, புனுகு. அதனுடன் நண்டுக்கல்லை இழைத்துக் கலந்து பூசலாம். சங்கைத் தாய்ப்பாலில் இழைத்து அதனுடன் கறிவேப்பிலை சேர்த்து அரைத்துப்போடலாம். செஞ்சந் தனத்தைப் பழச்சாற்றிலரைத்துப் பூசலாம். பசலைக் கீரையை யவித்துக் கடைந்து பசு வெண்ணெய் சேர்த்துப் போடலாம். பழம் பாசியையரைத்துப் பூசலாம். உமிழ் நீரைத் தடவலாம்.

உள் மருந்தாகப் பவழநீறு, சங்குநீறு கந்தகம் சேர்த்த மருந்துகளைக் கொடுக்கலாம்.

முகப்பரு பலகாலும் ஒருவனுக்கு வந்து கொண்டிருந்தால் அவனுடைய முகத்தை நாடோறும் சங்கு நீரில் கழுவச் செய்யவும். தேங்காய்ப் பாலைக் காய்ச்சி எடுத்த நெய் முகப்பருவுடைந்து சீழ் வெளிப்பட்ட பிறகு ஏற்படும் புண்ணையாற்றும்.

**தவளைச் சொறி.**— இது ஐயவளிகளினுலுண்டாகிறது. இது தவளை முதுகிலிருக்கும் முள்ளைப்போல் அல்லது தாமரைக் கொடியிலிருக் கும் முட்களைப் போன்ற முளைகளைத் தோலிலுண்டாக்கும். இதனைப் பொதுமக்கள் தவளையைத் தொடுவதால் உண்டாகுமென்பர்.

**மருத்துவம்.**—பனிநீர், பிரமதண்டின் விதைக் குழித்தைலம், பசலைக் கீரையையும் வெங்காரத்தையும் சேர்த்தரைத்து கற்கம் ஆகிய இவைகளை மேலே பூசக் குணமடையும்.

**அக்குள் கொப்புளம்.**— இஃது அழல் குற்றத்தாலுண்டாகக்கூடியது. அக்குளைச் சுற்றியாவது, உட்புறத்திலாவது நெற்பொரியையொத்த மெல் லிய கொப்புளங்களுண்டாகும்.

**அக்குள் கட்டி.**— அக்குளினுள்ளாவது அரைகளுக்குள்ளாவது நிலப் பூசனிக் கிழங்குபோலப் பருத்துக் கெட்டிப்பட்ட கட்டிகளுண்டாகும். இவ்விதமான கட்டி சுரத்தினுல் மெலிந்தவர்கட்கு அழற்குற்றம் வளர்ச்சி யடைந்தும், வளி ஐயங்கள் குறைந்தும் சதைத்துண்டுபோலுண்டாகியும், அக்கட்டிகள் 5, 7, 15 நாட்களுள் மரணத்தை விளைவிக்கும். இவ்வெல் லையைத்தாண்டித்தான் தீரும்.

**மருத்துவம்.**—இதற்குத் துவக்கத்தில் வெண்ணெயுடன்செம் மண் கலந்து அரைத்துப் பூசலாம். மேற்படி கொப்புளங்களினுல் கட்டிகள் வரின் கொப்புளங்களைச் சரியாகப் பரிகாரஞ்செய்யாததினுலுண்டயின என அறியவும். அதற்கு அமுக்கராங்கிழங்கைப் பழச்-சாற்றிலரைத்துப் பூசலாம்.

**அக்குள் நிலப்பூசனிக் கட்டி.**—இக்கட்டி கண்டிருக்கையில் முதலில் ஒற்றடமிடவேண்டும். இவற்றுள் சிறப்பான ஒற்றடம் மூங்கில்கட்டை, பாக்கு மரக் கொம்பு, இவற்றிலொன்றைக் கும்பிச்சாம்பலுள் புடைத்து நன்றாகச் சூடு எறியபின் கட்டிகளின்மீது துணியைப் பரப்பி யதன்மேல் சூடேற் றிய கட்டைகளை வைத்து ஒற்றமிடலாம்.

மஞ்சள், துத்தியிலை, சுண்ணும்பு இம்மூன்றையும் நன்றாக அரைத்துக் கட்டியின்மீது போடலாம்.

**அக்குள் எரிச்சல் கட்டி.**—இக் கட்டிகள் முன்கூறியவாறு சுரம் கொண் டிருப்பவர்களுக்கும் அதனுல் மெலிந்தவர்களுக்கும் சதைத் துண்டுகளை யொத்த கட்டிகள் அக்குளில் உண்டாகும். இக்கட்டிகட்கு இரசம் சேர்ந்த களிம்புகள் குளிர்ச்சியுள்ளதாக இருக்கும்படி வழங்கவேண்டும்.

**புற்று நோய் (வன்மீக ரோகம்).**—இது பாதம், கை, கால், இரண்டு எலும்புகள் சேர்ந்த இடம் ஆகிய இவ்விடங்களில் புற்றினது முகங்களைப் போலச் சிறு முகங்களையுடைய கிரந்திகளைப் பெற்றிருக்கும். இதனுல் நோவும், தினவும், வியர்வையும் மிகுதிப்படும்.

**பரிகாரம்.**—இரசமும்கந்தகமும் சேர்ந்த மருந்துகளை உள்ளுக்கு கொடுக்கவேண்டும்.

**ஆணி.**—இது பருக்கைக்கற்களின்மேல் நடப்பதாலும், முட்கள்தைத்து ஓடிவதாலும், அடிப்பாதத்தில் அரம்போலிருக்கும் முடிச்சுகளையுண்டாக்கும்.

**பரிகாரம்.**—நகம் வாங்கும் கருவியினால் இதனைச்சுற்றிலும் சூழ்ந்து ஓர் உறிஞ்சு குழையால் உறிஞ்சியெடுத்துவிடல்வேண்டும். அதன் பின் புண்ணை மருந்துகொண்டு ஆற்றவேண்டும். பச்சையெருவையும் பயனபடுத்தலாம்.

**நகச்சுற்று.**—இது நகங்களைச் சுற்றியிருக்கும் சதையில் நோவோடு கூடிய வீககததை யுண்டாக்கும். இதனால், எரிச்சல் சுரம் முதலியவை உண்டாகும். இதனை விரல் சுற்று எனறும் உகிர்ச் சுற்று எனறுங்கூறுவர். மிக்க வருததந்தைக கொடுத்து நகத்தின் வேரையும் கெடுத்துவிடும்.

**பரிகாரம்.**—எலுமிச்சம்பழத்துளாவது, குமிழம் பழத்துளாவது நோய் கண்ட விரலைப் புதைத்துவிட வேண்டும். அல்லது சுடுசாம்பலை வைத்துக் கட்டி, தாங்ககககூடிய சூட்டிலிருக்கும் நீரில் அவ்விரலைத் தோய்த்துவைத் திருத்தல் வேணடும். அல்லது கும்பிச் சாம்பலைத் தண்ணீரிற்கரைத்துக் கொதிக்கவைத்துத் தாங்கக்கூடிய சூட்டில் நெடுநேரம் வைத்திருந்தால் வலி நீங்கிக் கைவிரல் சிவந்திருக்கும். விரலை நீரினின்றெடுத்தவுடன் ஆமணக்கு நெய்யில் துவைக்கவேண்டும். அல்லது அவ்வெண்ணெயில் நனைத்த துணியைச் சுற்றிவைக்க வேண்டும். கட்டியுடைந்து குணப்படும்.

**சேற்றுப்புண்.**—வெளுப்புநிறம் பொருந்தியதும் துர்நாற்றம் வீசக்கூடியதுமான ஒருவிதப் புண் கால்விரல் இடுக்குகளில் காணப்படும். இது மாரிக் காலத்திலும் மற்றக்காலத்திலும் கெடுதியடைந்த மண்ணையாவது, அவ்வித நீரையாவது எநநேரமும் மிதித்ததினாலும் மிதித்தவுடன தூய்மை செய்யாமையாலும் இந்நோயுண்டாகும்.

அப்புண்ணினின்றும் புளித்த நீர் வடித்துக்கொண்டேயிருக்கும். இதனை விரற் புண், சேற்றுப் புண் என்பர்.

**பரிகாரம்.**—முதலில் நமைச்சலிருக்கும்போது புளியந் தளிரையவித்த நீரிற் கழுவிவிட்டு, அதன் மீது புளியங்காயைச் சுட்டு வைத்துக் கட்ட வேண்டும்.

**வேறு.**—புண் தோன்றிய பின் கடுக்காய். காசுக்கட்டி, மாசிக்காய் இவை களிலொன்றை நீரிலுரைத்துப் போடலாம். அமிர்த மெழுகு, கிளிஞ்சல் மெழுகு இவைகளும் பயன்படும்.

**குறிப்பு.**—செந்நிறச் சேற்றுப் புண்ணென ஒருவகைச் சேற்றுப்புண் ணிருப்பதாகக் கருதுகின்றனர். இது பவழ நிறத்தை யொத்திருக்கும்.

**மரு.**—கரகரப்புடையதும், கடினத்துவமுடையதாயும் உள்ள முளைகள் உடலிற்றேன்றி நாளுக்குநாள் வளர்ந்துவரும். சில தோன்றித் தானாக வுதிர்ந்துவிடுவதுமுண்டு. பாலுண்ணியென்று சொல்லப்படுவது மிதனுள் ளிடங்கும்.

**பரிகாரம்.**—இவ்விதமான மருவின் அடிப்புறத்தைக் குதிரைமயிரால் அல்லது அதைப்போன்ற வொன்றால் நன்றாய்க் கட்டிவிடவேண்டும். நாளுக்கு நாள் இறுக்கிக் கொண்டுவந்தாலுதிர்ந்துவிடும். சவுக்காரம் சுண்ணாம்பு இரண்டையும் சேர்த்தரைத்துப் பூசிவர மரு விழுந்துவிடும். இதனால் புண்ணுண்டானால் அதை ஆற்றிவிடவேண்டும்.

**வேறு.**—மொச்சைக் கொட்டையை நீரிலுரைத்து நீண்டநாள் பூசிவர நீங்கும்.

**ஆட்டதர் கொப்புளம்.**—சிறுசிறு கொப்புளங்கள் பாசிப்பயிற்ருலுண்டான மணிபோல் குழந்தைகளுக்குக் காணும்.

**வரகு கொப்புளம்.**—வரகு அரிசிபோல் உடல் முழுமையும் சிறு கொப்புளம் போல் காணப்படும்.

**தீர்வு.**—வெங்காரப பொடியை தேங்காய் நெய்யில் குழைத்துப் பூசலாம்.

**வேறு.**—கார்போகி, நீரடிமுத்துப் பருப்பு, கொப்பரைத் தேங்காய், கருஞ்சீரகம், கிச்சிலிக கிழங்கு, கசகசா, கஸ்தூரி மஞ்சள் இவைகளைத் தேஙகாய் நெய்யிலேனும் புளித்த காடியிலேனும் அரைத்துப் பூசலாம்.

## பவுத்திரம்.

**வேறு பெயர்.**—பகந்தரம், ஆசனருடி.

**இயல்.**—எருவாய், சிறுநீர்ப் புழை, யடுத்து உள்ளேனும் வெளியிலேனும், உள ளும் வெளியிலேனும், வளையம்போலத தொளைகளிட்டு வருமாதலால் இபபெயர் பெற்றது

**காரணம்.**—எந்நேரமும் குந்திக்கொண்டிருத்தல், எப்போதும் கடின இருக்கையில் உட்கார்ந்திருத்தல், குதிரையேற்றம், யானையேற்றம், மூல நோய உண்டாக்கக்கூடிய பண்டஙகளை யருந்தல், இந்நோய் விளைவதற்கான பொருள்களையும் விருப்பமில்லாத பொருள்களையும் அருந்தல், விருப்ப முள்ள பொருள்களை விலக்கல், மூலநோய் நீடித்திருக்கச் செய்தல், காரசாரங்களை மிகுதியாக வுண்ணல், வெள்ளை முதலிய மேகப் பிணிகளை, யுடனே நீக்காதிருததல், கண் விழித்தல் இவைகளாம். அன்றியும், உடலிற் சேர்ந்த வுட்டிணத்தால், மலக்கட்டு, நீர் அருகல முதலியவை களுடன் கிருமிகள் வளையத்தின் ஓரஙகளில் குழல்களைப்போன்ற துளைகளை யுண்டாககி, அதன காரணமாய மூலத்தின் வெளியிலாவது உள்ளிலாவது அமைந்துள்ள சனைகளின குருதிக் குழைகள் கெடுதியடைந்து பலாக்காய் முளைகள் போலக கட்டிகள் நெருஙகவுண்டாகும். அப்போழுது அவ் விடத்தில் வியர்வையும், இரணமும பெருகும். இக்குறிகளைக் கண்டவுடன் மருத்துவம் செய்யாவிடில், விரைவில் முளைகளையுண்டாக்கி அவ்வழியே காற்றையும் மலத்தையும், சிறுநீரையும் வெளிப்படுத்தும். துளையுண்டாகக்கூடிய இடம் பிறப்புறுப்புகளிலும், பிறப்புறுப்பிற்கும் எருவாய்க்கும் இடையிலுள்ள இடங்களிலும் எருவாயிலு மென அறிக.

**வகை.**—இது எண்வகைபபடும். அவை :—1. எருவாய்ப் பவுத்திரம், 2. கொடிப் பவுத்திரம், 3. பக்கப் பவுத்திரம், 4. மூலப் பவுத்திரம், 5. கிரந்தி பவுத்திரம், 6. மேகப் பவுத்திரம், 7. எருவாய்க் கண்டமாலைப் பவுத்திரம், 8. சரகண்டமாலைப் பவுத்திரம்.

1. **எருவாய்ப் பவுத்திரம்.**—உடல் மெலிந்து மிகுதியாகச் சுரம் தோன்றி யுடனே விட்டுவிடும். எச்சில் வாயின நடுவில் கடுததலும், குதத லும் நோக்காடுமுண்டாகிக் கட்டியைப்போல் காணபபடும். மயக்கமுண்டா கும். எச்சில் வாய இயல்பாயும், மலததுடன் ஒருவேளை செந்நீரும், ஒரு வேளை வாய் சுருஙகிச் செந்நீருடன் சீயுங் கலந்து விழும.

2. **கொடிப் பவுத்திரம்.**—கீழ்வாயில் முன்னர், சடையைப் போல் இருந்து பிறகு அது கறுத்து வீங்கிப் பருத்துப் பருத்தி விதையைபபோலக் கண்விடடுப் புண்ணுகி, அப்புண சற்று மலாநது காணும். கொடி நரம்பு அழுகிப் பலகண்கள் வைத்து அவைகளின் வழியாய் மலமும் நீரும் வெளிப்படும்.

3. **பக்கப் பவுத்திரம்.**—விதையின் நடுநரம்பைப்பற்றி வலப்புறமேனும் இடப்புறமேனும் இரண்டு பக்கங்களிலேனும் புடைத்துக் கட்டியாகிப் பழுத் துடைந்து செந்நீர் சிந்தும். அவ் வழியில் நீர் அருகியும் சில காலததில் சிறுநீர் ஒழுகியும் வரும்.

4. **மூலப் பவுத்திரம்.**—எருவாயிலும, குறியினும் விறுவிறுப்புடன் கடுப்புக் காணும். அன்றியும், நரம்புகள் புடைத்து விம்மிக் கருணைக் கிழங்கு முளையைபபோன்ற வுருவஙகளைப பெற்று செந்நீர் கசியும். அவை நீர் வறண்ட காலத்து ஒன்ருய்த் திரண்டு கட்டியாகி யுடைந்து நீராகவே சிந்தும். அடிதள்ளி முளையுங் காணும்.

5. **மேக பவுத்திரம்.**—மேகநீர் மிகுந்து விதையில் கழலையாகத் திரண்டு பழுத்துடைந்து சீழ் சிந்தும். மேலும் அவ்விடத்தில் பனித்துளி போல் நீர் பரவி நிற்கும். மெய் மரத்துக்காணும். கை, கால், கண் எரிவு, உடல் ஒருவேளை இளைததல் அல்லது பாரித்தல் அல்லது நோக் காட்டை யடைதல், உணவு ஏலாமை, குளிருடன் சுரமுண்டாதல் லாகிய வையாம்.

6. **இரந்தி பவுத்திரம்.**—எச்சில் வாயின் வளையத்தில் கடுப்பும் நோயு டன் கூடிய கட்டி யுண்டாய்ப் பழுத்துடைந்து செந்நீர் விழும். நாளக்கொடி களில் சுரப்புண்டாய், உள் வளையத்திலும் ஆண்குறியின் கழுததிலும் புண்ணுண்டாகிக் குறியினடியில் வீக்கமும் மேலிடடு, நீர் சுருங்கித் துளித் துளியாய் விழுவதுடன் நாற்றமும் உண்டாகும்.

7. **எருவாய்க் கண்டமாலை பவுத்திரம்.**— எருவாய் வளையத்தைச் சுற்றிக் கழலைகள் கண்டுகண்டாய்க் கண்டமாலைபோல் காணும். அம்பினுல் குத்தல் போன்ற வலியுண்டாம் ; சுரங காயும். அக்கழலைகளில் சில்லி யடை போனற கண்கள் உண்டாகி அக்கண்களின் வழியாய் நீரும் மலமும் வெளிப்படும். தினவு காணும், செந்நீர் பாயும், சொரிந்தால் மிக எரியும், மனக் கலக்கமுண்டாகும்.

8. **சரகண்ட மாலைப் பவுத்திரம்.**—கீழ் வாய்ப்புறத்தில் கருணைக்கிழங்கு முளைபோற் றேன்றி அவ் வாயையடைத்து சுரந்து வீங்கி நோக்காட்டைத் தந்து வெடித்து, குருதியுஞ் சீழும் சிந்தும். அம்புகளைத் தொடுத்துப்

பொத்தனுண்டாக்கியதுபோல அம் முளையில் புற்றுகளுண்டாகிப் பொருமி வீக்கங் காணப்பட்டு, பிறகு அடுக்கடுக்காய் அடைபோல் வீங்கி யழுகித் துர்நாற்றம் வீசும்.

**தீரும் தீராதவை.**—சரகண்டமாலைப் பவுத்திரம், கொடி பவுத்திரம், எருவாய்க் கண்டமாலைப் பவுத்திரம் ஆகியவை தீரா ; மற்றவை தீரும்.

## மருத்துவம்.

**சண்ட இரசபற்பம்.**—சாதி இலிங்கத்தைச் சங்கத் திராவகத்தில் அரைத்து வில்லைதட்டிக் காயவைத்து, ஓர் அடி கனத்த மட்சட்டியிலிட்டு வாய் பொருத்தமுள்ள மற்றொரு சட்டியால் மூடி, 7 சீலை வன்மையாய்ச் செய்து எரிக்கப் பதங்கம் ஏறும். மறுபடியும் அப் பதங்கத்தை மேற்படி சங்கநீரால் அரைத்து, முன்போலவே சட்டியிலிட்டு எரிக்கவும். பதங்கம் மேலேறுமல் அடிச்சட்டியில் தங்கி நிற்கும்வரை எரித்தெடுத்த பற்பத்திற்குச் சண்ட இரச பற்பமென்று பெயர்.

**அளவு.**—அரிசி அளவு பனைவெல்லத்தில் புதைத்து மூன்று நாள் காலையில் ஒருவேளை கொடுத்து, உப்பில்லாப் பத்தியம் வைக்கவும். காய்ச்சல் மிகுதியாயிருப்பினுங் கொடுக்கலாம்.

**கழற்சி எண்ணெய்.**—½ முதல் 1 தேக்கரண்டியளவு தரலாம்.

பொது மருத்துவம்.—இலிங்கச் செந்தூரம் 1 முதல் 2 அரிசியளவு 5 முதல் 10 துளி அண்டத்தைலத்தில் கொடுக்கலாம்.

**சண்டமாருதச் செந்தூரம்.**—½ முதல் 1 அரிசி அளவு பனைவெல்லம், தேன், முலைப்பால் ஆகிய துணைமருந்துகளுடன் கொடுக்கலாம்.

**செய இரச பற்பம்.**—1 சேர் பாத இரசத்தில் செங்கற்பொடி, உப்பு, நவாச்சாரம், கற்பூரம், சீனக்காரம், வெடியுப்பு இவையாறும் பாத இரசத்தின் எடைக்கு எட்டு பங்கு அதிகமாக இருக்கவேண்டும். நாள் ஒன்றுக்கு ஒவ்வொன்றாயிட்டரைத்துப் பொடிபட்டவுடன் நீர்விட்டு (காடிநீர் சிறப்புடையது) மும் மூன்று சாமமரைத்துக் கழுவவும். இவ்விதம் ஆறுநாள் செய்தபின் ஏழாம்நாள் கற்றாழைச் சாற்றினல் மூன்று சாமமறைத்துக் கழுவி எடுக்க இரசத்திலுள்ள எழுவிதக் குற்றங்களும் நீங்கித் தூய்மையடையும்.

இவ்வாறு தூய்மை செய்த ரசம் 1 காசெடை, தங்கம் ½ காசெடை, வீரம் ¼ காசெடை இவற்றைக் தாய்ப் பாலில் 2 சாமம் அரைத்து வில்லைதட்டி நன்றாயுலர்த்தி, அண்ட வோட்டை வெண் கருவிட்டு அரைத்து (1 பலம் அண்ட ஓட்டிற்கு ½ அல்லது ¼ பலம் வீரம் சேர்த்தரைக்கவும்) உலர்த்தி மூசையில் வைத்து ஊதி யெடுக்கச் சுண்ணமாகும். இச சுண்ணத்தில் பாதி ஒரு சட்டியில் பரப்பி, அதன்மீது மேற்படி வில்லையை வைத்து, அதன்மீது மிகுதியாயுள்ள சுண்ணத்தைப் போட்டு, மேற்சட்டி கொண்டு மூடி 7 சீலை செய்துலர்த்தி யெரிக்கவும். எரிப்புத் திடடம்—கமலாக்கினியாக 3 சாமம் எரிக்கவேண்டும். மேற்சட்டியில் பதங்கம் ஏறியிருக்கும். அதைச் சுரண்டி யெடுத்து நிறுத்துப் பார்க்கவும். குறைவுக்கு இரசம் சேர்த்துத் தாய்ப்பால் விட்டரைத்து முன்போல சுண்ணத்திலிட்டு எரிக்கவும். இவ்விதம் முடிந்த

பற்பத்தைத் தேன், நெய், பிள்ளைப்பால் முதலிய துணை மருந்துகளில் பிணியாளன் உடல் வன்மையையும், பிணியின் வன்மையையும் அறிந்து கொடுக்கவும். அளவு : ½ முதல் 1 கடுகளவு கொடுப்பது சிறப்புடைத்து. ஈதன்றி இம் மருந்து புண் சம்பந்தமான பிணிகட்கும் பயன்படும்.

**தங்க பற்பம்.**—பொன்னிலையைப் (தங்க இரேக்கை—குந்தன தகட்டை) பிரம்மதண்டிச் சாற்றிலூறவைக்க வேண்டும். பிறகு அதைப் பிரமதண்டின் பாலாலரைத்து வில்லைதட்டி யுலர்த்தவும். பிரமதண்டின் சமூல கற்கம் தங்கத்தினெடைக்கு 8 மடங்கு கொண்டு, அதன் மத்தியில் தங்க வில்லையை வைத்து மூடி, சீலைமண் செய்து 100 எருவில் புடமிடவும். இவ்வாறு மும்முறை செய்ய பற்பமாகும். இது பவுத்திரத்திற்கு நேர்மருந்தாகக் கொள்ளப்படுகிறது. அளவு : அரிசியளவு, தேன் துணை மருந்து. நாளளவு 10 நாள். பிறகு மறுபத்தியம். இவ்வாறு நோய் நீங்குமட்டும் கொடுக்கவேண்டும்.

**நாக பற்பம்.**—சிறியா நங்கையிலை கற்கம் தேங்காயளவு, அதற்குள் ஈசலிறகைப்போல் தட்டிய நாகத் தகட்டுத் துண்டுகளைப் புதைத்துச் சீலை மண் செய்து 100 எருவில் புடமிட, பற்பமாகும். அளவு : அரிசி அளவு, பனைவெல்லம் துணைமருந்து. நாளளவு 48. பத்தியம்—இச்சாபத்தியம்.

**பரங்கிப்பட்டைப் பதங்கம்.**—½ முதல் 1 குன்றி பாலில் உப்பில்லாப் பத்தியம்.

**காந்தபற்பம்.**—குன்றியளவு இருவேளை—துணை மருந்து அக்கமணி இழைத்த தெளிநீர்—நாள் அளவு 30 நாள்.

## வெளி மருந்துகள்.

துத்தியிலை சேர்ந்த களி வைத்துக் கட்டித் தூய்மைசெய்த பிறகு, சிலைத் தைலத்தைப் பயன் படுத்தலாம்.

**வேறு.**—பன்றிப் புட்டையை நெருப்பிலிட்டு அதினின்று எழும் புகையைப் பவுத்திரதின் மீது படும்படி செய்யலாம். அகத்தியர் குழம்பையும் புகைக்கலாம்.

## வேறு

ஆசன மூடி யதுவே பவுத்திரமாம்
பேசு மதுபறக்க பேதிக்கும்—மோசமிலை
வெம்புகைதந் தால்தணலால் வேம்பின் புரணியுடன்
சம்பு வெனுநரியெச் சம். (தேரன் வெண்பா).

வேம்பின் புரணியினுலுண்டாக்கப்பட்ட தணலில், நரியெச்ச மிட்டுண்டான புகையைப் பவுத்திரத்தில் படும் படி காட்டப் பவுத்திரம் தீரும்.

## பவுத்திரக் களிம்பு.

மனோ சிலை, வெள்ளைப் பாடாணம், ஈயச் செந்தூரம், வெண்ரேன்றிக் கிழங்கு, பாதாசம், தாளகம், கந்தகம், மிருதார் சிங்கி, மயில் துத்தம், பால் துத்தம் வகைக்குவராக னெடை 1, கல்வத் திட்டு மனோசிலை நீங்கலாக மற்றச் சரக்குகளைப் பொடித்து, வெற்றிலைச் சாற்றாலரைத்துப் பிறகு மனோசிலை

சேர்த்து அரைத்து, உலர்த்தி, அரைக்காற்படி வேப்பமுத்து நெய்யில், வட்டக்கிலு கிலுப்பை, பெருந்தும்பை, எட்டி இவைகளின் வேர்ப்பட்டை வகைக்குப் பலம் ½, இதனை நீர் விட்டரைத்து எண்ணெயிற கலந்து காய்ச்சி வடித்துக் கொண்டு, மேற்படி மருந்தில் விட்டு அரைத்துக் களிம்பு செய்துகொள்ளவும். கண்டமாலை, பவுத்திரம், அரையாப்பு முதலிய விரணங்கட்குப் பயன்படுத்த ஆறி உலரும். (அகத்தியர் இரண வைத்தியம்.)

வேறு.—பன்றிக்குடலை வேகவைத்து அதினின்று எழுமாவியை இரண த்தில் தாக்கும்படி செய்யலாம். இரணம் தூய்மையானதும், விரண சஞ்சீவித் தைலத்தை வழங்கலாம்.

பவுத்திரம் எருவாயுடன சம்பந்தப்பட்டிருந்தால் காரநூல் போட்டறுக்க வேண்டும். பிறகு, புங்குத் தைலம் 1 பங்கு, மெழுகுத் தைலம் 1/10 பங்கு சேர்த்துக் கலந்து புண்ணுக் கிட்டாற்றவும்.

### மேகக் கட்டிகள்.

இது இருபத்தொரு வகை மேக நீர்க்குத் தொடர்பு நோயாக வருவ தால் இப் பெயர்த்தாம்.

இது 10 வகைப்படும்.—அவை 1. மடக்குக் கட்டி, 2. ஆமையோட்டுக் கட்டி, 3. வலைக்கண் கட்டி, 4. அதோமுகக் கட்டி, 5. பேய்ச்சுரைக கட்டி, 6. கடலைக் கட்டி, 7. கடுகுக் கட்டி, 8. வித்திரதிக கட்டி, 9. நிலப் பூசனிக் கிழங்குக் கட்டி, 10. மேகவிரத்திரதிக் கட்டி என்பனவாம்.

**1. மடக்குக் கட்டி.**—இது கில்களிலும, சதைநிறைந்த இடங்களிலு முண்டாகிக் கறுதது, அடியகன்று முனையுயர்நது நடுவிற் பள்ளம் விழுந்து வியர்வையுடன் நோதலுள்ளதாயிருககும்.

**2. ஆமையோட்டுக் கட்டி.**—இக் கட்டியானது ஆமையோட்டைக் கவிழ் த்து மூடினது போல வுண்டாகிக் குழிகள் விழுந்து மினுமினுப்புடன் காணப்படும். இது நோவுடன் கூடியது.

**3. வலைக்கண் கட்டி.**—இது தடித்து திரட்சியாக எழும்பி மரத்தின் வேர்களைப் போல அநேக நரம்புகளால் சூழப்பட்டிருக்கும். வலையைப் போன்ற கண்களையுடையதாகவும், குழம்பு போல் தடித்த நீர் பாய்வதுமாயும் நாளுக்கு நாள் பரவிக்கொண்டே வருவதுமாயிருக்கும்.

**4. அதோமுகக் கட்டி.**—இக கட்டியானது இடுப்பிலேனும் வயிற்றி லேனும் பருமனுக எழும்பும். கருப்பு நிறம் பொருந்தியிருக்கும். நோயாளியானவனை நிமிர முடியாது குனிந்தபடி இருக்கும்படி செய்வத ஞல் இஃது அதோமுகக் கட்டியெனப் பெயர் பெற்றது.

**5. பேய்ச்சுரைக் கட்டி.**—இது பேய்ச்சுரையின் பிஞ்சைப் போல் குண் டாய் நெருப்பிற் சுட்டது போன்ற எரிச்சலுண்டாகிப் பின் கொப்புளங் கள் தோன்றும். இதனல் சுரம், நீரவேட்கை, வருத்தம் இவையேற் படும்.

6. **கடலைக் கட்டி.**—இது சிறு கடலை போன்ற கட்டிகளாக உடல் முற்று மெழும்பும் ; வருத்தத்துடன் கூடியது.

7. **கடுகுக் கட்டி.**—உடல் முற்றும் கடுகை யொத்த சிறு சிறு கட்டிகளாக எழும்பி விரைவில் உடைந்து வேதனையைக் கொடுக்கும்.

8. **வித்திரதிக் கட்டி.**—ஒரு கட்டி யுண்டாய் அதைச் சுற்றி அநேக கொப்புளங்கள் சூழ்ந்து எரிச்சலையும் வருத்தத்தையுந் தரும்.

9. **நிலப் பூசணிக்கிழங்குக் கட்டி.**—நிலப் பூசனிககிழங்கைப் போல் வட்டமாகத் தடித்துப் பலவிதத் துன்பத்தைக் கொடுக்கும்.

10. **மேக வித்திரதிக் கட்டி.**—இது இயற்கையாகத் தோன்றுங் கட்டிகளைப்போல மேக நோயினரில் காணப்படும்.

**தீரும் தீராதவை.**—சாரம், செநநீர், சதை ஆகிய இவ்வுடற் கட்டுகளை யொட்டிப் பிறக்கினற முதன் மூன்று கட்டிகளும் தீரும். வித்திரதிக் கட்டி, நிலப பூசணிக்கட்டி இவ்விரண்டும் கொழுபபைப பற்றிப பிறப்பதால் அரிதில் தீரும். மற்றவை தீராவாம். இவ்வாறு நூற்களில் கூறி யிருப்பினும் மேக நீரால் மெலிநதிருப்பவர்க்கு மார்பு, அடிமுதுகு, நகில்,தோள, எருவாய, தலை, கீல், விரல்கள், அக்குள், நடுப்புருவம், தமரகமிருப்பிடம், கொப்பூழ், நடுவுதடு, விதை, கெண்டைச்சதை, தொடைச்சதை,குறி என்னுமிவ் விடங்களில் எவ்விதக் கட்டிகள் பிறக்கினும் தீராததென்றே அறியவேண்டும்.

**மருத்துவம்.**—மேகக கட்டிகளைப் பெரும்பானமை அகப்புற மருத்துவங் களிலைற் தீர்க்க வேண்டும். எவ்விதமான வெளிமருந்துகளை வழங்கி னூலும் உள் மருந்து கொடாவிட்டால் குண மடைவது கடினம்.

**உள்மருந்துகள்—மேகாரித்தைலம்— செய்முறை.**— பூமி சர்க்கரைக் கிழங்கு, கொததான், சஙகங் குப்பி, நன்னாரி வேர், வெள்ளறுகு, அமுக்கரா, நிலவாகை, விழுதிவேர், நிலப்பனை வகைக்குப பலம் 1. இரண்டு படி நீர் விட்டு ஒரு படியாகச் சிறுக்கி, கற்றாழை, பொன்னாங் காணி, செவ் விழுதி, தாழை விழுது, அமுக்கார இலை, இலைக்கள்ளி யிவற்றின சாறு வகைக்குப் படி ½, சங்கங்குப்பி, வெங்காயம், கரிசாலை இவற்றின் சாறு வகைக்குப் படி 1, சூரததுக் கடுக்காய் தோல், பிரப்பங் கிழங்கு, பரங்கிப் பட்டை இவற்றின் கற்கம் வகைக்குப் பலம் 8, சீரகம், கருஞ்சீரகம், சோம்பு, அதிமதுரம், மிளகு, தாளிச பத்திரி இவற்றின் கற்கம் வகைக்குப் பலம் 8, சிறறுமணக்கு நெய் படி 9, முறைப்படி காய்ச்சி வடிக்குந்தறுவாயில், கல் மதம் பலம் 1, கடுகு ரோகணித்தூள் பலம் 1, வெங்காரப் பொரி பலம் 1, கல்நார் பலம் 1, சிலாசத்து பற்பம் பலம் 1 இவைகளைச் சேர்த்து நனறுய்க் கலந்து ஓர் மட்பாண்டத்திலூற்றி நான்கு நாட்கொரு முறை ½ முதல் 1 பலம் கொடுத்துப் பத்தியங் கைவக்க மேகக் கட்டிகள் விரைவில ஆறுவதுடன் மேக நீரையும் தூய்மையாக்கும். இவையன்றி எருவாய்ப் புண், நாபிச் சூலை, குன்மம், குடல் வளி, சூலை, செரியாமை இவைகளுந் தீரும்.

மேகக் கட்டிகள் பெரும்பான்மை மேக நீரின் தொடர்பு நோயாக வருவதனால், மேக நீருக்குக் கூறியுள்ள உள் மருந்துகளே இதற்கும் பயன்படும். எடுத்துக்காட்டாக, அப்பிரகம், காந்தம், வங்கம், இரசம், தங்கம் இவற்றாலாய பற்ப செந்தூரங்களாம். வெளி மருந்தாகக் கட்டியின் கீழ்க் கூறிய மருந்துகள் பயனபடும்.

**சில வெளி மருந்துகள்.**—பிராயம் பட்டைப் பால் (குட்டிப் பலா), ஆலம் பால், அத்திபால் இவைகளைப்பற்றிடலாம்.

**வெண்பாடாண மெழுகு.**—இது செய்முறை கட்டியின் வெளி மருந்தில் கீழ் கூறப்பட்டிருக்கிறது. இதைக் கட்டியின் துவக்க நிலையிலிட அழுந்தி விடும்; முற்றிய நிலையிலிட வுடையும். இது சிறப்பாக இராசப்பிளவை, பக்கப்பிளவை, அரையாப்பு, கண்ட மாலைகட்குப் பயன்படும். இராசப்பிளவை, யுடைந்தபின் கேடுற்ற சதையிருப்பின் அதை நீக்குவதற்குப் புங்குத்தைலம், இரண சஞ்சீவித் தைலம் அல்லது மெழுகுத் தைலத்தையும் தேங்காய் நெய்யையும் ஒரளவாகக் கலந்து போடலாம்.

**ஆடு தீண்டாப்பாளை எண்ணெய்.**—ஆடு தீண்டாப்பாளையிலைக்கற்கம் ஒரு தேங்காயளவு, வேப்ப முத்து நெய் ஒரு படியிற் கலந்து காய்ச்சவும். இது கிருமிகளை நீக்குவதோடு சீழையும் விரைவில் வறட்டும்.

**பூர பற்பம்.**—பூரத்தை ஒரே கட்டியாக எடுத்துப் பசுமஞ்சளையும் சோற்றையும் ஒரளவாகச் சேர்த்தரைத்துப் பூரத்துக்குக் கவசம்செய்து, ஒரு மட் கலயத்தைக் கரியடுப்பின் மீது வைத்து, கவசஞ்செய்த பூரத்தை அதன் மீது வைத்துப் புரட்டவும். மேலுள்ள கவசம் கருகும் வரை புரட்டவும். பிறகு அதை நீக்கிவிட்டு மறுபடியும் கவசஞ் செய்து மட் கலயத்தின் மீது வைத்துப் புரட்டவும். இவ்வாறு பத்து முறை செய்வது நலம். பிறகு நண்டுக் கொழுப்பில் 24 மணி நேரம் சுருக்குக் கொடுக்கவும். பிறகு, துடைத்துக் கழுவி ஈரம் நீங்கியபின் பொடித்துக் குப்பியிலடைக்கவும்.

அளவு $\frac{1}{4}$ முதல் 1 குன்றி— சிற்றுமணக்கு நெய் ஒரு பலத்தில் கலந்து காலையில் மட்டுங் கொடுக்கலாம். இது மலக்கட்டை நீக்குவதனறி நீரிலுள்ள சர்க்கரையின் அளவையுங் குறைக்கும்.

## இலவங்க லேகியம்

"வாய்க்குமில வங்காதி மாலே கியமதுமுன்
வாய்க்குமில வங்காதி மாமறையோர்—வாய்க்கு
மதுமேக மாருக்கி வன்னிலவ ணூதி
மதுமேக மாருக்கி மால்".

(தே—யமகம்.)

இலவங்கத்தை யோட்டில் வறுத்து நன்றாய்ப் பொரிந்தபின் இடித்துத் துணியில வடி கட்டினது பலம் 20, சீனி சருக்கரை பலம் 20, தேன், ஆனெய், ஆப்பால் இவை வகைக்குப் பலம் 10,

பாலில் சர்க்கரையைக் கரைத்து வடிகட்டி, அடுப்பேற்றி சிறு தீயாக பொரித்து பாகு பதத்தில் கிராம்புப் பொடியைச் சிறுகச் சிறுகத் தூவிக் கிண்டிக் கிளறி நெய் விட்டுக் கலந்து கீழிறக்கித் தேன்விட்டுக் கலந்து வைக்கவும்.

**அளவு**.—கழற்சிக்காயளவு—இரண்டல்லது மூன்று வேளை.

**தீரு நோய்**.—மதுமேகம், பெருவயிறு, குன்மம், பித்த உன்மத்தம், அதிசாரம், இரத்தபேதி, விந்து நட்டம் இவை நீங்கிக் குருதிப் பெருக்கமும் தாதுப் பெருக்கமுமுண்டாம்.

**பத்தியம்**.—பெண், உப்பு, புளி இவற்றை நீக்க வேண்டும்.

## யானைக்கால்.

**வேறு பெயர்**கள்.—சிலிபதம், பாதவன் மீகம், பாதப் புற்று.

**காரணம்**.—நெய்தல் நிலவாசம், மலநீர் ஊறிய பொருள்கள், ஐயத்தை வளர்ச்சி செய்யக்கூடிய பொருள்களைப புசிப்பதாலும், மிகு புணர்ச்சியாலும், கீழ் நோக்கு உறுப்புகளாகிய இரு தொடைகளிலிருக்கின்ற நரம்புகளில், சிலேத்தும நீரானது நிறையப்படும். அக்காலத்தில் வளியும் அழலும் அங்கிரிகளில் பாவி அவ்விடத்தில் சிறிது சிறிதாகக் கேடுற்ற சதையைச் சோபித்து, கீழ்க்காலைப் புற்றுப்போல் பருக்கச் செய்யும். அச்சதை மிக்க வளர்ச்சியுறச் சுவையின்மை முதலிய தீக்குறிகள் அடிக்கடி பிறக்கும். இதுவேயானைக்கால் நோயாம்.

**இது மூன்று வகைப்படும்**.—வளி, அழல், ஐய யானைக்கால் நோய்கள் என்பனவாம்.

1. **வளி யானைக்கால்** நோய்.—இஃது ஒரு காலிலாவது, இரண்டு காலிலாவது, நாளுக்குநாள் வளர்ச்சியடைகின்ற வீக்கத்தையுண்டாக்கும். அப்போது அதிலுள்ள கேடடைந்த சதையானது கருத்து, உடையும் உருளையுமாய்க் கருணைக் கிழங்கு முளைகளைப்போல் எழும்பிக் கெட்டிப்பட்டுச் சுரசுரத்து மினுமினுப்பில்லாது சிலவேளை நோவைத் தருவதாயிருக்கும்.

2. **அழல் யானைக்கால்**.—இது தொடை நரம்புகளில் பித்த நீரும் கலந்து இறங்கலால் உண்டாகும். அப்போது அறையில் நெறி கட்டுதல், அங்கிரிகளில் மஞ்சள் நிறமான வீக்கம், மேலில் எரிச்சல், சுரம், பிதற்றல், கண்ணில் மஞ்சள் வண்ணம், வாந்தி, சிலவேளை பேதி அல்லது மலக்கட்டு என்னும் மிக்குணங்களுண்டாகும்.

3. **ஐய யானைக்கால்**.—இது அங்கிரியில் மினுமினுப்புடன் குளிர்ச்சியும் வெளுப்புமுள்ள வீக்கத்தையுண்டாக்கும். ஆனால் வீக்கத்தின் மீது புற்று எழும்புவதுபோல் சிறிதும் பெரிதுமாகக் கேடடைந்த ஊன் வளர்ந்து முழங் காலுக்கு மேலும் உயர்ந்து நோயில்லாமல் தளதளப்பாய் இருக்கும்.

**தீரும் தீராததை யறியுமாறு**.—எந்த யானைக்கால் நோயாவது புதுமையாகப் பிறந்து ஒரு ஆண்டுக்கு மேற்பட்டு முற்றாமல் அற்பமாயிருக்கில் மருத்துவத்தினால் குணப்படும். அங்கிரியின் அளவுக்கு மீறி இரண்டு

பக்கங்களுக்கும் மிகுதியாகப் பிதுங்கி ஆள்வளளிக்கிழங்கு, புற்று, தூண் யானைக்கால் முதலிய அளவுகளைப் பெற்று வளர்ச்சி யடைந்தால் வீக்கம் தீராதாம்.

கை, உதடு, செவி, மூக்கு முதலிய உறுப்புகளில் பாத வன்மீகம் போல் வீங்குமென்றும், அவைகளும பாதவனமீகந்தான் என்றும் சிலர் சொல்லுகிறாகள். திருமூலர், தருமசௌமியர் முதலிய பெரி யோர்கள் செய்த நூல்களில் அவைகளை அவ்வவ்விடப் பெயர்பெற்ற புற்றுகளெனக் கூறுகின்றனர்.

மேலும் இந்நோய் ஓராண்டுக்கு உட்பட்டதாயிருப்பினும், சுரம் வந்து கொண்டிருந்தாலும், வீக்கம் அழுந்தினும் தீரும். அழுந்தாவிடில் தீராது.

**மருத்துவம்**.—முதலில் மலத்தை வெளிபபடுததப பேதிக்குத் தர வேண்டும். அதற்குக் கழற்சி எண்ணெய் மிகவும் சிறந்தது. ஒன்று முதல் இரண்டு உச்சிக் கரண்டியளவு காலையில் மாத்திரம் 3 நாளைக்குக் கொடுக்கலாம். பத்தியம்—உப்பில்லாப் பததியம்.

சுரத்துடன மலககட்டிருந்தால் தாழம்பூ மாத்திரை 1 முதல் 2 தேனில் காலையில் கொடுக்கலாம், இதனால் மலங்கழிவதுடன் காய்ச்சலுங் குறைவுபடும்.

பிறகு இரசக் கலப்புள்ள மருந்துகளைக் கொடுக்கவேண்டும். இரச பற்பம் 1/8 முதல் 1/4 குன்றி அளவு தேனில் தரலாம். இரச செந்தூரம் ¼ முதல் ½ குன்றி அளவு மேற்படியாகவே தரலாம். சண்டமாருத செந்தூரம் ½ முதல் 1 குனறி தேனில் தரலாம். ஆறுமுகச் செந்தூரம் மேற்படியாகவே வழங்கலாம். இம்மருந்துகளை ஒருநாளைக்கு இருவேளையாக 3 அல்லது 5 நாட்களுக்குக் கொடுத்து மறு பத்தியம் வைததுப் பிறகு மருந்து கொடுத்து வரல் நன்மை பயககும். நோயின் வன்மைக்கும் பிணியாளனின வன்மைக்கும் தக்கவாறு ¼, ½, 1 மண்டலம் கொடுக்கலாம்.

அகத்தியர் குழம்பு ½ முதல் 1 குன்றியளவு பனைவெல்லத்தில் காலையில் 3 நாள் கொடுக்க மலங் கழிந்து நோயின் வன்மையைக் குறைக்கும்.

**வேறு**.—வெள்ளைக் காக்கட்டான் வேரை நன்றாய் மண்போகத் துடைத்து மேற்பட்டையை எடுத்து, பழச்சாற்றில் நன்றாய் மைபோ லரைத்துப் பிணியாளி வன்மையுடையவனாயிருப்பின் புன்னைக் காயள வும் வன்மை குறைந்தவனாயின் கழற்சிக் காயளவும் கொடுக்கவும். கழற்சிக்காய் முதல் புன்னைக்காய் வரை அளவை ஏற்றிக்கொண்டு போவதே நலம். மூன்று நாள் காலையில் மாத்திரம் தரவேண்டும். அல்லது ஒருநாள் விட்டு விட்டுக் கொடுக்கவும். இப்படி 3 திங்கட்கு ஒவ்வொரு திங்களிலும் மும்மூன்று நாள் கொடுக்கவும்.

**பத்தியம்**.—பால், மோர், கலவிய சோறு ஆகும். சிலருக்கு வாந்தி யும் பேதியுமாகும்.

**குறிப்பு**.—வெள்ளைப் பூவுடைய செடிகளெல்லாம் இரச சத்துடையன என்றறியவும்.

**வேறு.**—நெறிக்கட்டி சுரத்திற்கு வெண் காக்கட்டான் விதையை வெயிலில் உலர்த்தியது போல வறுத்துப் பொடி செய்து சம அளவு சர்க்கரை சேர்த்துக் காலையிலாவது படுக்கைக்குப் போகும்போதாவது வெருகடி அளவு பாலுடனுவது நீருடனுவது உண்ணவும். காலையில் மலம் நன்ருகப் போகும். இவ்விதம் 3 திங்கள் உண்ண நெறிகட்டிய சுரம் நீங்கும்.

**வெளிமருத்துவம்.**

1. **பற்று.**—புற்றுமண், காவிக்கல் அல்லது செம்மண், கருப்புக்கொள், காந்தக் கல் வகைக்கு 1 பங்கு, சுக்கு ¼ பங்கு, கோழி முட்டை வெண் கரு விட்டரைத்துப் பற்றிடவும்.

மெழுகுத் தைலத்தை மேலுக்குப் பூசிப் பட்டி கட்ட வீக்கங் குறையும். இந்நோயை மருத்துப் பாரதத்தில் கிருதபன்மாவுக்கு ஒப்பிடப்பட்டிருக்கின்றது. இவன் இரசத்திற்கு ஒப்பிடப்பட்டிருக்கின்ற பீமனுல் அடித்துத் துரத்தப்பட்டான். அதனை

" கவுரவ சேனையி னெச்ச மெல்லா மொரு
காலனைப் போலவே தேடி
காண்டிபன் கொல்லவே யாண்டு தொலைந்தது
கால் நாழிகைக்குள்ளே வாடி
வீமசேனனுடன் கிருதபன்மா வந்து
விளைத்தானே யற்புதச் சண்டை
வேந்தர்கள் வேந்தனுக் காந்துணையாய் வந்த
வீரியனுர் பெருந் தண்டை
காதிய தண்டினுல் மோதி யடித்தொரு
காலனைப் போலவே மடித்தான்
கண்டு கிருதபன் மாதண் டுடனே யன்று
கால் நடை யாயோட்டம் பிடித்தானே. "

இச் செய்யுளாலறிக.

ஆகையால், யானைக்கால் நோய்க்கு இரசக் கலப்புள்ள மருந்துகளை யல்லது தனி இரச பற்பத்தையோ அல்லது செந்தூரத்தையோ கொடுக்கத் தீருமென்பது உடன்பாடு.

இரச பற்பத்தையேனும், செந்தூரத்தையேனும் மலப்போக்குச்செய்கையுடைய துணை மருந்துடனுவது, சிறு நீரைப் பெருக்கக் கூடிய துணை மருந்துடனுவது கொடுக்க வேண்டும். உப்பு, புளி, பெண் ஆகாவாம்.

3 நாள் முதல் 5 நாள் வரை மருந்து கொடுத்து மறுபத்தியம் வைக்கவும். மறு பத்தியமான பிறகு ஓமம் பாலிலரைத்துத் தலையில் தேய்த்து முழுக வேண்டும். பிறகு, நெய் முழுக்கு. அதன் பிறகு முக்கூட்டு நெய் முழுக்கு. இம் முழுக்குகளை நாள் விட்டு நாள் செய்ய வேண்டும்.

இந் நோயில் குருதி வாங்கலும் பயன்படும்.

## கண்டமாலை.

வளி, அழல், ஐயங்களானவை உடற்கட்டுகளில் ஒன்றாய, கொழுப்பைப் பொருந்துவதாலும், ஊன் வளர்ச்சியினாலும் கழுத்தின் நரம்புகளிலும், கண்களிலும், கமுக்கட்டுகளிலும், அரைகளிலும் உடலின் நிறத்தைப் பெற்றுக் கெட்டிப்பட்டு மினுமினுத்து, நெல்லிக்கனி, சிறுகத்தரிக்காய் அளவை யொத்து, சிறிதும் பெரிதுமான கட்டிகளுண்டாகும். அவை நாட் சென்று பழுத்துடைந்து, நடுவில் குழி விழுந்து வேறுபாடுடையனவாம். இவற்றுள் சில சிறிது நோயுடன் உடைந்து சீழைச் சொரிவதும், சில நமைச்சலுடன் வெப்பினையுண்டாக்குவதும், சில இளைத்துக்கொண்டேயிருப் பதும் சில நெடு நாட் சென்றும் கரையாது வலுப்பதுமாகவும் இருக்கும். இந்த நோய் கண்டத்தைச் சுற்றிலும் மாலை போல் பிறப்பதால் கண்டமாலை யெனப் பெயர் பெற்றது. இது தொடைக் கவுட்டிகளில் கண்டால் அரை யாப்புக் கட்டியென்பர்.

**தீராக் குறிகள்.**—எந்தக் கண்டமாலைக் கட்டியாவது அறுகின் வேரைப் போல் கிளைப்பதும் அடங்குவதுமாயிருந்து இதனால் சுரம், இருமல், வாந்தி, பீநசம், பக்க நோவு, உடல் இளைத்தல் என்னும் இப்பண்புகள் உண்டாகில் தீராவாம். இப்பண்புகள் இல்லாவிடில் தீருமாம்.

### மருத்துவம்.

**பேதி மருந்து**கள்.—கழற்சி எண்ணெய் $\frac{1}{4}$ முதல் $\frac{1}{2}$ உச்சிக்கரண்டி யளவு 3 நாளைக்குக் காலையில் கொடுக்கவும். மறு பத்தியம் 3 நாள், பிறகு தலை முழுக்காடலாம்.

**எட்டிப் பூண்டுத்தைலம்.**—போகர்—700. 5 துளி இருவேளை 5 நாள், சர்க்கரை துணை மருந்து.

**நந்நி மெழுகு.**—$\frac{1}{2}$ சுண்டை யளவு இருவேளை, பனைவெல்லம் துணை மருந்து—நாளளவு 7 நாள். பிறகு மறு பத்தியம் ஆகும்.

**கந்தகத் தைலம்.**—5 முதல் 10 துளி, சர்க்கரை துணை மருந்து ; இரு வேளை 5 நாள்.

**பூரப்பதங்கம்.**—ஓர் அரிசியளவு சிற்றாமணக்கு நெய்யில் காலையில் 3 நாள் உப்பில்லாப் பத்தியம்.

பரங்கிப் படைப் பதங்கம்.—$\frac{1}{2}$ முதல் 1 குன்றியளவு, பனைவெல்லம்— இருவேளை ; 5 நாள்—உப்பில்லாப் பத்தியம்.

**இரச பற்பம்.**—1/8 முதல் $\frac{1}{4}$ அரிசி அளவு 3 நாள் இருவேளை ; பனை வெல்லம் : உப்பில்லாப் பத்தியம்.

மேலே கூறிய மருந்துகளன்றி, மேகநாதத் தைலம், இரசத்தைலம், சேராங்கொட்டை இளகம், சண்டமாருதச் செந்தூரம், வீர மெழுகு, பஞ்ச சூத மெழுகு, இரசகந்தி மெழுகு, கொடிவேலி எண்ணெய் ஆகிய இம்மருந்துகளை நோயின் வன்மை, நோயினன் வன்மை இவற்றை அறிந்து கொண்டு அளவு படுத்திக் கொடுக்கக் கண்டமாலைப் பிணி தீரும்.

**கண்டமாலைக் குடிநீர்.**—பிரப்பங் கிழங்கு, அமுக்கராங் கிழங்கு, பரங்கிச் சக்கை, சத்திச் சாரணைவேர் ஒரெடை, நீர்விட்டுக் காய்ச்சி முறைப்படி குடி நீர் செய்து கொடுக்கவும்.

**வெளிமருந்துகள்.**—எட்டிக் கொட்டையும், அமுக்காராங் கிழங்கையும் பழச் சாற்றிலரைத்துப் பற்றிடலாம்.

எட்டிப் பழத்தை வைக்கோலிற் சுட்டெடுத்துச் சாறு பிழிந்து கண்ட மாலைக்குப் பூசி அரிசித் தவிட்டை யதன்மீது அப்பலாம்.

கருங்கல்லை மற்றொரு கருங்கல்லால் தாய்ப் பால் விட்டிழைத்துப் பற்றிடலாம்.

சாரப் பாம்பின் முள்ளந் தண்டெலும்பை மாலையாகக் கோர்த்துக் கழுத்தில் போடலாம்.

பச்சை எருவை, வெண்பாடாண மெழுகு இவைகளைத் தடித்த துணித் துண்டில் தடவிப் போடலாம்.

மாவிலிங்கப் பட்டையை மேற்புறணி நீக்கி உள்பட்டையைக் கட்டியினுடைய அளவுக்கு வெட்டிக் கட்டியின் மீது வைத்துக் காரீயத் தகட்டை அதன்மீது வைத்துக் கட்டக் கட்டி அழுந்தி விடும். இம்முறை அரையாப் புக்கும் பயன்படும்.

கொடிவேலி வேர்ப்பட்டையை நீர்விட்டரைத்துப் பற்றிடலாம். ஆனால், இது புண்ணுண்டாக்கும்.

அகத்தியர் குழம்பு அல்லது கௌசிகர் குழம்பு—சிற்றாமணக்கு நெய்யுடன் சேர்த்துப் பற்றிடலாம்.

ஒந்தாழை (ரயில் கற்றாழை) யை வரகு வைக்கோலாற் கொளுத்திச் சுட்டுச் சாறெடுத்துக் கேழ்வரகுமாவைச் சேர்த்துக் கோழி முட்டை வெண் கருவால் கருங்கல்லிலரைத்து இளகல் பதமாக இருக்கும்போது சீலையிற்றடவிப் போடலாம்.

சேங்கொட்டை, புளி, நல்ல வெல்லம் இவற்றைச் சேர்த்து அரைத்துக் கட்டக் கண்டமாலை, அரையாப்பு இரண்டுந் தீரும்.

எருக்கம்பாலையும் உப்புத் தண்ணீரையும் ஓர் அளவாகக் கலந்து கண்ட மாலை வலப்பக்கமிருந்தால் இடக்காதிலும், இடப்பக்கமிருந்தால் வலக் காதிலும் ஞாயிற்றுக் கிழமையில் ஒன்று அல்லது இரண்டு துளி விட்டுக் குளிர்ந்த நீரில் பத்து நிமிடங்கள் குளிருண்டாகத் தலை மூழ்கும்படி செய்யவும். இப்படி மும்முறை மூன்று ஞாயிற்றுக் கிழமைகளில் செய்யவும்.

உணவு.—பச்சையரிசி, பச்சைப் பயறு சேர்த்துப் பால் விட்டுக் காய்ச்சிய கஞ்சி ; உப்பு இல்லை.

குறிப்பு.—இவ்வாறு கூறியிருப்பினும் இதைக் கவனமாகவே கையாள வேண்டும்.

## அடிதள்ளல்.

இது நாட்பட்ட பேதியினாலும், முக்கியமாக இரத்தாதி சாரத்தினாலும், ஈதன்றி மலம் கழிக்கும்போது முக்குவதனால் வன்மையற்றவர்கட்கு உண்டாகும். இதற்கு வடமொழியில் குதப்ரம்ச மென்று பெயர்.

**மருத்துவம்.**—முதலாவது வெளிப்பட்டிருக்கும் மூலத்தைத் தூய்மைப் படுத்தி உள்ளே தள்ளிவிடவேண்டும். மறுபடியும் வெளிவராதிருக்கும் படி பொருத்தமான மருந்துகளைத் தரவேண்டும்.

இதையுள்ளே தள்ளுவதற்கு முன்பு துவர்ப்புள்ள முப்பலை, மாசிக் காய் போன்றவைகளாற செய்யப்பட்ட குடி நீரினாற் கழுவியொற்றடமிட்டு உள்ளே தள்ளலாம். அல்லது வெளி வந்த பாகத்தை நெய்ப்பசை யுள்ள மருநதுகளை மேலே தடவி யொற்றடமிட்டு உள்ளே தள்ளிவிடலாம். ஒரு முறையுள்ளே தள்ளிய பிறகு அது வெளி வராமலிருப்பதற்காக ஒரு தோல் துண்டை நீள் சீலை போலச் செய்து, எருவாய்க்குச் சரியாக ஒரு துளையமைத்துக் கட்டிவிடவேண்டும். அத்துளை வாயிலாகக் காற்றுப்பரிய லாகும்.

**வேறு.**—கற்றாழை மடலை நேர்குறுக்கில் இரண்டாக வெட்டி யோரத் திருக்கும் முள்ளை நீக்கிக் கும்பிச் சாம்பலில் வெதுப்பி, ஒரு புறத்துத் தோலை நீக்கிச் சிற்றாமணக்கு நெய் தடவி, மாசிக்காய் அல்லது கடுக்காயின் நுண்ணிய பொடியைத்தூவி எருவாயில் வைத்துக்கட்ட வெளிப்பட்ட மூலம் சுருங்கி யுள்ளே சென்று விடும். மூன்று அல்லது 5 நாள் கட்டவும்.

**வேறு.**—துத்திக்கீரையைச் சிற்றாமணக்கு நெய்யிலிட்டு வதக்கி ஒற்றட மிட்டு வைத்துக்கட்டலாம்.

**உள் மருந்து**கள்.

குழந்தைகட்கு வல்லாரை நெய், தண்ணீர் விட்டான் கிழங்கு நெய், கணைத்தெண்ணெய்யும், பெரியவர்கட்குப் பவழ பற்பம், நத்தை பற்பம், பொன் செந்தூரமும் பயன்படும். கொழுப்பு நிரம்பப் பொருந்தியுள்ள உணவைத் தரவேண்டும். எடுத்துக் காட்டாக வெண்ணெய், ஆட்டிறைச்சிக் குடிநீர், சமைத்த கொழுப்புக் குடல் இவை முதலியவாம்.

**நகிற் கட்டி அல்லது மார்புக் கட்டி** (ஸ்தன விப்புருதி.)

இது பெண்களுக்கே உண்டாகக் கூடிய ஒருவித நோய். இது கருவுற்ற பெண்களுக்கும், குழந்தைகட்குப் பால் கொடுக்கின்ற பெண்களுக்கும் உண்டாகும். இது பருவ மடையாத பெண்களுக்கு உண்டாகாது. இது முதலில் மார்பின் ஒரு பககத்தின் தோல் தடித்துச் சிவந்து, பிறகு வீங்கி மார்பு முற்றும் தடித்து, கடினத்துவத்தையடையும். இதற்கு மார்புச் சிலந்தி என்னு மொரு பெயருமுண்டு.

**இஃது ஐவகைப்படும்.**—அவை ; 1. வளி நகிற்கட்டி ; 2. அழல் நகிற் கட்டி, 3. ஐய நகிற்கட்டி, 4. முக்குற்ற நகிற்கட்டி, 5. அடிபடுதலாலுண்டாம் நகிற்கட்டி என்பனவாம்.

**மருத்துவம்.**—முதலில் குழந்தைக்குப் பாலூட்டும் பெண்ணாயிருப்பின், பாலை வெளியெடுத்து விடவேண்டும். கட்டி ஆறி வரும் வரை, குழந்தைக் குக் கட்டியிருக்கும் மார்பில் பால் கொடுக்கக் கூடாது. இப்படிச் செய் வதனால் அவ்விடத்தில் உண்டாகும் எரிச்சல் நீங்கிவிடும்.கட்டி பழுத்தபின்

பாலை வெளியாக்கி விட்டால் புரைகளோடாது. வீக்கம் முதல் கண்டவுடன் கீழே கூறப்படும் பூச்சுகளுள் எதாகிலும் ஒன்றைப் பூசவேண்டும்:—

1. அமுக்கரா, செஞ்சந்தனம் இவ்விரண்டையும் பழச்சாறு விட்டரைத்துப் பூசலாம்.

2. பாற் சங்கைத் தாய்ப்பாலிலரைத்துப் பூசலாம்.

3. செம்மண்ணைப் பன்னீரில் கரைத்துப் பூசலாம்.

4. எள்ளை யரைத்து மோரின் தெளிநீரில் கலந்து பூசலாம்.

5. மல்லிகைப் பூ அல்லது மல்லிகைக் கொடி முற்றும் நீர்விடாது அரைத்து வைத்துக் கட்டலாம். இது கட்டியின் துவக்க நிலையில் மிக்க பயன் தரும்.

6. வெங்காயத்தைச் சுடுசாம்பலில் புதைத்து, வெந்த பின்னெடுத்து அரைத்துப் பூசி வரலாம். மேற்கூறிய பூச்சுக்களைப் பூசுவதனால் கட்டி முகங் கொள்ளாமல் அடங்கிப் போய்விடும்.

அவ்வாறு அடங்காவிடின், கட்டியுடைவதற்கான மருந்துகளை வழங்கி வரவேண்டும். பொதுவாக மற்றைய கட்டிகளுக்கு வழங்கும் மருந்துகளையே இங்கும் பயன்படுத்தலாம். எனினும், வழக்கில் உள்ள சிலவற்றைக் கூறுவாம். அவை :—

1. திராயிலை, மஞ்சள், இவ்விரண்டையும் அரைத்துப் பூசலாம்.

2. கோடாசூரி அல்லது கோடகசாலை இலையும் மஞ்சளும் சேர்த்து அரைத்துக் கட்டலாம்.

3. காட்டாமணக்குக் கொழுந்தைக் காடியிலவித்து இளஞ்சூட்டில் வைத்துக் கட்டலாம். இதனையே ஆமணக்கு நெய்யில் வதக்கியுங் கட்டலாம். அல்லது இதனிலையைப் பச்சைப் பனையோலையில் வைத்துக் கட்டிக் கும்பிச் சாம்பலில் செருகி வெந்தபின் கசக்கிக் கட்டலாம்.

4. இரணக் கள்ளியிலையைக் கும்பிச் சாம்பலிலிட்டுக் கட்டலாம்.

5. கற்பூரம், சாம்பிராணி இரண்டையுஞ் சேர்த்தரைத்து அத்துடன் அகத்தியர் குழம்பைச் சேர்த்துக் கலந்து பூசலாம்.

**உள் மருந்துகள்.**—கந்தகம் சேர்ந்த மருந்துகள், சேங்கொட்டை, பரங்கிப் பட்டை இவை சேர்ந்த மருந்துகளும் பயன்படும்.

மேற்கூறிய உள் மருந்தாலும், வெளி மருந்தாலும் கட்டியுடையா விட்டால், கட்டியைக் கீறிச் சீழை வெளி வாங்கி விடவேண்டும். பிறகு, மற்ற புண்களுக்குச் செய்யும் மருத்துவத்தைச் செய்ய வேண்டும்.

## விதை நோய்.—(அண்ட ரோகம்).

தேரர் காப்பியம், விதை நோயைக் குடல் அண்டம், குமுறல் அண்டம், நீர் அண்டம், தசையண்டம் என 4 வகையாகக் கூறுகின்றது. அவற்றுள் நீரண்டத்தில் இரத்த அண்டம் ஒரு பிரிவும் தசையண்டத்தில் வளி முதலிய குற்றவளவாக 3 பிரிவும் உண்டாயிருக்கின்றன. இதனை விதை வாதம், பீச வாதம், அண்டவாதம், வளி எனவுஞ் சொல்வர்.

**குடல் விதை நோய்.**—(குடல் அண்டரோகம்) தனது இயற்கை வழி அடைபடும்படியாக மிகுந்தெழுந்த வளி, கீழ்நோக்கு வழியாக விதைக் குள் வாழ்ந்து அவ்விடங்களில் வீக்கத்தையும், சூலையையும், பிறப்பித்து பிறகு கொப்பூழின் நரம்புகளின் வழியாய்ச் சென்று, ஆண்குறியை அணுகி, அதிலிருக்கும நரம்புகளையும் விதையிலிருக்கும் நரம்புகளையும் துயருறச் செய்து, குடல் வளர்ச்சிப் பிணியை யுண்டாக்கும்.

**காரணம்.**—வளியைப பெருக்கக் கூடிய உணவுகளை மிகுதியாயுண்ணல், பரி முதலிய ஊர்திகளில் செல்லுதல், மிகுதியுங் குதித்தல், மிக்க சுமை யெடுத்து வெகுதூரம் நடத்தல், மிக்க குளிர்ச்சி பொருந்திய தடாகத்தில் நாடோறும் குளித்தல், மேற்படி நீரில் குதித்தல், பதினன்கு விரைவுகளை யடக்கல், இச் செய்கைகளினல் குடலானது அசைந்து கலைந்து நலங்கி அதில் நிற்கின்ற வளியுங் கலங்கி, முன்னினும் இரு மடங்கு மிகுந்து உரமாய் மேற்படி குடலை அவ்விடத்தைவிட்டுக் கீழ் நோக்கு முகமாக நழுகச் செய்து, பிறகு, தொடைக் கவுட்டுகளில் இறங்கி அவ்விடங்களில் வீக்கத்தைப் பிறப்பித்து, விதைக்குழியுள் பந்து வந்து மோதுவது போல மோதி விறுவிறுப்பான நோயுண்டாக்கும்.

**குமுறலண்டம்.**—கைத்துருத்தியைப் போல் பருப்பதும் அன்றிமேலேறி னும், கீழிறங்கினும், சும்மா இருப்பினும், கடலொலி போலும் தவளையைப் போலும இடைவிடாது இரைவதும் சிலவேளை இரைச்சலில்லாமலுமிருக்கும். இதனல் நடக்கும்போது அவ்விடத்தில் விகுத்தலும் சிறிது வெப்பத் தினல் வாயு மிகுங்கால் நோயுண்டாகும். இது குமுறலைத் தருவதால் குமுறலண்டம் எனப்பட்டது. இதனை எறண்டம், இறங்கண்டம் என்றுங் கூறுவர்.

**நீர் விதை நோய்**—(நீரண்டம்).—நரம்பின வழியாகச் சுரக்கின்ற தீய நீரினல் பருதது கெட்டிபட்டு, சில வேளைச் சுரத்தை யுண்டாக்குவதும், வருத்தத்தைச் செய்வதுமாயிருக்கும். இது கருவிகளாலும், காரங்களி னலும் தீர்ந்தாலும் முன்போல் நரம்பின் வழியில் நீர் இறங்கவொட்டாத மருததுவம் செய்ய வேண்டும். இவை நிற்க, குருதி விதை (இரத்த அண்டம்) என்பது நீர் விதை நோயைப் போலவேயிருக்கும். ஆனல் பருத்தும், கருத்தும் தடித்துமிருக்கும். இதனல் சிலவேளை மயக்கமும், வாந்தியும், பேதியும், நோயும் உண்டாகும். இஃது அறுவை மருத்து வத்தால் நீங்கினும் நீங்கும்.

**சதைவிதை நோய்**—(தசையண்ட ரோகம்).—ஒரு விதையிலாவது இரண் டிலுமாவது வளியினல் முதல் முதல் பலாக் கொட்டையில் வரம்பு கட்டுவது போல வரம்புண்டாகும். அவ்வரம்பில் சதையானது சிறிது சிறி தாகப பஞ்சு சேர்வது போலச் சேர்ந்து மிகுந்த துன்பத்தைச் செய்யாமல் தடித்துக் கனக்கும்.

இதற்கு உடனே உரிய மருத்துவம் செய்யாவிடின், அவ்விதைப்பை நாளுக்கு நாள் கேடுற்ற சதையால் நிறையப்பட்டு, கொடியெலுமிச்சங்காய், கடார நாரத்தங்காய், இளநீர், பருங்கருணைக்கிழங்கு, ஆள்வளளிக்கிழங்கு, பரும் பூசணிக்காய், நீண்டு பருத்த சுரைக்காய் முதலிய அளவுகளை யொக்கப் பருத்து, பூமியில் புரளும்படியாய்த் தொங்கும். இது கருத்து

கடினமாயிருந்தால் வளிச் சதையண்டம் என்றும், மஞ்சள் நிறத்துடன் மென்மையாக விருந்தால் அழற் சதையண்டம் என்றும், வெளுத்துக் கல்போலிருந்தால் ஐயச் சதையண்ட மென்றும் கூறப்படும்.

இதனால் சுரம் முதலிய பற்பல தீக்குணங்களு முண்டாகும். இந் நோயினனுக்குச் சிறு நீரிறங்கலால் ஆண் குறியுமிருக்கு மென்று நினைக்க வேண்டும. அன்றியும இப்பிணி பெண்களுக்கும் காணபதுண்டு.

**அதன் இயல்.**—முன்பு குடல் விதை வளர்ச்சி நோயைப் பிறப்பித்த வண்ணமாகவே வளியானது குடலினின்றுங் கீழிறங்கி அல்குலுக்குள் பூரித்துக் கொள்ளும. அவ்வல்குலின் இரண்டு பக்கத்து சதையும் இத மும் புணர்ச்சிக் காலத்தில் வெண்ணீர் போய்ப் பாய்வதற்கும், காமநீர், சோணிதம, கரு முதலியவைகள் வெளிப்பட்டு வருவதற்கும், கருப்பையி லிருந்து நிதயபத்துள் அடங்கி நீண்டு வந்திருக்கிற வங்குவாசல் என் னும் பூவும் தளர்ந்து, ஆண் குறியைப் போல்நீண்டு வெளியில் தொங்கு வது மன்றி அத் தொளையின் சதை விழுதுவிட்டது போலவும், தேங்கா யுள்ளிருக்கும் முளையைப் போலவும்,தாமரை மொட்டு போலவும், குமிளங் காயைப் போலவும் கெட்ட ஊனது பருத்து அண்டங்களைப் போலவே தொங்கு மென்றறிக. இக் கொடிய நோய் துவக்கத்திலேயே அரிதீற்றீர் வதாகலின் நோயை முதிர விடலாகாது.

**பொது மருத்துவம்.**—இந் நோயில் வளி மிகுதிப்பட்டிருக்கு மாகையி னலே அதைத் தனணிலைப் படுததவேண்டும். இதற்கு எண்ணெய்க்கலப் புள்ள பேதிக்குத் தரவேண்டும். ஈதன்றி யுடலிலுள்ள வறட்சியை நீக்கு வதற்கான மருத்துவமும் செய்ய வேண்டும்.

### இதற்காம் மருந்துகள்.

கழற்சி யெண்ணெய் ½ முதல 1 உச்சிக் கரண்டியளவு காலையில் 3 நாளைக்குக் கொடுக்கவும் ; வாத நாசத் தைலம் ¼ முதல் 1 அவுன்ஸ் காலையில் 3 நாட்களுக்குக் கொடுக்கலாம்.

அகத்தியர் குழம்பு ¼ முதல் 1 குன்றி யளவு பனை வெல்லத்தில் காலையில் மூன்று நாள.

கௌசிகர் குழம்பு ½ முதல் 1 குன்றியளவு பனை வெல்லத்தில் காலை யில் மூன்று நாள்.

வான் மெழுகு.—பாசிப் பயறளவு இருவேளை பனைவெல்லத்தில் 3 நாள்

தேங்காய்க குழம்பு, சிறறண்ட மெழுகு, பேரண்டச் சுண்ணம் ஆகிய வகைகளும் ஆம்.

அப்பிரகச் செந்தூரம் 1 முதல் 2 அரிசி அளவு இரு வேளை—நொச்சிச் சாறு.

### வெளி மருந்துகள்.

1. கழற்சியிலை, தேங்காய்த் திருகல், ஆமணக்கிலை, சிற்றாமணக்குப் பருப்பு, இவைகளை ஆமணக்கு நெய்விட்டு வதகித்த் தாங்கக் கூடிய சூட்டில் அண்ட வீக்கத்திற்கு ஒற்றடமிட்டு இளஞ்சூட்டில் வைத்துக்கட்ட வீக்கங் குறைவதன்றி வலியும் நீங்கும்.

2. கழற்சிப் பருப்பைக் கோழிமுட்டை வெண் கருவில் இழைத்துப் பற்றிடலாம.

3. உபபையும் கோழிமுட்டை வெண் கருவையும் சேர்த்தரைத்துப் பற்றிடலாம்.

4. விலாரி யிலையை ஆமணக்கு நெய் விட்டு வதககிக் கட்டலாம்.

5. அபினியைப புகையிலை மீது தடவி ஒரு மணி நேரம் அணடத்தின் மேல் போடடு வைக்கலாம்.

**குறிப்பு.**—நீண்ட நேரம் வைத்திருந்தால் இது வாந்தியை யுண்டாக் கும்.

6. அண்ட வீக்கத்தில் காதின் வெளிப்புறப்பகுதியில் துளைப்பதுமுண்டு. வலபபுறத்தில் அண்டவீக்கமிருப்பின இடக்காதையும், இடப்புறத்தில் வீக்க மிருப்பின, வலககாதையும் துளைப்பதுண்டு.

**சுட்டிகை.**—1. அண்ட வீக்கமிருக்கும் மண்டத்திற்கு எதிர்ப்பக்கத்துக் கார் பெருவிரலிற் சுட்டிகையிடுவதுண்டு.

2. குடலண்டததில் குடல் முற்று மணடத்துக்கு விறங்குவதற்கு முன்பு, தொடைக் கவுட்டில் சுட்டிகை யிடுவதாகும்.

## பெருநோய்—(குட்டம்).

**காரணம்.**—இப்பிணி முககுற்ற மாறுபாட்டாலுண்டாவது. குற்றங்கள் முதன் முதலில் குருதியையும் இரண்டாவதாகச் சதையையும் தாக்கிப் பின்னர் தோலின வழியாக வெளிப்படும். அப்போது குற்றத்தினள வாகத் தோலில் நிற மாற்றங்கள் ஏறபடும்.

இது கன்மத்தாலுண்டாகிறதென்று யூகி முனி முதலியோரால் கூறப் படுகிறது.

இதனை,

1. வளிக குட்டம். 2. அழற் குட்டம.
3. ஐயக் குட்டம். 4. வளியழற் குட்டம்.
5. வளி ஐயக் குட்டம். 6. அழல் ஐயக் குட்டம்.
7. முக்குற்றக் குட்டம்.

எனக் குற்றத்தினளவாக ஏழு வகையாக வகுக்கப்படும். ஆனால், மொத் தத்தில் வளியின் கீழ், கபால குட்டம், அழலின் கீழ் அத்திக்காய்க் குட்டம், ஐயத்தின கீழ் மண்டலக குடடம், சொறிக் குட்டம், வளியழற் கீழ் மரை தாகருக குட்டம், வளி ஐயத்தில் வெடிப்புக் குட்டம், அழலையத்தில் திமிர்க் குட்டம், யானைததோல் குட்டம், பனறிததோல் குட்டம், புடைக் குட்டம், கூழாங்கற் குட்டம் எனவும், முககுற்றத்தின பிரிவாகத் தடிப்புக் குட்டம், போரைக குடடம், படர்தாமரைக் குடடம், எரிகொப்புளக் குட்டம், சிரங்குக் குட்டம், பிளப்புக் குடடம, காகக குடடம் எனவும் பதினொண் வகையாக வகுக்கலாம் இவற்றின் காரணம், குறிகுணங்க ளாகியவற்றைச் சித்த மருத்துவததிலும், "யூகி சிந்தாமணி"யிலும் பரக்கக் காணலாம்.

**மருத்துவம்.**—பெரு நோயைத் தீர்ப்பது மிகக்கடினமாம். ஏனெனில் இதனைக் கன்ம நோயென்று முன்னரே கூறியுள்ளோம். இருப்பினும் கன்ம நோய்களும் சாந்தியாற்றீரு மெனச் சித்தர் நூல் கூறு நிற்கும்.

இந் நோய் நீங்க வேண்டுமாயின் நீண்டநாள் மருந்தருந்தல்வேண்டும். பிணி துவங்கினவுடனேயே மருத்துவம் செய்யத் தொடங்கின் விரைவில் குண மேற்படும். இல்லையேல் உடலிலிருக்கும் உடற் கட்டுகளெல்லாம் கெட்டு விடும். ஆதலின், துவக்கத்தில் வாநதியையும், பேதியையும் உண்டாக்கக் கூடிய பரிகாரங்களையும், இரத்தம் வாங்குதலையும் செய்யவேண்டும். வெளிப் பூச்சு மருந்துகளையும் மேலே பூசவேண்டும்.

மேற் கூறப்பட்ட மருத்துவங்களில், கபக் குட்டத்தில் வாந்தி பரிகாரம் முதன்மையுற்றதாம். வளிக் குட்டத்தில் 15 நாட்கட் கொருமுறை பேதிப் பரிகாரத்தைக் கையாளவேண்டும். இப் பேதி மருந்துகள எண்ணெய்க் கலப்புள்ளவை யாயிருத்தல் நலம். இவற்றுள் அவற்றிற்கு முக்கியமாவன:

**மருந்துகள்**—இரசத் தைலம் ½ முதல் 1 அவுன்ஸ் காலையில் 3 நாட்கட்குக் கொடுத்து உப்பில்லாப் பத்தியம் வைக்கவேண்டும்.

2. கருடன் கிழங்கெண்ணெய் இதையும் மேற்படியாகவே வழங்க வேண்டும். இவ்விரண்டு மருந்துகளும் பேதியை யுண்டாக்குவது மன்றிக் குட்டத்திற்கு நேர் மருந்துகளாம். பொதுவாகப் பேதி மருந்துகளைத் திங்கட் கொருமுறை கொடுக்கலாம். ஆனால், மலக்கட்டிருப்பின், அவ்வப் போது கொடுப்பதில் குற்றமின்றும்.

குருதி வாங்கல் அழற் கலப்புள்ள குட்டங்களில் நன்மை பயக்கும். குட்டம் உடலெங்குும்பரவியிராது, சில விடங்கள் மாத்திரமே யிருக்குமாயின் அவ்வவ் விடங்களில் குடுவை வைத்துக் குருதியை யெடுத்து விடலாம். உடலெங்கும் குட்டமிருப்பின், நெற்றி, கை, கால் இவ்விடங்களில் கீறிக் குருதியை வெளியாக்கலாம். செந்நீரை ஆறு திங்கட்கொரு முறையே வெளிவாங்கவேண்டும்.

குட்டத்தில் மூக்குப்பொடி (ஆக்கிராணம்) போட்டுத் தீர்க்கலாம் எனச் சில சித்தர் நூற்கள் கூறுகின்றன.

பெரு நோயின் உள் மருந்தின்தொகை, நூல்முறையிலடங் காதாயி னும், சிலவற்றை யீண்டுக் கூறப்படும்.

### தாவர வகுப்பில் சில மூலிகைகள்.

சேங்கொட்டை, நீரடிமுத்து, வாய்விடங்கம், பேயத்தி, கருங்காலி, கலியாணமுருக்கு, கோட்டம், தகரை, சரக்கொன்றையிலை, கார்போகி, சீமையகத்தி அல்லது வண்டுகொல்லி, வேம்பு, நிலவேம்பு, சிவனார் வேம்பு, பூவரசு, ஆகாய கருடன் கிழங்கு, மஞ்சள், வெட்பாலை, ஆடு தீண்டாப்பாளை, தேவதாரு, அகில், பரங்கிச்சக்கை, எறழிஞ்சில் ஆகியவைகளன்றிக் கைப்புச் சுவையுடைய மூலிகைகளும் நன்றும். இவற்றுள் சேங்கொட்டை, நீரடி முத்து சேர்த்துச் செய்யக்கூடிய இளகங்கள் பல "அகத்தியர் வல்லாதி 600" என்னு நூலில் பரக்கக் காணலாம்.

**தைலங்களுள் ஊழலாற்றித் தைலம்—இதனைப் பயன்படுத்து முறை.**

(தே. தைலவர்க்கம்).

" முதிருழலாற்றிமண்ணரசு மாலுகமென்னு மூவதளும் வீசை
[வீசை
மூளரி முரணுந்தண்டு நந்தீசர் கோற்கந்த முந்திரந்திற மிவைந்
[துஞ்
சிதருதிடித் தெண்ணிரண்டு கடனீர் பெய்து தீயிலாந் தொகையி
[லொனருத்
தீர்த்தகுடி நீரிலிது மணிநெய்யிது வேசரித்தெண்ணீரம்மல
[வமுது பாற்
புதிதாங் கடத்தட்டி யிருதொடியருந்தி முப்போதாறு நாட்பின்
[படுப்
போட்டுண்டதற்பினே மப்பாலிஞடிடு புகன்ற பஞ்சாங்குல நெயை
யிதிலாங் கனற் கிரவிறுட் டெடையுண முறையுளெணெய் யட்டி
[முன் பிணுடுண்
சீரணமேகப் புணமை குட்டுமறு மெம்மாணே யிஃதூழலாற்றி
[நெய்யே"

நாட்சென்ற ஊழலாற்றி, பூவரசு, வேம்பு என்னும் இம் மூன்றின் மரப்பட்டைகளும் வகைக்கு வீசை 1, புனற்றண்டு, பிரப்பங்கிழங்கு வகைக்கு வீசை ½, இவற்றைத் தறித்து இடித்துக் குடிநீர்ப்பானையிலிட்டு 12 மரக்கால் நீர் விட்டெரித்து, ஒரு மரக்காலாகக் சிறுக்கி வடித்து, அவ்வளவே சிற்றுமணக்கு நெய்யும், கழுதையின் மூத்திரத் தெளிவும், கழுதை லத்திப்பால் ½ மரக்கால் சேர்த்துப் புதிதாகப் பழக்கிய தைல பாத்திரத்தில் ஊற்றி எரித்துக் குடித்தைலமாக வடிக்கவும்.

அளவு—பலம் 2, காலையில் 3 நாள் உப்பில்லாப் பத்தியம், மறுபத்தியம் 3 நாள், 7 ஆம் நாள் உப்பு வறுத்துக் கூட்டி 8 ஆம் நாள் ஓமப்பால் தேய்த்துத் தலை முழுகச் செய்யவும்.

இப் பத்தியத்தாலுடலில் சூடேற்படின் பாவன பஞ்சாங்குல தைலத்தை இரவில் படுக்கைக்குப் போகுமுன் போதுமான நாளுண்ண சூடு தணியும்.

இதே தைலத்தை ஆமணக்கு நெய்க்குப் பிரதியாக எண்ணெய் சேர்த்து முடித்தைலமாகக் காய்ச்சி மூழ்கலாம். இத் தைலத்தால் உடற்கட்டுகளில் பரவிய புண்களும், வெட்டை முதலிய மேகமும், மேகப் புண்களும், தினவுகளும், குட்ட நோய்களும் ஒழிந்துவிடும்.

**சிவனார் வேம்புக் குழித்தைலம் (பிரமமுனி—700).**

வாயுவொடு சருவநோ யெல்லாந்தீர மைந்தனே சிவன்வேம்புத்
[தயிலங்கேளு
வாயுவொடு சிவன்வேம்பு சமூலங்கொண்டு வளமாக நிழலுலர்த்
[திச் சூரணித்து

வாயுவென்ற சூரணத்தோ டின்னமொன்று வாலுழுவை யரிசி
[சமன் கொண்டே நீதான்

வாயுவென்ற கருடனிட கிழங்குச்சாற்றுல் வளமாக வாட்டிமிக
[வில்லே கட்டே.

கட்டியே பூபுடத்திற் றைலம்வாங்கு கருப்பூரம் காற்பலந்தான்
[பொடித்துப் போட்டு

கெட்டியாய்க் காசெடைதான் மண்டலங்கொள்கெணிதமுடன் மேற்
[பூசத் தீரும் நோய்கேள்

குட்டமொடு குறைநோயும் பெருவியாதி கோளரிய மேகவெடி
[சூலைபுண்கள்

கட்டியுடன் வண்டுகடி யூளைச்சல்குத்து கரப்பனேடு சில விஷங்
[கள் காணு தென்னே.

## சிவன் வேம்புச் சூரணம்

காணுத சிவன்வேம்புச் சூரணங்கேள் கருதியே சிவன்வேம்பு
[சமூலங் கொண்டு

கோணுத நிழலுலர்த்திப் பலந்தான்பத்துக் குறிப்பாகச் சங்கம்
[வேர் பலந்தானி ரண்டு

தோணுத வெள்ளைச்சா ரணையின்வேரும் தூதுவளை மிளகரு
[ணை யமுக்க ராவேர்

கோணுது வகைவகைக்குப் பலந்தா னிரண்டு கொடிவேலி
[நொச்சி கருஞ்சூரைவேம்பே.

வேம்புடனே திரிகடுகு திரிபலாதி விதமான கார்போகி கரிய சீரம்

சேம்பான கடனுரையும் வசம்பிந்துப்பு செப்பரியக ருங்காலிப்
[பட்டை யோடு

கோம்பான மூலமொடு பரங்கிப்பட்டை கோப்பிரண்டை கருவாகை
[யூறற் பட்டை

சோம்பாக வகைக்கிரண்டு பலமாய்ச் சொன்னேம் சொற்பெரிய சிவ
[னார்தன் வேம்புகேளே.

கேளேநீ யிவையெல்லா மொன்முய்ச் சேர்த்துக் கிரமமுட னிழலு
[லர்த்திச் சூரணித்துத்

தேளேநற் பாண்டத்தி லிட்டு மைந்தா திருகுகள்ளிச் சாறும்வெள்
[ளாட்டு நீரும்

வேளேநீ பேய்க்குமட்டிச் சாற்றி னேடும் விதமான தேசிச்சாறு
[வகைவ கைக்கு

கோளேதான் வகைக்கு ஒரு படிதான் வார்த்து குமுறவே விரவி
[நன்முய் மூடிப் போடே.

மூடியே நாண் மூன்று புதைத்து வைத்து முசியாம லெடுத்திரவி
[யுலர்த்தி நன்றாய்
நாடியே சட்டிதனி லிட்டுமூடி நணுகி யந்தி சந்திவெரு கடிதூ
[ளப்பா
மூடியே தூளதனை யெடுத்து நீயும் முன்சொன்ன சிவனர்வேம்
[புத் தயிலந் தன்னைப்
பாடியே காசெடைதான் சேர்த்துக் கொள்ளப் பதினெட்டு குஷ்டம்
[டங் குறைநோய் போமே.

சிவனார் வேம்புக்குழித்தைலம் 10 முதல் 20 துளி, சிவனார் வேம்புச் சூரணத்தில் கலந்து தர வேண்டும்.

இரச, உபரசப் பொருள்களுள், இரசம், கந்தகம், துருசு, இரும்பு செம்பு ஆகியவை சிறப்பாகப் பயன்படும்.

### சில உள் மருந்துகள்

1. சண்ட ரசபற்பம்.
2. வீர மெழுகு.
3. இரச மெழுகு.
4. இரசத் தைலம்.
5. கந்தக ரசாயனம்.

இவைகளை அததற்குச் சொன்ன அளவு, துணைமருந்து, நாளளவாக உண்ணப் பெரு நோய் குணப்படும். கடையில் சொன்ன கந்தக ரசாயனத்தை நீடித்த நாள் உண்ணக் குணந்தரும்.

6. **கந்தகச் சுடர்த் தைலம்.**—5 முதல் 10 துளி சர்க்கரையில் கடும் பத்தியத்துடன் 5 நாளைக்குக் கொடுத்து மறு பத்தியம் வைக்க வேண்டும். இப்படியே மாற்றி மாற்றித் தரவேண்டும்.

7. **கந்தக மெழுகு.**—2 குன்றி 2 வேளை, இது பிளப்புக்குட்டத்தில் நன்றாக வேலை செய்யும்.

8. **துருசு செந்தூரம்.**—1 முதல் 3 கடுகளவு வெண்ணெய் அல்லது நெய்யில் இரு வேளை ஒரு வாரம் தரலாம். புளியில்லாப் பத்தியம். ஒரு வாரம் சென்ற பின் மறு பத்தியம் கொள்க.

9. **செம்பு பற்பம் அல்லது செந்தூரம்.**—குட்ட நோய்குச் சிறந்த மருந்தாகும். அளவு ½ முதல் 1 அரிசி, வெண்ணெய், நெய் இவைகளில் கலந்து இரு வேளை ஒருவாரம் தந்து மறுபத்தியம் வைத்து, இவ்வாறு ஒரு மண்டலங் கொடுக்கலாம். பத்தியம்—புளியில்லாப் பத்தியம்.

10. **குஷ்டகஜ கேசரி.**—அப்பிரக பற்பம், காந்தச் செந்தூரம், அயச் செந்தூரம், இரச பற்பம் இவை ஓரளவு சவுரிப் பழச்சாற்றில் அரைத்துப்

பயறளவு மாத்திரை செய்து, சர்க்கரை, தேன் முதலிய துணை மருந்துடன் நோய் வன்மைக்குப் பொருந்த அளவு படுத்திக் கொடுக்க, குட்டம், மேகம் முதலிய கொடிய பிணிகள் நீங்கும். [சித்த வைத்தியத் திரட்டு]

**வெளிப் பூச்சுகள்.**—முன் உள்ளுக்கு வழங்கலாமெனக் கூறிய மூலிகைகளுடன், அலரி, புங்கு, எருக்கு, கடுகு ஆகியவைகளையும் பயன் படுத்தலாம். ஈதன்றி அன்னபேதி, மனோசிலை, தாளகம் ஆகியவையும் பலாசுப்பும், இந்துப்புமாகும்.

வெளி மருந்துகளைப் பூசுமுன், பூசுமிடத்தைத் தகுந்தவாறு சுரண்டிக் கைப்புச் சுவையும், புழுக்கொல்லிச் செய்கையுள்ள மருந்துகள் சேர்த்துக் காய்ச்சிய குடி நீரால் கழுவவேண்டும்.

**கீழ்க் கூறப்படும் சிலமுறைகள் வழங்குவதற்குரியன :**

1. வாய்விடங்கம், சுக்கு சேர்த்தரைத்த பூச்சு.

2. மிளகு, திப்பிலி, திரிபலை, வசம்பு, நாபி, கொடிவேலி, கோரைக் கிழங்கு ஆகிய இவைகளைச் சேர்த்தரைத்த பூச்சைக் கபாலக்குட்டத்தில் மேற்பூச்சாக வழங்கலாம்.

3. மஞ்சள், மரமஞ்சள், வெண்கடுகு, முள்ளங்கி விதை, தகரை விதை, திரிகடுகு, தேவதாரு, வாய்விடங்கம் இவைகள் சேர்ந்த பூச்சும் மேற்படி குட்டத்திற்கு வெளிப்பூச்சாம்.

4. கொடிவேலி வேர்ப்பட்டையை யரைத்து மண்டலக் குட்டத்தில் பூசலாம்.

5. தகரை விதை, ஆவிரை விதை, கார்போகி, மஞ்சள், இந்துப்பு ஆகியவற்றைக் காடி விட்டு ஆட்டிச் சொறி குட்டத்திற் பூசலாம்.

6. இரசம், கார்போகி, தகரைவிதை, வாய்விடங்கம், கொடிவேலி, குன்றி, எருக்கு, அருகம்புல், மஞ்சள, பொடுதலை, கள்ளி, கற்றாழை, முத்தக் காசு, மிளகு, இந்துபபு, சங்குபற்பம் இவைகளைத் தேனிலரைத்து யானைத் தோல் குட்டத்திறகுப் பூசலாம்.

7. **பன்றித் தோல் குட்டம்.**—தகரை விதை, கோட்டம், முள்ளங்கி விதை, மஞ்சள், வெண்கடுகு, கொம்பரக்கு, தேவதாரு, முக்கடு இவைகளை அரைத்துப் பூசலாம்.

8. **புடைக் குட்டத்தில்.**—இரசம், கந்தி, வெங்காரம் இவைகளை முள்ளங்கிச் சாற்றிலும், இஞ்சிச் சாற்றிலும் அரைத்துப் பூசி வரலாம்.

**வேறு.**—தாளகம் பங்கு 1, கந்தகம் பங்கு 2, கார்போகி பங்கு 3, இவற்றைப் பசுமாட்டு நீரிலரைத்துப் பூசலாம்.

9. **தடிப்புக் குட்டம்.**—இலிங்கம், கந்தி, இரசம், சரக் கொன்றை, கார்போகி, நாபி, மஞ்சள், வாய் விடங்கம், கடக ரோகணி, முத்தக் காசு, கொடிவேலி, முக்கடு தகரை ஓரளவு, பழச்சாற்றாலரைத்துப் பூசலாம்.

**10. போரைக் குட்டம்.**—மஞ்சள், ஆடாதோடைக் குருத்து, ஆவின் நீரிலரைத்துப் பூசலாம்.

**11. சிரங்குக் குட்டம்.**—கபாலக் குட்டத்திற்குக் கூறிய மேற் பூச்சு இதற்கும் பயன்படும்.

**12. பிளப்புக் குட்டம்.**—கடுகு, இந்துப்பு, நாட்டு வெல்லம் இவைகளைச் சேர்த்தரைததுப பூசலாம்.

**13. காகக் குட்டம்.**—இரசம், கெந்தி, இரச செந்தூரம், மனோசிலை, மஞ்சள், மர மஞ்சள், கருஞ்சீரகம், சீரகம், மிளகு நெய்யுடன் சேர்த்தரைத்துப் பூசலாம்.

**வேறு சில முறைகள் :**

1. ஆடு தீண்டாப் பாளைத் தைலம்.

2. கரப்பான் தைலம் (தேரன் தைல வர்க்கம்).

3. வங்கக் களிம்பையும் அமிர்த மெழுகையும் கலந்து சொறி குட்டத்தில் பூசலாம். [சித்த வைத்தியத் திரட்டு]

4. **சிரட்டைத் தைலம.**—இது படர் தாமரைக் குட்டத்திற்குப் பயன்படும்.

**குட்டத்திற்குப் புகையும் போடலாம்.**—இப் புகையின் வகைகளை "அகத்தியர் இரண வைத்தியம்" என்னும் நூலிற் காண்க. இதில் பெரும் பான்மை சேரும் பொருள்கள் : வீரம், இலிங்கம், குங்கிலியம், தாளகம், நாயுருவி விதை முதலியவையாம். சில முறைகள் கீழே தரப்படும் :—

" தாரமும் ரசமுங் கந்தி
சமன தாய்த் தூளே செய்து
பாரமாய்ச் சீலை தன்னில்
பரப்பியே தானு ருட்டி
வீரமாய் விளக்கிற் போட்டு
வேப்பெண்ணெய் தன்னை வார்த்துக்
கோரமாய்த் தீப மேற்றி
கொடும்புகை முகத்திலேற்றே."

" ஏற்றிடிற் சன்னி தோஷம்
எழும்பிய குஷ்ட ரோகம்
பாற்றிடிற் பரங்கி சூலை
பதகரி முதலா யுள்ள
பூற்றிடும் புண்கள் யாவும்
புகைபடத் தீரு மென்றே
சாற்றினர் முழுதுந் தேர்ந்த
சாதுக்கள் காண்பாய் நீயே."

அரிதாரம், இரசம், கந்தகம், ஓரளவு, முதலில் அரிதாரத்தை நன்றாய் ஒரு மணி நேரம் அரைத்துப் பொடி செய்து, பிறகு, கந்தகத்தைப் பொடித்து இரசத்தைச் சேர்த்துக் கருப்பு நிறம் வரும் வரை, அரைத்துப்

பிறகு அரிதாரத்தைச் சேர்த்து, அரைமணி நேரம் அரைத்து வெள்ளைத் துணியில் பரப்பிச் சுருட்டித் திரிபோல் செய்து, வேப்பெண்ணெயில் தோய்த்துக் கொளுத்திப் புகை பிடிக்க, சன்னிகள், புண்கள், பரங்கிப் புண், குட்டம் முதலிய எவ்வித இரணங்களும் ஆறும்.

வேறு.

" வீரங் கழஞ்சி தாஞென்று
விதமா யிலிங்கந் தாஞென்று
வார மிகுநத குங்கிலியம்
வனமாங் கழஞ்சு தானதுவும்
ஈரம் பெரிய தாளகமும்
இசையுங் கழஞ்சு தாஞென்று
நேரம் பெறவே சரிசமனுய்
நிறுத்துப் பின்னும் நேர் சொல்லும்."

" சொல்லும் படியே நாயுருவி
சுகமாம் அரிசி நாற்கழஞ்சு
வெல்லும் படியே கல்வத்தில்
விதமா யரைத்துப் பொடிபண்ணி
நில்லும் படியே சீலைதனில்
நினைவாய் எழு கிழிகட்டிப்
புல்லும் புளியஞ் சிராய்சுட்டுப
பொருந்தக் கிழியைத் தான்வைத்தே."

" தானே கண்ணுஞ் சிரட்டைவைத்துத்
தளரக் குழல்வைத் தேயருந்தில்
மானே யேழு பொழுதருந்தி
மறுபத் தியமு மானபின்பு
தேனே வெந்நீ ரதிலேநான்
திறமாய் மூனறு நாள்விடவே
கோனே தீருந் பிணிரோகம்
குணமா மின்னம் சொல்வேனே."

" இன்னம் அவ்வா றேகுமது
இடர்செய் குட்டம் பதகரியும்
மின்னுஞ் சூலை முடக்கமது
மெத்திக் கட்டும் புண்புரையும்
வன்னஞ் செய்யும் வகைகரப்பான்
முதலா யுள்ள வலிகளொடு
துன்னும் வந்த கரப்பானுந்
தொலையு மென்ருர் சித்தரரோ."

வீரம், இலிங்கம், குங்கிலியம், தாளகம் வகைக்கு வாரகனெடை 1¼ நாயுருவி விதை வராகனெடை 5, குழிக்கல்லிலிட்டு ஒரு மணி நேரம் நன்ருக அரைத்துப் பொடித்து, ஒரு துணியில் எழுகழிகட்டி புளியஞ்சிராயில்

தணலுண்டாக்கி, மேற்படி கிழியை அதன்மீது வைத்துக் கண்ணுள்ள அதாவது தொளையுள்ள தேங்காயோட்டை மூடி, அத் தொளையின்மீது மூங்கிற் குழாயை வைத்து எழும் புகையை அருந்தவும். இப்படி எழு தரம் செய்யவும், வெந்நீர்ச் சோறு அல்லது, பாற்சோறு உண்ணவேண் டும். எட்டாம் நாள் உப்பு, புளி சேர்த்துக் கொள்ளவும்.

**தீரும் நோய்கள்.**—குட்டவிரணம், சூலை, கைகால் முடக்கு, புரையோடும் புண், வளிக்கரப்பான், முதலியன.

குட்டநோயினனுடன் கூடியிருந்து வாழலாகாது எனச் சில நூல்கள் கூறுகின்றன.

**இந்நோய்க்காம் உணவுப் பொருள்கள்**—கைப்புச் சுவையுள்ள பொருள் கள் சிறபபுடையன. புளிபபு, உப்பு, கார்ப்புச் சுவையுள்ள பொருள்கள் கூடாவாம். பசுவின் நீர், ஆட்டின நீர், செம்மறியாட்டு நீர், கழுதை மூத் திரம் ஆகியவை சிறந்தன. தயிர், வெல்லம், எண்ணெய், உழுந்து, நீர் வாழ்வன, மாமிசம், கள் ஆகியவை உதவா. பெண் சேர்க்கையை யறவே நீக்க வேண்டும். கத்தூரி, சந்தனம், ஆகியவைகளைப் பயன்படுத்திக் கொள்ளலாம்.

சீமையகத்திக் கீரை, சரக்கொன்றையிலைக் கீரை, நிலாவாரை ஆகியவை களையும் உபயோகிக்கலாம்.

இப் பிணியினன் ஆடும் நீரானது கசப்புச் சுவையுள்ள மூலிகைகள் சேர்த்துக் காய்ச்சினதாயிருத்தல் நலம். அவற்றுள், கருங்காலி, வேம்பு இவ்விரண்டுஞ் சிறந்தனவாம். பலாசு உப்புஞ் சேர்த்துக் கொள்ளலாம். சவுரிப்பழத்தைலம் மேல் தடவிக்குளிக்கப் பயன்படும்.

## வெண்குட்டப்பிணி.

உடலில் இயற்கைக்கு மாறுன வெளுப்பையுண்டாக்குகின்ற வெண்குட்ட நோயானது வளி, அழல், ஐயவெண்குட்ட நோய்களென மூன்று வகைப் படும்—

1. **வளிவெண்குட்ட நோய்.**—இது சுர சுரத்துச் சிவந்து கொஞ்சங் கருமைச் சாயலுடன் வெளுத்திருக்கும். வெளுக்காத இடங்களில் அழுக்கு நிறமுண்டாகும்.

2. **அழல்வெண்குட்ட நோய்.**—இது செந்தாமரைப் பூவிதழ் போலச் சிவந்த வெளுப்பாகப் பாவும். பரவுகின்றவிடங்களில் எரிவதும் மயிர்கள் உதிர்வதுமாயிருக்கும்.

3. **ஐயவெண் குட்டநோய்.**—இது தும்பைமலர் போல வெண்மை யாக வெளுத்துக் கொஞ்சந்தடித்துப் பரவும. இது பரவுமிடங்களில் நமைச் சலுண்டாம்.

இக் குட்டங்கள் குருதியையும், சதையையும், கொழுப்பையும், பற்றும் போது கண்ணுக்கு வெறுப்பான (அசங்கியமான) நிறங்களையுண்டாக்கும். அன்றியும் இவைகளினுல் உடலில் வெடிப்பும் வீக்கமும் உண்டாமென் பாருமுளர்.

**தீரும் தீராதவைகளை யறிதல்.**— மயிர்களை வெளுக்கப்பண்ணுமலும், கையால் தடவில் மேடுபள்ளமில்லாமலும், சடைப்பின்னல்போல் நெருப்பால் சுட்டாறிய வடுபோல் வெளுக்காமலிருக்கும் வெண்குட்டம் தீரும்.

மூவித வெண்குட்டங்களும் ஒன்றுக்கொன்று அரிதில தீர்வனவாம்.

**தீரா வெண் குட்டநோய் அறியும் விதம்.**—எந்த வெண்குட்டமானாலும், மேற்கூறிய தீரும் குறிக்கு மாறாக இருந்தாலும், முதன் முதலில குறி, எருவாய், உள்ளங்கை, உதடு என்னுமிவ்விடங்களில் பிறந்து, வெரு வுமாறுவிரைவில் பரவினாலும் தீராவாம்.

**மருத்துவம் :**

**இரும்புச் செந்தூரம்.**—தூய்மைசெய்த அயப்பொடியை நாவல் பழச் சாற்றில் ஊறவைக்கவும். இப்படியே நாள்தோறும் அயம் ஊறும்படி மேற்படி சாறறை ஊற்றிக் குச்சியினால் கிளறிக்கொணடு வரவும். இப்படி 40 நாள் செய்து அரைதது வைக்கவும் அல்லது ஒரு புடம்போடடு எடுக்கவும். இதனை அளவுபபடி பொருத்தமான துணைமருந்துடன் 48 நாள் கொடுக்க வெண்குட்டம் தீரும்.

**செம்புச் செந்தூரம்.**—தூய்மைசெய்த செம்புப் பொடியைத் துவரை வேர்க் குழி நெய்யாலரைத்துப் புடமிடவும். இப்படிப் பதினைந்து முறை செய்யச் செந்தூரமாகும். இதனை ½ முதல் 1 அரிசி அளவு நெய்யில் கொடுத்து புளியில்லாப் பத்தியம் வைக்க வெண்குட்டம் நீஙகுமெனபர்.

**வேறு.**—தூய்மை செய்த கந்தகம் 1 பங்கு, சிலா சத்து பற்பம் 2 பங்கு இவைகளைத துவரை வோக்குழி நெய்யாலரைத்துக் குனறியளவு மாத்திரை செய்து, ஒரு மாத்திரையாகக் காலைமாலை இருவேளை கொடுக்க வும். பால் துணை மருந்தாகும். இச்சாபத்தியம்.

**வேறு.**—விளாம்பட்டை, காட்டுமாம்பட்டை, சேங்கொட்டை, மிளகு, சிவனார்வேம்பு, மஞ்சள் ஓரெடை சேர்த்து இறக்கிய குழிப்புட நெய்யிறக்கி 3 முதல் 5 துளி சர்க்கரையில் கொடுக்கவும்.

**பத்தியம்.**—பாற்சோறு.

**தங்கச் செந்தூரம்.**—தங்கத்தை முள்ளிக்கீரையில் அரைத்துப் புடமிட வும். இப்படி ஐம்முறை செய்யச் செந்தூரமாம். இச் செந்தூரத்தை, எண்ணெய் பலம் 10, சவுரிக்கொடிச்சமூலச்சாறு பலம் 10 கலந்ததில் போட்டு வெயிலில் வைத்து 10 நாள் சென்றபின் கலந்து ஒரு கழற்சி யளவு உண்டு, தைலத்தை மேலுக்குப் பூசி மூழ்கவும். இதனால் வெண் குட்டந் தீரும். (அகத்தியர் பரிபூரணம்—400).

**வெளி மருந்துகள்.**

1. துவரை வேர்க்குழித்தைலம் மேற பூசலாம்.
2. கார் கோல் அரிசியைக் காடி விட்டரைத்துப் பூசலாம்.
3. மயில் துத்தத்தைக் கும்மட்டிக்காய்ச் சாற்றிலரைத்துத் தடவலாம்.

4. 'கருஞ்சீரகத்தை வெள்ளாட்டுப் பித்தில் பாவனை செய்து குழியம்மி யிலிட்டரைத்து மெழுகாக்கி மிளகளவு காலை மாலை உள்ளுக்குத்தரலாம். இதனையே மேலுக்கும் பூசலாம்.

5. வெள்ளைப்பூண்டையும் நவாச்சாரத்தையும் அரைத்து மேற்பூச்சாகப் பூசலாம்.

## கிரந்தி

ஐய வளர்ச்சியினால், முன்பு புண்ணுண்டாம் எனக் கூறிய உடலுறுப்பு களிலும், மற்றைய விடங்களிலும் வளிக்கிரந்தி முதற் புண்கிரந்தி யீறாக ஒன்பது வகைக் கிரந்தியுண்டாகும்.

சிலர் குருதிக் கேட்டாலும், குருதி, சதை, கொழுப்பு இவற்றின் வேறு பாட்டாலும், வளியும் ஐயமுங் கெட்டு இந்நோய் தோன்றுகின்றதென்று கூறுவர்.

1. **வளிக் கிரந்தி**.—இது சில சமயங்களில் வீங்கியும், சில சமயங் களில் சுருங்கியும் இருக்கும். குத்தலையும், அதிரலையும் பெற்றிருக்கும். இது பழுத்துடைநதால், மிக்க சிவப்புள்ள தூய்மையான குருதியொழுகும். அப்படிக் கிரந்தியுடைந்ததனாலுண்டான புண் மென்மையாக இருக்கும்.

2. **அழற் கிரந்தி**.—இது மஞ்சள நிறத்தையும் சிவப்பு நிறத்தையும் பெற்று, எந்நேரமும் எரிச்சலைத் தருவதாயிருக்கும். இது பழுத்துடைந் தால் சூடுகையான குருதியும் சீயுமொழுகும்.

3. **குருதிக் கிரந்தி**.—முக்குற்றங்களினால் செந்நீரானது கெடுதி யடைந்து மிகவும் பொங்கிக் கொதிக்கும்போது, அதிலுண்டாகின்ற நுரை களினால் பிறந்த கிருமிகள் தமது மூக்கினால் கிண்டும் காலத்தில் பிறக்கும். இக்கிரந்தி நரம்பையும் சதையையும் பொருந்தி, அழற்கிரந்திக்கு உற்ற குறிகளுடன் செம்புனலை வடியச்செய்யும்.

4. **சதைக் கிரந்தி**.—இது சதையை வளர்ச்சி செய்யா நின்ற இறைச்சி முதலிய உணவாற் பிறந்து மினு மினுத்தும், பருத்தும், கெட்டியாய், நரம்புகளால் சுற்றப்பட்டும் இருக்கும். இது பழுத்துடைந்தால் ஐயக்கிரந்தி குணங்களைத்தரும்.

5. **கொழுப்புக் கிரந்தி**.—இது கொழுப்பை மிகுதிப்படுத்துகின்ற சுவையுள்ள பொருள்களை மிக்க அளவில் புசிப்பதால், கொழுப்பு வளர்ச்சி யடையும்போது, வளியின் வளர்ச்சியால், சதையிலாவது, தோலிலாவது பிறந்து வெளுப்பதும், வழுவழுப்பதும், மினுமினுப்பதும், குலுங்குவது மாயிருக்கும். இது பழுத்துடைந்தால், சீழானது பிசினைப்போல் குழம்பாகக் கருத்தும், சிவந்தும், வெளுத்தும் ஒழுகும்.

6. **என்புக்கிரந்தி**.—இது என்புகள் நொறுங்கலாலும், அடி படுதலா லும் உண்டாகிப் பருத்து உயர்வதும் சிறிது அமுங்குவதுமாக இருக்கும்.

7. **ஐயக் கிரந்தி**.—இது வெளுத்தும் கனத்தும் நமைச்சலுடன் மிக்க நோயில்லாமல் வீக்கந்தருவதாயிருக்கும். பழுத்துடைந்தால் குழம் பான சீழ் ஒழுகிக்கொண்டேயிருக்கும்.

**8. நரம்புக் கிரந்தி**.—இது வெகு தூரமுள்ள வழியை ஒரே நடை யாக நடந்து வந்து அந்த வேகம் தணியுமுன் மிக்க குளிர்ந்த நீரில் மூழ்குவதாலும், அலைந்து திரிதலாலும், அட்டுப்புக் கலந்த உணவாலும் நரம்புகள் உப்பி, உட்புறத்தில் தடிக்க, இதனால் குறுதியானது ஓட்டமில்லா மல் தேங்கும்போது பிறக்கும். அதன் விளக்கம் : அப்படித் தேங்கிய குருதியோடு கூடிய நரம்புகளை வளி சுட்கப பண்ணியுலர்த்தி வளைவாக முடங்கச் செய்து, அம்முடக்குகளில் கெட்டிப்பட்டதாய் நோய் இல்லாத நரம்புகளை வெளியில் வரப்பண்ணும். இதனை நரம்புச் சிலந்தி யெனவும் வழங்குவர்.

**9. புண் கிரந்தி**.—இது அறு சுவைகளையும் மட்டின்றி நாடோறும் புசித்தலினால் பிறக்கும்.

**விவரம்**.—அந்த இரசமானது, உடலில் சிறிது புண்ணுண்டாயிருந்தா லும், அதனை மிகுதிப்படுத்திக் காட்டும். அல்லது இல்லாதிருந்தாலும் சில நாளைக்குள் சதைகளில் அதனையே கண்டு கண்டாக வெழுப்பும், அப்போது வளியானது ஒரு காரணமுமின்றிக் கரிய குருதியை வெளிப் படுத்தாமல் அவ்விடத்தில் சேர்த்து, உலர்த்துவதால் புண்களுண்டாகும். இதனால், எரிச்சலும், தினவும் மிகும். இது மிகவும் பருத்துயர்ந்தால் அற்புத கிரந்தி யெனச் சொல்லப்படும்.

**மருத்துவம்**.—இதற்குத் தொடக்கத்தில் கட்டிக்குக் கூறியிருக்கிற மருத்துவமே சாலும். இதற்கு முக்கியமாய்ப் பேதிக்கும், வாந்திக்கும் கொடுத்து உடலிலுள்ள இரசம், குருதி, சதை இவற்றைத் தூய்மைப் படுத்துவதற்காக, கந்தகம், இரும்பு, காந்தம கலப்புள்ள மருந்தினைக் கொடுத்தல் நலமென்றறிக. பேதி கொடுப்பதற்கு மேகாந்தத் தைலம் மிகவும் சிறந்தது.

வெளிமருந்தாகக் கட்டிக்குக் கூறிய சில பற்றுகளும், ஒற்றடங்களும் பயன்படுவதாம். கிரந்தி பழுத்ததென்று தெரிந்தால், கீறிச் சீழை வெளிப்படுத்திப் புண்ணிற்குரிய மருத்துவம் செய்தல் இன்றியமையாததாம்.

## கல்லடைப்பு நோய்.

இந்நோய் நீர்ப்பையிலேனும் சிறு நீர்ப் புழையிலேனும் கல்லிருப்ப தைக் குறிக்கும். இப்பிணி நான்கு வகைப்படும். அவை :—

1. வளிக் கல்லடைப்பு,
2. அழற் கல்லடைப்பு,
3. ஐயக் கல்லடைப்பு,
4. வெண்ணீர்க் கல்லடைப்பு **என்பனவாம்**.

**முற்குறி**.—தொடக்கத்தில் நோயாளிக்கு ஒக்காளமும் வெப்புங் காணும். சிறு நீரானது ஆட்டின் நீரைப் போல் நாற்றம் வீசும். கொப்பூழைச் சுற்றி வலிக்கும்.

கல்லுண்டான பிறகு, கொப்பூழைச் சுற்றித் தாங்கொணு வலியுண் டாகும். இத்துடன் ஆண்குறியிலும் அதன் பின்புறத்திலும் வலியுண் டாம். சில வேளையில், சிறுநீர் மெல்லிய இரண்டு கிளைகளாகப்பாயும்.

மற்றுஞ் சில வேளையில், சிறுநீர் இயற்கையாகவும், வேறு சில வேளைகளில் கலங்கலாகவும், செந்நீருடனும் வெளிப்படும். மற்றும் குதிப்பதனாலும், நடப்பதினாலும் நீர்ப்பையில் வலியுண்டாகும்—

1. **வளிக் கல்லடைப்பு.**— இப் பிணியில் நோயாளனுக்கு நீர்ப்பையிடத்தில் பொறுக்கலாற்றாத வலியிருக்கும். வலி தாங்கக் கூடாமையினால் பிணியாளி பல்லைக்கடிப்பதும், ஆண் குறியைக் கையினால் பிசைவதும், கொப்பூழைப் பிசைவதுமாக இருப்பான். மலமும் வருத்தத்துடன் சிறிதளவே வெளிப்படும். நீர் துளித் துளியாகவும் கருமை நிறமாகவும் வெளிப்படும். அச் சிறு நீரோடு வெளிப்படுகின்ற கற்கள் முள் போன்ற கருமையாக இருக்கும்.

2. **அழற் கல்லடைப்பு.**— இந் நோயில் நீர்ப்பையில் கொதிப்பும் எரிச்சலுங் காணப்படும். இதில் வெளிப்படுங் கல், செம்மை கலந்த மஞ்சள் நிறமாயிருக்கும்.

3. **ஐயக் கல்லடைப்பு.**— இந் நோயில் நீர்ப்பை திண்ணியதாகவும் குளிர்ச்சியாகவுந் தோன்றும். அவ்விடத்தில் ஊசியால் குத்துவது போன்ற வலியுண்டாகும். இதனில் வெளிப்படுங் கல் வெண்மையாகவும் வழவழப்பாகவும் இருக்கும்.

4. **வெண்ணீர்க் கல்லடைப்பு.**— இந்நோய் புணர்ச்சிக் காலத்தில் வெண்ணீரையடக்கு வதினாலும் அல்லது வெண்ணீரை வளர்ச்சி செய்யக் கூடிய மருநதுகளை உட்கொள்ளுவதாலும் உண்டாகின்ற மிக சூட்டினால் வெண்ணீரானது வெண்ணீருழியிலிருந்து வெளிப்பட்டு, வெண்ணீர் நாளத்திலே தங்கி வறண்டு போகும். அப்படிப்பட்ட வெண்ணீர் வளியினால் உலரப் பெறுமென்பதாம்.

இந்நோயில் நோயாளனுக்கு அடி வயிற்றிலும் விதையிலும் வலியுண்டாகும். சிறு நீர் வெளிப்படுவது மிகவும் துன்பமாயிருக்கும்.

**குறிப்பு.**— சிலருக்கு உலர்ந்த வெண்ணீரானது சிறு நீருடன் மணல் போல வெளிப்படும். இதற்கு "மணற் கல்லடைப்பு" என்று பெயர்.

**மருத்துவம்.**— வரால் மீனறலைக் கல்லைப் பொடித்து இள நீரிலேனும் முள்ளங்கிச் சாற்றிலேனும் சிறுபீளைச் சாற்றிலேனும் அல்லது சிறுநீர் பெருக்கிக் குடிநீரிலேனும் கொடுக்கலாம்.

வெடியுப்புச் சுண்ணம், நண்டுக்கல் பற்பம், சிலாசத்து பற்பம், குங்கிலிய பற்பம், கல்லுடைக்குடோரி, சலமஞ்சரி, மாலினி வசந்தம்—இம்மருந்துகளை அவ்வவற்றிற் சொல்லப்பட்ட அளவுடனும் துணை மருந்துடனும் கொடுக்கலாம்.

வெடியுப்புப் புகை நீர் 1 முதல் 5 துளி, 1 அல்லது 2 அவுன்ஸ் நீரில் கலந்து கொடுக்கலாம். இம் மருந்து முறைகளைச் சித்த வைத்தியத் திரட்டில் பார்க்கவும். ஈதன்றி அறுவை மருத்துவமுஞ் செயற்பாலதாம்.

## ஆண் குறி நோய்.

ஆண்குறியில் வரக்கூடிய நோய்கள் 23 ஆகும்.

**I. கொருக்கு—**

1. வளிக் கொருக்கு.
2. அழற் கொருக்கு.
3. ஐயக் கொருக்கு.
4. முக்குற்றக் கொருக்கு.
5. குருதிக் கொருக்கு.

| | | | |
|---|---|---|---|
| II | சிறு முளை. | XIII | பிளப்புப் புண். |
| III | கடுகுக் கொப்புளம். | XIV | தோல் தடைப்புண். |
| IV | வீரல் கொப்புளம். | XV | நெருக்குக் கிரந்தி. |
| V | இலந்தைக் காய்க்கட்டி. | XVI | திமிர்க்குறி நோய். |
| VI | வெண்மேகப் புண். | XVII | துளைப் புண். |
| VII | எரி'ப புண். | XVIII | தோலழிப் புண். |
| VIII | ‍று கொப்புளப் புண். | XIX | ஊன் அழிப் புண். |
| IX | தாமரைக்காய்த் தடிப்பு. | XX | செந்நிறக் கொப்புளம். |
| X | வரிசைப் புண். | XXI | ஊன் நிறக் கட்டி. |
| XI | கரிப் புண். | XXII | பரவு கட்டிப் புண். |
| XII | கற் புண். | XXIII | கருமருள் திரட்சிப் புண் |

**காரணம்.**—தீயவொழுக்கமுடைய பெண்களோடாவது, மேகப் புண்ணுடைய பெண்களோடாவது, தன்னை விரும்பாத பெண்ணுடனாவது வீட்டு விலக்கமான பெண்ணோடாவது, சமீபத்தில் கருவுயிர்த்த பெண்ணோடாவது, குதிரையோடாவது புணர்வதால், முக்குற்றங்கள் வேறுபட்டு, ஆண்குறியில் புண்ணுண்டாகும்.

ஈதன்றி, ஆண்குறியில் பலவகைப்பட்ட தளர்ச்சி நீக்கற் குரியனவாய் மேற்பூச்சுகளைப் பூசப் பெறுவதாலும், ஆண் குறியைக் கடுமையாகத் தொழிற்படுத்துவதாலும், சுமப்ச் செய்தலானும் சிறு நீர்ப்பையில் நீர் நிறைந்திருக்கும்போது கடினப் புணர்ச்சி உளுற்றுவதாலும் உண்டாகும்.

**1. கொருக்கு நோய்.**—இஃது ஐவகையினதாம்.

நஞ்சுக் கடியினால் உண்டாகின்ற குறி குணங்களைப் போல் ஆண்குறியில் தோற்றுவிக்கும்—

**1. வளிக் கொருக்கு.**—குண்டூசியின் தலை போன்ற கொப்புளங்கள ஆண் குறியின் முன் தோலிலும் சிறுநீர்ப் புழையிலும் உண்டாகி அதனால் சிறு நீர்ப்புழை வறண்டும் சில வேளையில் அடைபடும்.

**2. அழற் கொருக்கு.**—மேற்சொன்ன குறி குணங்களோடு குறி வீங்கியும் சிவந்துமிருக்கும். காய்ச்சலுமுண்டாகும்

**3. ஐயக் கொருக்கு.**—இந்நோயில் ஆண் குறி தடித்தும் திணிப்பாகவும் மினுமினுத்துமிருக்கும். நமைச்சலுமுண்டாகும்.

4. **முக்குற்றக் கொருக்கு.**—இதில மூனறு குற்றக் கொருக்குகளில் கூறப்பட்ட குறி குணங்களுடன அண்டமும் வீங்கியிருக்கும்.

5. **குருதிக் கொருக்கு.**—இதில் ஆண்குறி கருத்திருக்கும். சுரம் விடாமற் காயும்.

**தீரும் தீராதவை.**—தனிக் குற்றத்தினுலுண்டானவை தீரும். குருதிக் கொருக்கு அரிதிற்றீரும. முக்குறறக் கொருக்குத் தீராது.

**மருத்துவம்.**—உள் மருநதுகளினுலும் வெளி மருந்துகளினுலும் தீர்க்க வேண்டும். நோயாளி வன்மையுடையவனுகவுமிருந்தால், வன்மைக்குத் தகுந்தவாறு பேதிக்கும், வாந்திககும் கொடுகக வேண்டும். இதற்குப் பயனபடக் கூடிய மருந்துகள் பல இருக்கினறன. இதில் முக்கியமாகச் சேரக்கூடிய பொருள்கள் பரங்கிபபட்டை, கநதகம், இரசம், மெருகன் கிழஙகு, ஆகாய கருடன் கிழங்கு, கொடிவேலி வேர்ப்பட்டை, சேங்கொட்டை, சிவனர் வேம்பு இவை முதலியன.

**வெளி மருந்துகள்.**—புண்ணும், வீக்கமும பிறவிடஙகளுககுப் பரவாம லும், தாக்கப்பட்ட உடற் கட்டுகள் அழுகாதபடியும் காக்க வேண்டும். குறி மிகவும் வீஙகியிருந்தால், கேடடைந்த குருதியை வெளிபபடுத்த வேண்டும். மருந்து நெய்களைப் பூசி யொறறடமிடலாம். இதறகு மேல் பூச்சாக வழஙகப் பல வகைக களிம்புகளுண்டு. அவை.—வெளளைப் பாடாண மெழுகு, பச்சையெருவை, அமிர்த வெண்ணெய் முதலியனவாம்.

**தூவுதற்குத் தூவு பொடி.**—களிப்பாக்கு, மிருதார்சிஙகி, வீரம், கடுக் காய்ப் பூ, காய்ச்சுக்கட்டி, மாசிக்காய், இவைகளை ஓரளவாய் நிறுத் தெடுத்து நுண்ணிய பொடியாக்கித் தூவலாம்.

**புண் கழுவு நீர்.**—துவர்ப்புள்ள குடிநீரையும்; வீரநீரையும் கொண்டு கழுவலாம்.

**புகை.**—புகைகளில் இன்றியமையாததாய் இரசமும் இரசக் கலப்புள்ள மருந்துகளே சேர்க்கப்படுகின்றன. சில முறைகள் கீழே குறிக்கப்படும்.—

**கிரந்தி, அரையாப்பு. பவுத்திரங்கட்குப் புகை.**

" ஏற்றமுள்ள ஆக்ராணஞ் சொல்லக் கேளு
இதமான அரிதாரம் லிங்கம் பூரம்
பார்த்தேநீ கொடிக்கள்ளிப் பட்டைத் தூளும்
பாங்கான கழுதைலத்தி பொடியு மப்பா
போற்றேநீ வகைவகைக்குக் கழஞ்சி யொன்று
பொங்கமுடன் திருகுகள்ளிப் பாலா லாட்டி
சேர்த்தேநீ யுலரவைத்து எடுத்துக் கொண்டு
மேசயமான புங்குபுளி தன்னிற் கேளே."

" கேளேதான் தணலிலே பொடியைப் போட்டுக்
கெடியான புண்களிலே புகைதான் சாரச்
சூளேதான் வெடிசூலை மேக வெட்டை
சுடுகிரந்தி யரையாப்பு பௌத்தி ரங்கள்
வேளேதோன் இப்புகையில் தீரும் பார்
வேண்டியதோர் பொடியெடுத்து அலரிப் பாலில்
நாளேதான் மத்தித்தவ் விரணத்திற் போட
நாயகனே ரணங்களெல்லாம் ஆறுந் தானே "



| | |
|---|---|
| அரிதாரம்<br>இலிங்கம்<br>பூரம்<br>கொடிக் கள்ளிப் பட்டைத் தூள்<br>கழுதைலத்திப்பொடி | வகைக்கு வராகனெடை $1\frac{1}{4}$. |

இவைகளைப் பொடித்துத் திருகுகள்ளிப் பாலாலரைத்து உலர்த்திப் பொடித்து, புங்கம்பட்டை, புளியம்பட்டை இவற்றை நெருப்பிலிட்டுத் தணலுண்டாக்கி மேற்படி பொடியைத் தணலிலிட்டு, எழும் புகையைப் புண்ணிற் சாரும்படி செய்ய, வெடிசூலை, மேக வெட்டை, சுடுகிரந்தி, அரையாப்பு, பவுத்திரம் இவை தீரும்.

இப்பொடியை வேண்டிய அளவெடுத்து அலரிப் பாலில் ஒரு நாள் மத்தித்து மேற்படி இரணத்திற் போட ஆறும்.

**வேறு.**

இரச கற்பூரம் வராகனெடை 1.
இரச செந்தூரம் வராகனெடை 1.
தேன் மெழுகு பலம் $\frac{1}{4}$.

இரும்புக் கரண்டியில் மெழுகை யுருக்கிக்கொண்டு பூரம், இரச செந்தூரம் இரண்டையும் நன்றாய்த் தூள் செய்து, உருக்கிய மெழுகில் போட்டுக் கலந்து இறக்கி வெள்ளைத் துணியில் ஊற்றி ஐந்து திரி செய்து, நோயாளியைக் காற்று மிகுதியில்லாத அறையில் வைத்து, ஒரு திரியைக் கொளுத்தி வைக்கவும். கண்ணுள்ள தேங்காயோட்டால் அத்திரியை மூடி அக்கண் வழியாய்ப் புகை வருவித்தல் வேண்டும்.

நோயாளியை ஒரு கம்பளிப் போர்வையால் மூடிப் புகை பிடிக்கச் செய்யவும். வத்தி எரிந்து முடிந்த பின் வியர்வை யெல்லாம் துடைத்து விட்டுக் காய்ச்சிய பசும்பால் கால்படி சாப்பிடச் சொல்லவும். மூன்று நாள் வரை பாற் சோறு தான் உண்ண வேண்டும். நான்காம் நாள் நீர்முள்ளி சமூலம் நீரில் போட்டுக் காய்ச்சி ஓமம் அரைத்துத் தேய்த்துக்கொண்டு மேற்படி நீரில் மூழ்கவும்.

**தீரும் நோய்கள்.**—மூக்கு நோய்கள் (பீனிசங்கள்), பிளவை, புற்று கண்டமாலை, மார்புப் பிளவை, கொருக்குப் புண், அரையாப்பு, பவுத்திரம், வெடிசூலை இவை முதலியன.

குறிப்பு.—இப்புகையை மருத்துவர்கள் கையாளலாம். சிலருக்கு இப்புகை வாய்ப் பிடிப்பை யுண்டாக்குகிறது. ஆயினும் பிணி வெகு விரைவில் குணமாகிறது. புகையைப் பயன்படுத்தும் போது பல் வலி அல்லது ஈறு கொஞ்சம் தடிப்பேற்படுவதாயிருந்தால், புகையை உடனே நிறுத்திவிட்டுக் கீழ்க் கூறப்பட்ட குடிநீரைக் கொப்புளிக்க வேண்டும்.

**கொப்புளிக்கும் குடிநீர்.**

| | | | | |
|---|---|---|---|---|
| படிகாரம் | .. | .. | .. | பலம் 2 |
| கடுக்காய்த்தோல் | | .. | .. | பலம் 1 |
| கருவேலம்பட்டை | | .. | .. | பலம் $\frac{1}{4}$ |
| காசுக்கட்டி | .. | .. | .. | பலம் $\frac{1}{4}$ |
| மாசிக்காய | .. | .. | .. | பலம் $\frac{1}{4}$ |

இவைகளை இடித்து அரைப்படி நீர் மட்பாண்டத்திலிட்டுக் கொதிககவைத்து ஒரு நாளைக்கு 3 அல்லது 4 வேளை கொப்புளிக்கவும். இவ்விதம் இரண்டு மூன்று நாள் செய்யக் குணமாகும். பல்லுக்கு யாதொரு கெடுதலுமில்லை.

## II. சிறு முளை.

முக்குற்றங்களும் ஆண்குறியின் சதை பாகத்தைக் பற்றுவதால் இந்நோய் பிறக்கும். சிறு முளைகள் ஆண் குறியின் உள்ளிலாவது வெளியிலாவது உண்டாகும். அவ்விடத்தில் வியர்வையும் பிறக்கும்.

## III. கடுகு கொப்பளம்.

கடுகைப் போன்ற கொப்புளங்கள் ஆண்குறியின் மீது உண்டாகும்.

மருத்துவம்.—முளைகளைக் கத்தி கொண்டு நீவிப் புண்ணை ஆற்றக்கூடிய பொடியால் தூவ வேண்டும். தும்பை, முப்பிலை இவற்றைப் பசு நீரிலரைத்துப் பற்றிடலாம்.

## IV. விரல் கொப்பளம்.

நீண்ட கொப்புளங்கள் ஆண் குறியிற்றோன்றி அவைகள் வெடித்து அவைகளினின்று சீழும் சிலைநீரும் பாயும். இதனால் தாங்கொணு நோயும் குளிரும் உண்டாகும்.

மருத்துவம்.—கொப்புளங்கள் தோன்றியவுடன் அவைகளைக் குத்திச் சீழை வெளிப்படுத்திப் புண்ணை ஆற்றக்கூடிய மருந்துகளை வழங்க வேண்டும்.

## V. இலந்தைக்காய்க் கட்டி.

இலந்தைக்காய் வடிவத்தை யொத்துச் சதை நிறத்தைப் போன்ற கொப்புளங்கள் ஆணகுறியில் தோன்றும்.

மருத்துவம்—இவைகளைக் கத்தியினுல் அறுவை செய்து பிறகு புண்ணை ஆற்றக் கூடிய தைலங்களைப் பூசி ஆற்றிட வேண்டும்.

## VI. வெண் மேகப்புண்.

இந்நோயில் வெண்ணிறக் கட்டி ஆண் குறியில் தோன்றிப் பிறகு அது தீச் சுட்ட புண்போல் மாறிப் புண்களாகிவிடும்.

மருததுவம்.—ஆண் குறியின் மீது அட்டை விட்டுத் தீய குருதியை நீக்கிப் புண்ணைத் தூய்மை செய்து பரிகரிக்க வேண்டும்.

## VII. எரிப்புண்.

எரிச்சலுடன் கூடிய சிறு கொப்புளங்கள் ஆண் குறியிற்றோன்றும்.

மருத்துவம்.—அச்சிறு கொப்புளங்களைக் கத்தியினால் நீக்கிப் புண்ணை யாற்றி விட வேண்டும்.

## VIII. சிறு கொப்புளப் புண்.

முதலில் பச்சைப் பயறறைப் போலவும உளுந்தைப் போலவும் வடிவ முள்ள கொப்புளங்கள் ஆண் குறியிற்றோன்றும். பிறகு, அதைச் சுற்றிச் சிறிய கொப்புளங்களுண்டாகும்.

## IX. தாமரைக்காய்த்தடிப்பு.

முதலில் ஆண்குறியின் தோல் தடித்துப் பிறகு அதில் தாமரைக்காய் போன்ற சிறு முளைகள் தோன்றும்.

மருத்துவம்.—தோலில் தடிப்புண்டாகும் போதே மிகுதிப்பட்ட குருதியை நீக்குவதற்காக அட்டைவிடவேண்டும். பிறகு குளிர்ச்சியான வெண்ணெயையும் வெண்ணெய்க்கலப்புள்ள களிம்பையும் பயன் படுத்த வேண்டும்.

## X. வரிசைப் புண்.

ஆண் குறியின் மீது வரிசையாகப் புண் தோன்றுவதால் இப் பெயர் பெற்றது.

மருத்துவம்.—வெண்ணெயையும் தேனையுங் கலந்து போடவேண்டும்.

## XI. கரிப் புண்

மெலிந்தும் சுருங்கியுமிருக்கின்ற ஆண் குறியில் இப்புண் உண்டாகும். இதற்குத் துவர்ப்புள்ள களிம்புகளைச் சிறு சூடாக்கிப் போட வேண்டும்.

## XII. கல்புண் (கற்புண்).

கல் போன்ற உரமுற்ற பரு ஆண் குறியில் தோன்றும். இதைக் கத்தி கொண்டு நீவிப் பிறகு, அதனாலுண்டான புண்ணை யாற்றிவிடவேண்டும்.

## XIII. பிளப்புப் புண்.

ஆண்குறியின் தோல் முற்றும் தடித்துப் பிறகு அதில் வெடிப்புகள் தோன்றும்.

## XIV. தோல் தடைப் புண்.

ஆண்குறியின் முனைத்தோல் வீக்கங் கொண்டு ஆண்குறியின் முற்பாகத்திலொட்டிக் கொள்ளும். அதனால், சிறுநீர்ப் புழையும் சில வேளையி லடைபடும். இவ்வாறு அடைபடுவதினால் சிறுநீர் மெல்லியதாயிறங்கும். இந்நோயில குறியின் தோலைப் பின்னே தள்ள முடியாது.

மருத்துவம்.—இதற்கு அறுவை மருத்துவஞ் செய்யவேண்டும்.

## XV. நெருக்குக் கிரந்தி.

முடிச்சுகள் போன்ற தடித்த கழலைகள் ஆண்குறியிற்றோன்றும். தகுந்த மருந்து நெய்களைப் பூசிப் பலமுறை ஒற்றடமிடுவதனாற் றீர்ந்து விடும்.

## XVI. திமிர்க் குறிநோய்.

பலவகைப்பட்ட இலேபங்களை அடிக்கடி ஆண்குறியின் மீது பூசுவதால், அதனுடைய இயற்கை வன்மையும், சொரணையுங் கெட்டு விடுவதால், இப் பெயர் பெற்றது. அட்டைவிட்டுக் குருதியை நீக்கி, இனிப்புச் சுவையுள்ள இலேபங்களைப் பூசி, அதன் பழைய நிலைமைக்குக் கொண்டு வரவேண்டும்.

## XVII. துளைப் புண்.

ஆண்குறியில் பல விடங்களில் சிறு சிறு துளைகள் உண்டாகும். சிறுநீர் விடும்போது அத்துளைகள் வழியாய் இழியும். அப்போது எரிச்சலுண்டாகும்.

## XVIII. தோல் அழிப்புண்.

ஆண் குறியின் முன் தோல் அழுகித் தின்னப்படும். இதில் சுரமும் நோயும் உண்டாகும்.

## XIX. ஊன் அழிப்புண்.

ஆண்குறியே அழுகிப் பதனழிந்துபோம். நிரம்ப வலியுண்டாம்.

## XX. செந்நிறக் கொப்புளம்.

கரு நிறம் அல்லது செந்நிறம் பொருந்திய பருக்கள் ஆண் குறியின் மீது தோன்றித் தாங்கொணா வலியை யுண்டாக்கும்.

## XXI. ஊன் நிறக் கட்டி.

ஊன் நிறம் பொருந்திய கழலைகள் ஆண்குறியிற்றோன்றும்.

## XXII. பரவு கட்டிப்புண்.

முக்குற்றங்களினாலே ஆண்குறியில் வீக்க முண்டாகி, விரைவில் பிற இடங்களுக்கும் பரவிப் பிறகு புண்ணாகும். தாங்கொணா நோயைத் தரும்.

## XXIII. கருமருள் திரட்சிப்புண்.

மிளகைப் போன்ற கருத்த கழலைகள் ஆண் குறியிற்றோன்றிப் பழுத்துடைந்து புண்ணாகும்.

**மருத்துவம்.**—இவைகளைக் கத்திகொண்டு நீவி, அதனால் உண்டாம் புண்ணைப் பரிகரிக்க வேண்டும்.

**தீரும், தீராதவை.**—ஊன் நிறக் கட்டி, ஊன் அழிப் புண், பரவு கட்டிப் புண், கருமருள் திரட்சிப் புண் ஆகியவை தீரா. மற்றவை தீரும்.

## பெண்குறி நோய்

இதைப்பற்றி விரிவாக "மருத்துவ நூலில்" கூறப்படும். இங்கு சுருக்கமாகப் பொதுக் காரணங்களையும் பொதுக் குறி குணங்களையும் அவற்றின் வகைகளையும பொது மருத்துவத்தையும் கூறப்படும்.

**பொதுக் காரணங்கள்:**

1. சூதகத் தொடர்பான நோய்கள்.
2. பல ஆடவருடன் புணர்தல்.
3. ஆண்குறி வாயிலாக நோய் சில பெறுதல்.
4. பெரிய குறியுடை ஆடவருடன் கலத்தல்.
5. மேடு பள்ளமுள்ள படுக்கையிற் படுத்தல்.

**பொதுக் குறி குணங்கள் :**

1. பெண் குறியில புழு ஊர்வது போலிருத்தல்.
2. பெண்குறி வறண்டிருத்தல்.
3. பெண் குறியில் நோயுண்டாதல்.
4. பல நிறம் பொருந்திய குருதி யொழுகல்.
5. பெண்குறி சுருங்கிச் சிவத்தல்.
6. தினவெடுத்தல்.
7. எரிச்சலுண்டாதல்.
8. அரையிலும் முதுகிலும் வலி யுண்டாதல்.
9. நகிலம் சிறுத்தல்.
10. ஆறுவது, ஏழாவது திங்களிலே கருப்பையிலுள்ள கரு வெளிப்படுதல்.

**இந்நோய் இருபத்தொரு வகைப்படும்.** அவை :—

1. வளிக் குய்ய நோய்.
2. அழற் குய்ய நோய்.
3. ஐயக் குய்ய நோய்.
4. நுரைக்குருதி குய்ய நோய்.
5. துன்புறுத்துங் குய்ய நோய்.
6. குருதியொழுக்குக் குய்ய நோய்.
7. வெதுப்புக் குய்ய நோய.
8. சூலைக் குய்ய நோய்.
9. சூம்பற் குய்ய நோய்.
10. கோழைக் குய்ய நோய்.
11. எரிச்சற் குய்ய நோய்.
12. வடிதற் குய்ய நோய்.
13. பருக்குங் குய்ய நோய்.
14. அலிக் குய்ய நோய்.
15. பேர்குறிப் புணர்ச்சிக் குய்ய நோய்.
16. துளை சுருக்குங் குய்ய நோய்.
17. பொருந்தாப் புணர்ச்சிக் குய்ய நோய்.
18. நுண் புழுக் குய்ய நோய்.
19. மரைக் காய்க் குய்ய நோய்.
20. பன்முறைப் புணர்ச்சிக் குய்ய நோய்.
21. முக்குற்றக் குய்ய நோய்.

இதுவன்றித் தசையண்ட யோனி நோய் என ஒரு வகையுண்டு. யோனியிலிருக்கின்ற வங்கு வாசல் நீட்சியடைந்து ஆண்குறியை யொத்து வெளியே தொங்கும் அல்லது முற்றிய தேங்காய்க்குள்ளிருக்கும் முளையைப்

போலும் இருக்கும். இது தொடக்கத்தில் தீருவதே மிகக் கடினம். நோய் முதிர்ந்தால் தீர்வதைப் பற்றிக் கூற வேண்டியதேயில்லை.

காரங்களினுலேனும் அறுவை மருத்துவத்தினுலேனும் தீர்ந்தாலும் தீரலாம்.

**குய்ய நோயின் பொதுப் பரிகாரங்கள்**

1. எண்ணெய் தடவி யொற்றடமிடல், இப்பரிகாரம், மருத்துவம் செய்ய வேண்டிய இடம் தடிப்பாகவும் திமிர்த்துமிருந்தால் பயன்படும். இம் மருத்துவம் அடிதள்ளலுக்கும் பயன்படும். ஆனல், ஒற்றமிட்டுக் கருப்பையை யுள்ளே தள்ளிவிட வேண்டும்.

2. பஞ்சுருண்டையை மருந்து நெய்களில் தோய்த்து ஊறவைத்து மேற்சொன்ன நிலைகளில் பயன்படுத்தலாம்.

3. நுண் புழுக்கொல்லிச் செய்கையுடைய பொடிகளில் புரட்டிய பஞ்சு நண்டையைக் குய்யத்தில் ஏதாவது வளர்ச்சியிருந்தால் பயனபடுத்தலாம்.

4. களிம்புகளையும் மேற்சொன்ன நிலைகளில் வழங்கலாம்.

5. சீழிருந்தால் தூவு பொடிகளைப் பயன்படுத்தலாம்.

6. **கழுவுநீர்.**—இது சீழும் கோழையுமிருந்தால் அதை வெளிப்படுத்து வதற்குப் பயன்படும்.

7. எரிச்சலிருந்தால் குளிர்ச்சியுள்ள குடிநீர்களை வழங்க வேண்டும்.

8. **புகை.**—குய்யம் உணர்ச்சியற்றிருந்தாலும், தினவுடனிருந்தாலும், இம் மருத்துவம் பயன்படும்.

9. பரிணமிக்கக் கூடிய எண்ணெய்கள் யோனித் தளர்ச்சிக்குப் பயன் படும்.

## தலையிலும் கழுத்திலும் வரக்கூடிய நோய்கள் 1,008.

**விளக்கம்**

| | | | |
|---|---|---|---|
| 1. உச்சி | 46 | 10. நாக்கு | 34 |
| 2. மூளை | 16 | 11. உள்நாக்கு | 20 |
| 3. காது | 100 | 12. இதழ் | 16 |
| 4. மூக்கு | 86 | 13. நெற்றி | 26 |
| 5. கண் | 96 | 14. கண்டம் | 100 |
| 6. அலகு | 36 | 15. பிடரி | 88 |
| 7. கன்னம் | 49 | 16. புருவம் | 16 |
| 8. ஈறு | 37 | 17. கழுத்து | 36 |
| 9 பல் | 45 | 18. பொது | 161 |

இதனைக் கீழே கூறப்படும் பரராசசேகரச் செய்யுளாலறியலாம்.

" பகருநா லாயி ரத்து நானூற்று நாற்பத் தெட்டும்
புகலுறுப் பெண்ணுன் கோடு பொருந்திடும் பொன்னனுய் கேள்
சிகையுறு சிரததில் ரோகஞ் செப்பிலா யிரத்தெட் டாகும்
வகையுறு பேர்சாத் தீய மசாத்தியம் வழுத்த லாமே. "

" மேவிய வுச்சி தன்னில் விளம்பிய வியாதி செப்பில்
காவியங் கண்ணி னாளே கருதிய நாற்பத் தாறு
சீவிய வமிர்த மீது சேருநோய் பதினா றாகும்
பாவல ருரைத்தார் காதிற் பற்றிய வியாதி நூறே. "

" நூல்வல்லோ ருரைத்தா ராயுள் வேதத்தி னுவலு மாறு
ஏலவார் குழலி னாய்கே ளியம்பிய நாசி தன்னிற்
சாலநோ யெண்பத் தாறு சாற்றிய விழியு ரோகம்
மேலுந்தொண் ணூற்று றென்ன விரித்துரை விளம்பி னாரே."

" நாரியே யலகி ரண்டி னக்கனா ருரைத்த ரோகம்
சீரிய முப்பத் தாறுஞ் சேர்ந்தநற் கவுளி ரண்டில்
வார்முலை மானே நாற்பத் தொன்பதாம் வரிசே ரீறில்
சேருநோய் முப்பத் தேழா மென்றுதான் செப்ப லாமே. "

" ஆகுமெண் ணான்கு தந்த மணிதனோய் நாற்பத் தைந்தாம்
தோகையே சிகுவை தன்னில் ரோகமுஞ் சொல்லுங் காலை
நாகமா முனியு ரைத்தான் முப்பத்தி நாலா மென்னப்
பாகமா யறியுண் ணாக்கிற் பற்றுநோ யிருப தாமே."

" தானமா மிதழி ரண்டிற சாருநோய் பதினா றாகும்
மானனா யிலாடந் தன்னில் வைகுநோ யிருபத் தாறும்
ஊனமில் கண்ட மீதி லுதித்தநோய் நூற தாகும்
பானலங் கண்ணாட் கீசன் பகர்ந்திடும் வேத மாமே "

" மெல்லிநல் லாளே கேளும் விளம்பிய பிடரி தன்னிற்
புல்லுநோ யெண்பத் தெட்டுப் பொருந்திடும் புருவந் தன்னில்
சொல்லிய பதினா றுகுந் தோகையே கழுத்தின் மீது
தில்லையு ளாடி சொன்னான் தெளிந்துகொண் முப்பத் தாறே."

" ஆதியெம் மிறைவன் கூறு மாயுள்வே தத்திற் சொன்ன
நீதிசேர் சிரத்தில் ரோக நிகழ்த்துமா யிரத்தோ டெட்டில்
ஓதுமெண் ணூற்றி நாற்பத் தேழுமே யுணர்ந்தா னின்ற
நீதினூற் றறுபத் தொன்றுந் தேகமெண் சானுந் தானே."

(பரராசசேகரம்—சிரரோக நிதானம்).

**உச்சியிற்றோன்றும் 46 நோய்களின் விளக்கம்**

| | | |
|---|---|---|
| 1. | வளி முதலிய முக்குற்றங்களினால் வரு நோய்கள். | 10 |
| 2. | மண்டைத் தேரை .. .. .. | 1 |
| 3. | மண்டைக் கரப்பான் .. .. .. | 6 |
| 4. | மண்டைக் குட்டம் .. .. .. | 5 |
| 5. | மண்டைப் பிளவை .. .. .. | 10 |

| | | |
|---|---|---|
| 6. மண்டைத் திமிர்ப்பு | .. .. .. | 2 |
| 7. மண்டைக் கிருமி | .. .. .. | 2 |
| 8. மண்டைக் கனப்பு | .. .. .. | 3 |
| 9. மண்டை வலி | .. .. .. | 1 |
| 10. மண்டைக் குத்து | .. .. .. | 1 |
| 11. மண்டை வரட்சி | .. .. .. | 1 |
| 12. மண்டைச் சூலை | .. .. .. | 3 |
| 13. மண்டைத் தோடம் | .. .. .. | 1 |
| ஆக மொத்தம் | .. | 46 |

**தலையில் நோய் வருவதற்குக் காரணம்.**

கனத்த சுமைகளைத் தலையில் தாங்கிச் செல்வதாலும், வெயிலின் சூடு தலையில் தாங்கும்படி செய்தலாலும், எண்ணெய் முழுக்கைத் தவிர்ப்பதினாலும், பெண்களை விடாது புணர்வதினாலும், தலையில் அடிபடு தலினாலும், மூக்கின்றுளைகளிலும் காதின்றுளைகளிலும் ஈ முதலிய செல் வதினாலும், சுனையில் மூழ்குவதினாலும், போதையை உண்டாக்கும் பொருள்களைப் பயன்படுத்துவதாலும் தலையில் நோய்களுண்டாகும். இதனை,

“ கனத்திடுஞ் சுமையி னாலுங் கடுவெயிற் படுத லாலும்
நனைத்திடு மெண்ணெய் தன்னை நாட்பட முழுக லாலும்
புனக்கொடி மடநல் லாரை விடாதுறப் புல்க லாலும்
சினத்தடி படுத லாலுஞ் சிரத்திநோய் சேருந் தானே.”

“ இருசெவி நாசி யூடே யீமுத லேறி னாலும்
முருகவிழ் குழலீர் கானற் சுனையிடை மூழ்கி னாலும்
மருவிய லகிரி யேது மயலுற வருந்த லாலும்
சிரமிசை யனேக தோஷஞ் சேர்ந்திடுந் திருவி னல்லாய்.”

(பரராசசேகரம்—சிரரோக நிதானம்)

**மண்டை வளி முதலிய முக்குற்றங்களினால் உண்டாகும் நோய் பத்தின் விளக்கம்.**—வளி, அழல், ஐயம் ஆகிய இம்மூன்றும் தனித்தனி மிகுந்து குறைதலால் ஒவ்வொன்றும், இரண்டிரண்டாகக் கூடிக் கலத்தலினால், ஒவ் வொன்றில் இவ்விரண்டு பேதம் தோன்றி ஆறும், வாதம் உச்சியின் ஒரு புறத்தில் நிற்றலினால் ஒன்றும், ஆகப் பத்தாம். வளி இரண்டு பங்கும், பித்தம் ஒரு பங்குங் கூடிக் கலப்பது வளி அழல் கலப்பென்றும் ; வளி இரண்டு பங்கும், ஐயம் ஒரு பங்குங் கூடிக் கலப்பது வளி ஐயக் கலப்பென் றும் ; அழல் இரண்டு பங்கும், வளி ஒரு பங்குங் கூடிக் கலப்பது அழல் வளி கலப்பென்றும் ; அழல் இரண்டு பங்கும் ஐயம் ஒரு பங்குங் கூடிக் கலப்பது அழல் ஐயக் கலப்பு என்றும்; அங்ஙனமே ஐயம் இரண்டு பங்கும்

**வளி** ஒரு பங்குங் கூடிக் கலப்பது ஐயவளிக் கலப்பென்றும் ; ஐயம் இரண்டு பங்கும், அழல் ஒரு பங்குங் கூடிக் கலப்பது ஐய அழல் கலப்பென்றுங் கூறப்படும் வளி முதலிய மூன்றுங் கூடிப் கலப்பதனுல் முக்குற்றம் (சன்னி) உண்டாகிறது.

## 1. உச்சிவளி 10.

**அவை**

1. மண்டை வளி.
2. மண்டை அழல்.
3. மண்டை வளி அழல்
4. மண்டை அழல் ஐயம்.
5. மண்டை ஐய அழல்.
6. மண்டை ஐயம்—இவை ஆறும் தீரக்கூடியன.
7. மண்டை பாரிச வளி.
8. மண்டை அழல் வளி.
9. மண்டை ஐய வளி.
10. மண்டை வளி ஐயம் இவை நான்கும் தீராவாம்.

அப்படித் தீரினும் முற்றும் தீராதென்பதற்கு "ஏயவிரு மூன்றுகா ணீரிரண் டும் தூய்தாகத் தீராது" என்ருர் ஆசிரியர்.

### 1. மண்டை வளியின் குறி குணங்கள்

"மண்டை யிடிக்கும் பிடர்கனக்கும் வலது புருவத் திடைகுத்தும்
துண்ட மடைக்குஞ் செவியடைக்குஞ் சுழிக்குங கண்ணிற்றுயர மிகும்
மண்டுநீரு மிமைக னக்கும் வலேபோற் கண்ணுந் தெரியாது
மண்டை முழுதும் பரந்துகுத்தி வலிக்குங் கபால வாயுவிதே."

"இருசெவி யடைக்கு மண்டை யிடித்திடு மிரைச்ச லுண்டாம்
கருவிழி புகையுங் கண்டங் கரகரத் திரும லுண்டாம்
மருவிய வலகி ரண்டுங் கடுத்திடு மண்ணு வெங்கும்
மரமது போல வாகுங் கபாலத்தில் வாயு வீதே."

(பரராசசேகரம்—சிரரோகம்.)

**உச்சிவளித் தோடம்**

"செறுத்திடும் வாயு நின்று சில்லெனப் பறிந்து சிக்கும்
உறுத்திடுஞ் செவியுட் புண்ணு யொடுவிழுந் துலேந்து நாறும்
சிறுத்திடு மிடைமின் ருளே சினத்திடச் சிரத்திற் குத்தும்
வருத்துழிக் குணங்க பால வாயுவின் ரேஷந் தானே."

(பரராசசேகரம்—சிரரோகம்)

**மருத்துவம்**

1. அசன வில் வாதித் தைலம்—தலே முழுகத் தீரும்.

2. சாறடைக் கிருதம்—இதனைக் கற்கத்துடன் 1 முதல் 2 உச்சிக்கரண்டி யளவு உள்ளுக்குக் கொடுக்கவேண்டும்.

3. உள்ளிக் குழம்பு—பணவெடை—உள்ளுக்கு.

புகை :

இலிங்கம் 1½ பங்கு.
துருசு ½ பங்கு.
பாடாணம் ½ பங்கு.
கந்தகம் ½ பங்கு.
அரிதாரம் ¼ பங்கு.

இவற்றைத் தனித் தனிப் பொடித்து, பிறகு ஒன்று சேர்தரைத்து, இவை சேர்ந்த எடைக்கு எருக்கன் வேர்ப்பட்டைப் பொடி சேர்த்துக் கலந்தரைத்து, எருமுட்டையைக் கொளுத்தியுண்டான நெருப்பின் மீது மேற்படி பொடியைச் சிறிதளவு தூவி அதனின்றுண்டாகும் புகையை உள்ளுக்கு இழுக்கவும்.

இப்படி ஏழு பொழுது செய்யவும். பிறகு ஏழு நாள் ஆமணக்கு நெய் தேய்த்து வெந்நீரில் முழுகவேண்டும். பத்தியம், புளி, உப்பு இல்லாமல் 1 மண்டலம் உணவை உண்டுவரக் கபால வளி தீர்வதன்றி உடல் வச்சிரகாயமாகும்.

## 2 கபால அழற்குணம்:

"மண்டைப் பித்த குணந்தன்னை வழுத்தக் கேளாய் வரட்சி
[யுண்டாம்
பண்டை விழியும் புகைந்து வரும் பருகு மசனஞ் சிறுத்துவரும்
துண்டம் புருவத் திடைகுத்துந் துய்ய நாவுங் கசந்திருக்கும்
கண்டக் காலே கண்முகமுங் காந்துங் கரமும் பாதமுமே."

"மேவு மலநீர் சிவந்திருக்கு மெய்யே நடுக்குந் தலைவலிக்கும்
பாவு முடம்பின் மயிர்சிலிர்க்கும் பாண்டம் வெளுக்குங் இறு
[இறுக்கும்
காவி யனைய கண்மடவீர் கைகா லசந்து தள்ளிவிடும்
மேவுஞ் செவியிற் சில்லென்னும் விக்கு முவாந்தி மிகுந்திடுமே."

"மேனி வெளுக்குந் தலைசுழற்று மிக்க பொருத்துக் கடுத்துளையும்
வாய்நீர் பெருத்து வயிறழற்று மலமுஞ் சலமு மஞ்சளிக்கும்
தேனீ போலே செவியிரைக்குஞ் சில்லென் றடைக்குந் தெள்
[விழியில்
மானே யனலிற் பொறிபோலே வந்தே பறக்கு மயங்குறுமே."
(பரராசசேகரம்—சிரரோகம்.)

**மருத்துவம்**

| | |
|---|---|
| 1. குமரித் தைலம்.<br>2. நெல்லிக்காய்த் தைலம்.<br>3. சஞ்சீவித் தைலம். | இம்மூன்றும் தலை முழுகப் பயன்படும். அதாவது இத் தைலங்களில் ஏதாகிலும் ஒன்றில் தலை முழுகக் கபால பித்தம் தீரும். |
| 4. பொன்னுங்காணி நெய் | 1 முதல் 2 உச்சிக்கரண்டி, இரு வேளை 40 நாள் உள்ளுக்கு. |

**குடி நீர்.**—முப்பலை, முக்கடுகு, கோட்டம், மதுரம், சண்பகப்பூ, கண்டில் வெண்ணெய், கொடி முந்திரிகை, இராம்பு, ஏலம், இச்சிலிக் கிழங்கு

தாமரை, நீலோற்பலம், ஆம்பல், நெய்தல், கொட்டி, இந்துப்பு, சீந்தில், கற்றாழை வேர், விலாமிச்சம் வேர், வெட்டி வேர், முல்லை, வில்வம், ஈசுர மூலி, ஆலம் விழுதின் இளந்துளிர், தென்னங்குரும்பை, தாளீசபத்திரி, விழலரிசி, சிறு பயறு, சிறு தேக்கு, பொன்னுங்காணி, நரிப்பயறு, கரிசாலை வகைக்கு 4 கழஞ்சு இவை எல்லாஞ் சேர்ந்த தொகைக்கு எட்டுப் பங்கு நீர் விட்டு ஒரு பங்காகச் சிறுக்கி அளவுப்படி கொடுக்கவும்.

### 3. கபால சேற்பன குணம்.

"உச்சி யிடிக்கு மயிர்முறியு முறக்கம் பெரிதா முகங்கறுக்கும்
அச்சந் தோன்றுங் கைகால்க ளயரும் வேர்க்கும் விழிசிவக்கும்
பச்சென் றிருக்கு நாசியிற்சீப் பாயு நாறும் புலால்போலக்
கச்சிற் கனத்த முலையாளே கபால சேற்ப மிதுகாணே."

(பரராசசேகரம்—சிரரோகம்).

**மருத்துவம் :**

1. பரங்கிப் படடைச் சூரணம்-வெருகடி, தேனில் இருவேளை
2. மிளகுத் தைலம்—மூழ்குவதற்கு.

### 4. கபால அழல் ஐயப் பண்பு.

"தேனே கபாலந் தனிற்பித்த சேற்பஞ் சேருங் குணங்கேளாய்
வாய்நீ ரூறி வழுவழுக்கு மண்டை வதன மிகவேர்க்கும்
தானே சிலகாற் றலைசுழலுந் தரையி னடக்கிற் றிறுகிறெனும்
மானே யுடம்பு வெளுத்துவரு மலமுஞ் சிவப்பு மேவிடுமே."

"மேவுஞ் சிரமுங் கனப்புண்டா மிருகா தடைக்கும் வெதும்புமுடல்
பாவு மிருகால் கைகசியும் பரிதா கித்துக் கண்டூங்கும்
கோபித் திருமிக் கோழை விழுங் கொள்ளு மசனஞ் சிறுத்து [வரும்
தாவுங் கைகால் மிகத்தளருஞ் சாற்றுங் குணத்தைக் தானறியே"

(பரராசசேகரம்—சிரரோகம்.)

**மருத்துவம் :**

1. **குடிநீர்.**—திப்பிலி, வெள்ளுள்ளி, **வெள்ளைக்குங்கிலியம்,** கடுக்காய், தான்றிக்காய், பேய்ப்புடல், வேப்பலகு, சத்திச்சாரணைவேர் வகைக்கு இரண்டு கழஞ்சு (2½ வராகனெடை) இவை கூட்டுத் தொகைக்கு எட்டுப் பங்கு நீர்விட்டு, எட்டொன்றாய்ச் சிறுக்கி இருவேளை குடிக்கத் தீரும்.

2. **கடுக்காய்ச் சூரணம்.**—வெருகடி—இருவேளை.

3. **ஆடாதோடைக்கிருதம்**—உச்சிக் கரண்டியளவு, காலை மாலை ½ மண்டலம்.

4. **திரிபலைத்தைலம்.**—மூழ்குவதற்கு.

### 5. கபால வளிஅழற் குணம்.

"சிரத்தில் வாத பயித்தியந்தான் செய்யுங் குணத்தைத தேர்ந் துரைப்பன்]
உரததுத் திமிர்த்துக் குத்துண்டா முடனே யடக்குஞ் சிரந்தன்னில்

பெருத்த பிடரி தனிலேவாம பேசு நாக்கு மரம்போலாம்
பொருத்துத் தோறும் புண்ணுய்நோம் பொல்லா வாத பயித்தி
[யமே.''

(பரராசசேகரம்—சிரரோகம்.)

**மருத்துவம்.**—ஆயிற்றைலம் முழுகுவதற்கு.

**6. கபால ஐய அழற் பண்பு.**

"சென்னியின் மீது பித்த சேறபனஞ் செய்கு ணங்கேள்
மன்னிய புருவ நெற்றி வருமுச்சி யிவற்றிற் குத்தும்
முன்னமே விழிநீர் பாய்ந்து சிவந்திடு மூக்கு நோவாம்
தன்னுடல் வெதும்பி நெஞ்சிற் சலமுறைந் திருமுந் தானே.''

**மருத்துவம்.**—அமுதவல்லிக்கிருதம்—உச்சிக்கரண்டியளவு, காலை மாலை கொள்ளத் தீரும்.

மேற்கூறிய ஆறும் தீரும்.

**இனித் தீராத நான்கின் பண்பு கூறப்படும்.**

**1. கபால பாரிச வளியின் குறி குணங்கள்.**

"ஓதிய கபாலந் தன்னி லோர்புறந் திமிர்த்து வேர்க்கும்
வேதனை வரவே குத்தும் விதியிடை புருவத் துள்ளும்
ஊதையுண்டாகு நாளு மொழிவிழுஞ் செவியிற் புண்ணும்
தீதுடன் றலைவ ரண்டு பிடரிநோந் தீரா தன்றே.''

(பரராசசேகரம்—சிரரோகம்.)

**மருத்துவம்.**

**சுட்டிகை.**—இரட்சைக் கருவி தொண்ணூற்றுறனுள் ஒன்ருன சூலம் போன்ற கருவியினுலே, புருவத்திடையில் சுட்டிகை செய்து, அதனுலேற் பட்ட புண்ணை மஞ்சட் பொடியும், பொரிகாரப்பொடியுங்கொண்டு, ஆற்றி விடவும். பிறகு உச்சிவளிக்குக் கூறிய மருத்துவத்தைக் கையாள வேண்டும்.

**2. கபால அழல் வளிக் குணம்.**

"சென்னியிற் பித்த வாதஞ் செய்குறி யுரைப்பக் கேளாய்
அன்னித மாகப் பேசு மயர்வுறு மாடும் பாடும்
கொன்னுதி வேற்க ணல்லாய் கூர்விழி புகைச்ச லுண்டாம்
துன்னிடு மிரும லுச்சி துடியிடி போல நோமே.''

**மருத்துவம்.**—பொன்னுங்காணி நெய் 40 நாட்களுக்குக் காலை, மாலை பொட்டுக்கரண்டியளவு.

**3. கபால ஐய வளிப் பண்பு.**

"மேவிய கபால சேத்ம வாதஞ்செய் குணங்கள் கேளாய்
கூவிய சிரத்தில் வேர்வை கொண்டிடுங் குலைப்பு முண்டாம்
பாவிய விழிமூக் கூடே பாய்ந்திடுஞ் சீயுநீரும்
தாவிய நெஞ்சு நொந்து சலம்விழு மிருமுந் தானே.''

(பரராசசேகரம்—சிரரோகம்.)

**மருத்துவம்.**—கண்டங்கத்தரி இலேகியம் 40 நாள் கழற்சிக்காயளவு, இரு வேளையுட்கொள்ளவும்.

### 4. கபால வளி ஐயக் குணம்.

"மின்னே கபாலந் தனில்வலித்து வேர்த்து வெதும்பிப் பற்கிட்டி
முன்னே வாய்நீர் வழுவழுத்து முகமும் வெளுத்தே யிருமலு [மாய்
அன்னந் தானுஞ் சிறுத்து விம்மியாக முலர்ந்து கண்குழியும்
பொன்னே கபால சேத்துமத்தின் பொருந்து வாத மிதுவன்றே."

**மருத்துவம்:**

**திப்பிலி இரசாயனம்.**—வெருகடி அளவு, தேன், நெய், பன்னீர் இவற்றில் கலந்து கொடுக்கவும்.

## II. கபால தேரை.

"மண்டை கனக்குங் கண்பருக்கு மயிருங் கழியுங் கரகரக்கும்
தொண்டை காது முடம்புலருஞ் சோறுஞ் செறுத்துச் செல்லாது
துண்டத் தூடுஞ் செவியூடுஞ் சொரிநீர் போலக் கலங்கிவரும்
'மண்டைத் தேரைக் குணமிதெனப் பகர்ந்தார் பழைய மறை [யாய்ந்தே."

"தேனே கபால தேரையினுஞ் செய்யுங் குணத்தைச் செப்பக் [கேள்
மானே மூக்கிற் குருதிவரும் வார்கா திரண்டும் வழும்புவிழும்
ஊனே யுருக்குஞ் சொறியுமுட லுவாப்போல் வெளுத்தே [யுதிர்ந் துளையும்
வானோர் தலைவன் வகுத்துரைத்தார் மாறு திதுவு மசாத்தியமே."

"இக்குணந் தன்னை நாடி யறிந்தவ ரிதற்குச் செய்யும்
தக்கநன் மருந்து போற்றுந் தந்திர மேதோ வென்னில்
அக்குல விடத்துக் கான மாற்றமே யரவு தன்னால்
மிக்கவர் மீட்பா ரித்தை மீட்பரென் றிறைவன் சொன்னான்."

## III. கபால கரப்பான் 6.

அவை :—

1. வளிக் கரப்பான்.
2. அழற் கரப்பான்.
3. ஐயக் கரப்பான்.
4. செங் கரப்பான்.
5. வெண் கரப்பான்.
6. கருங் கரப்பான் என்பனவாம்.

இவற்றுள், வெண்கரப்பானும் வளிக்கரப்பானும் தீராவாம். மற்றவை தீரும்.

**வளி, அழல், ஐயக் கரப்பான்களுக்குக் காரணம்.**

“வாத பித்தங் கபமிவை மூன்றவற்
றேது வால்வெயி லான்மிடி யாலிகற்
கோதை யார்மய லால்வெயர் வாற்குளிர்
பேத நீரிவை யாலுள பேசுகேன்.”

“வேகக் காற்றதி னுற்பனை வெல்லத்தால்
பாக மீன்கன லான்மேதிப் பானெய்யால்
தாக மாவின் வடுக்கனி சார்தலால்
மோக வாழை வழுதலை முள்ளிக்காய்.”

“காயும் பல்விடத் தாற்சுரத் தாற்கனல்
ஏயும் வண்டெலி யால்வரு மேதுவென்
றுயு நல்லறி வாள ரருளினர்
மாய மான கரப்பான் வகைகளே.”

**திராவெனக் கூறிய இரண்டனுள் 1. கபாலவளிக் கரப்பன் பண்பு.**

“ என்னவுரை வாதசிரத் தேயுங்க ரபபனது
மின்னுமுகத் தான்வீங்கு மெய்குளிரும் வேதனையாம்
பின்னுன சந்துடனே பிடரிமுத லாமிடங்கள்
தன்னுக நொந்துமிகத் தலைகனக்கு மென்றறியே.”

“ அறியே நீருஞ் சலமும்பாய்ந் தனல்போ லெரிந்து குத்துண்டாம்
சொறியும் பின்னர் மிகக்காய்ந்து துஞ்சு நெய்போற் கழிந்தோடும்
பறியும் பொருக்குச் சாம்பரெனப் பரிய நாறும் புலானுற்றம்
குறியே வாத சிரகரப்பன் கொண்டார்க் குற்ற குணமிவையே.”
(பர.சே.சிர.நி.)

**மருத்துவம் :**

1. நிலவாகை யெண்ணெய்-10 முதல் 20 துளி சர்க்கரையில் இருவேளை.

2. துளசி யெண்ணெய்-உள்ளுக்கும் மேலுக்கும்.

**2. கபால வெண்கரப்பான் குணம்.**

“ வீறும் சிரத்தில் வெண்கரப்பன் குணத்தைக் கேளாய் மெல்லி
[யலே
கூறும் புள்ளி நிறம்வெளுப்பாய்க குறுநெற செதிள்போற் கொதி
[த்துவிழும்
ஊறு நீருந் திவைவுண்டா மோடே யொடுப்போற் கரகரக்கும்
மாறு போல வுடல்வற்றும் வாதை யிதுவு மசாத்தியமே.”
(பர.சே.சி.நி.)

**மருத்துவம்.**

1. கந்தகத்தைலம் 10 துளி சர்க்கரையில் இருவேளை 7 நாள்—பத்தியம மோர்ச்சாதம்.

2 அரிதாரத்தைலம், ஏரண்டத்தைலம்—மேற் பூச்சு.

**திருமெனக் கூறிய நான்கனுள்.**

**1. கபால அழல் கரப்பன் பண்பு.**

" பித்தத்தால் வெப்புக் கொண்ட கரப்பனுர் குணத்தைப் பேசில்
மெத்தவே யெரித்து வீங்கி வெடித்து நீர் சலமும் பாயும்
குத்துண்டாம் விழிநீர் பாயுங் குன்றிபோற் கனத்துக் கொள்ளும்
அத்திர விழியி னூளே யறிந்துகொண் மறையை யாய்ந்தே."

" அடிக்கடி விசிறிக் காட்டு மனலென வெரிக்கு மாங்கே
வெடித்திடும் பொருக்கு மென்மேல் வீழ்ந்திடும் விஷநீர் பாயும்
தடித்திடு மரம்போல் வீங்கிச் சரசரத் துதிருந் தூளாய்ப்
படித்திடு மாக மத்தின் பயன்பித்த கரப்ப னூமே."
(பர.சே.சி.நி.)

**மருத்துவம்.**—அமுக்கரா நெய் உள்ளுக்கும், நிம்பகற்பம் மேலுக்கும் பயன்படுத்தத் தீரும்.

**2. கபால ஐயக் கரப்பன் பண்பு.**

" சிரத்திலே வேர்வை யுண்டாய்த திண்ணென வீங்கி நோவாய்ப்
பெருத்திடுஞ் சலநீர் பாயும் பேதமாந் திமிரு முண்டாம்
பொருக்கதா மசறு நாறும் பொங்கிடு மழுக னீர்போல்
தெரித்திடுங் குணங்க ளெல்லாஞ் சேற்பன கரப்ப னூமே."

" காதடி பிடரி கன்னங் கழுத்தடி நெறியே கட்டும்
வேதனை யாக நெற்றிப் புருவத்தில் விரைந்து குத்தும்
மோதியே வீங்கி நீருஞ் சீயுமே விரைவி யோடும்
ஆதலாற் சேற்ப னத்தி லடுத்திடு கரப்ப னூமே."
(பர.சே.சி.நி.)

**மருத்துவம்.**—தூதுளை யெண்ணெய் இதை யுள்ளுக்குங் கொடுத்து மேலுக்கும் பூசிவரச் சொறி, வீக்கம் இவைபோம்.

**பத்தியம்.**—புளிப்பு, உப்பு, கைப்பு, கார்ப்புச் சுவையுள்ள பொருள் களையும் வெல்லத்தையும் நீக்க வேண்டும்.

**3. கபால கருங்கரப்பன் குணம்.**

" கருமண றூற்றி னூற்போற் காயமேற் கபாலந் தன்னில்
விரவியே படர்ந்து மேலே விஷநீரா யோடு மூரும்
கரகரத் திடுமென் மேலுங் கனப்புண்டாஞ் சுணங்கு காட்டும்
தெரிவையே யிக்கு ணங்க டேர்கருங் கரப்ப னூமே."
(பர.சே.சி.நி.)

**மருத்துவம்.**—திரிகடுகெண்ணெய் மேலுக்குப் பூசிக் குளிக்கப்போம்.

4. கபால செங்கரப்பன் பண்பு.

" பொக்கியே சிவந்த குன்றி போலவே விசிறிப் பொங்கும்
அக்கியாய் மென்மேற் காந்து மருவிபோற் சலமும் பாயும்
ஒக்கவே யுடம்பு காயு மூவாநதியுண் மூச்சு முண்டாம்
தக்கவிக் குணங்க பாலஞ் சாருஞ்செங் கரப்ப னுமே "

(பர.சே.சி.நி.)

**மருத்துவம் :**

1. கையாந்தகரை யெண்ணெய ஒன்றுவிட்டொரு நாள் உள்ளுக்கும் குடித்து மேலுக்கும் பூசத் தீரும்.

2. இயங்கமெண்ணெய் 7 நாள் பூசத்தீரும்.

**பொது மருத்துவம் :**

1. நிம்ப கற்பம்—தேன, நெய் இவைகளில் கலந்துணணத் தீரும்.

2. செங்கத்தாரியெண்ணெய்—10 துளி சர்க்கரையில் இருவேளை, புளி நீக்கிய பத்தியம்.

3. அசுவகந்தி நெய்—பொட்டுக் கரண்டியளவு உள்ளுக்கு இரு வேளை, ஒரு மண்டலம் கொள்ளக் கரப்பன் தீரும். இதையே மேலுக்கும் பூசலாம்.

4. கோமயக் குழம்பு.—மேலுக்குப் பூசிக் குளித்திடக் கரப்பன் தீரும்.

**மண்டைக்கரப்பான் பலவற்றிற்கும் பூச்சு.**

1. மிளகுப் பொடியுடன் எருமை வெண்ணெய் சேர்த்து வெண்கலத் தட்டின் மீது வைத்து, சங்குகொண்டு அரைநாழிகை தேய்த்துப் பதத்தில் வழித்து மேலுக்குப் பூசலாம்.

2. சூழ்லாவாரை 1 பலம், பொன்னரிதாரம் வராகனெடை 1½, இரண்டையுஞ் சேர்த்துப் பழச்சாறு விட்டரைத்துப் பூசவும்.

3. **முக்கூட்டெண்ணெய்.**—உள்ளுக்கு அளவுப்படிகொண்டு மேலுக்குப் பூசக் கரப்பனும், மண்டையிற்பூச மண்டைக் கரப்பனும் மற்ற வளி, அழல், ஐயக் கரப்பன்களும் போம்.

4. **முக்கூட்டு வெள்ளறுகெண்ணெய்.**—விதிப்படி உள்ளுக்குங்கொண்டு மண்டையிற்பூச மண்டைக்கரப்பன் தீரும்.

5. **பறங்கிப்பட்டைக் குடிநீர்.**—சிவனார் வேம்பு, வெள்ளறுகு, இசங்கு, நிலவாகை வகைக்குப் பலம் 1, வாய்விடங்கம், திரிகடுகு வகைக்குப் பலம் ½, சாதிக்காய், சாதிபத்திரி, கிராம்பு, குரோசாணி

யோமம் வகைக்குப் பலம் ¼, பறங்கிப்பட்டை பலம் 4 இவைகளின் மொத்த தொகைக்கு 5 பங்கு நீர் சேர்த்து ஐந்தொன்றாய்ச் (1/5) சிறுக்கி இருவேளை குடிக்கத் தீரும். பத்தியம் பால்சோறு, உப்பு, புளி நீக்கவும். குடித்த அவ்வளவு நாள் மறு பத்தியம், அரைப்பங்கு உப்பு வறுத்துக் கூட்டுக. மண்டைக் கரப்பன் தீரும்.

6. **பரங்கிப்பட்டைச் சூரணம்.**—திப்பிலி மூலம், ஓமம், திப்பிலி, அரத்தை, சுக்கு, வாய்விடங்கம் வகைக்குப் பலம் 1, கிராம்பு, குரோசானி யோமம், சாதிபத்திரி, சாதிக்காய் வகைக்குப் பலம் ¼, பறங்கிப்பட்டை பலம் 4 இவற்றைப் பொடித்து வெருகடியளவு இருவேளை வெந்நீரிற் கொள்ளவும். பத்தியம் உப்பு, புளி நீக்கி 1 மண்டலங் கொள்ளப் பலவகைப்பட்ட மண்டைக்கரப்பான் தீரும்.

**புகை.**—இலிங்கம், அரிதாரம், துத்தம், துரிசு ஓரளவு இவற்றைத் தனித்தனிக் குழி அம்மியில் பொடித்துப் பிறகு எல்லாவற்றையும் ஒன்றுபடக் கலந்து வேப்பமுத்து நெய்யில் நன்றாக அரைத்து, துணித துண்டிற் றடவி, திரிதிரித்து, நோயின் வன்மைக் குத்தக 3 நாள் புகை பிடிக்க, மண்டை யுதிருங்கரப்பான் போம்.

**பத்தியம்.**—பசுவின் மோருஞ் சோறும்.

### கபால குட்டம் 5

1. கபால வெண் குட்டம்.
2. கபால கருங் குட்டம்.
3. கபால செங்குட்டம்.
4. கபால அழுகண்ணிக் குட்டம.
5. கபால விடக் குட்டம். இவற்றுள் கபால வெண்குட்டமும் கபால கருங்குட்டமும் தீரா ; மற்றவை தீரும்.

#### 1. கபால வெண்குட்டத்தின் குணம்.

" தோற்றுவெண் குட்டஞ் செய்யும் குணத்தினைச் சொல்லக் கேளாய்
நீற்றிடுங் கமலம் போலச் சொறிந்திடு நீரும் பாயும்
ஏற்றமாய்ச் சாம்பல் வீழு மிழிபுலான் மிகவே நாறும்
மாற்றமாய்க் கபால மேண்மேல் வரண்டுகா திரைச்ச லாமே."

#### 1. கபால கருங்குட்டத்தின் பண்பு.

" இட்டம்போல் வரண்டு மணடை மீதின்மீன் கிளர்சி னைப்போல்
தொட்டகை நீங்கா தென்றுஞ் சொறிந்திடு மசறு நாறும்
மட்டமர் குழலி னுளே மணலே போல் வங்கு வீழும்
திட்டமாங் கருங்குட் டந்தான் செய்குறி யென்றுசேரே"

### 3. கபால செங்குட்டத்தின் குணம்.

"நொங்கின்றேல் போற்சி வந்து நோவுண்டாய் நீரும் பாயும்
அங்கமே வற்றிக் காட்டி யனலெனக் காந்த லுண்டாம்
பொங்கியே கனத்து மேன்மேற் பொருக்கெழும் புலாலு நாறும்
கொங்குறு குழலி னுய்செங் குட்டஞ்செய் குணங்க ளாமே."

### 4. கபால அழுகண்ணிக் குட்டத்தின் பண்பு.

"நறுவிலிக் காய்போ லாகி நாளுநீர் சலமு மோடும்
மறுகுர லரிந்து காட்டும் வார்சிர முழுதுங் குத்தும்
தறுகிடாக் காந்த லுண்டாந் தழல்விழுந் ததுபோற் பொங்கும்
முறுகியே கசிவு முண்டா மழுகண்ணி முறையி தன்றே."

### 5. கபால விடக்குட்டத்தின் குணம்.

"தீதறு விடத்தி னாலே சிரத்திலே புள்ளி தோன்றிக்
கார்குழ லுதிரு மேன்மேற் காசுபோற் றடிப்பு முண்டாம்
சோதினை யுடம்பு வற்றிச் சொறிந்திடுங் குணங்கள் கண்டால்
ஆதியா னுரைத்த வுண்மை சிரவிஷ குட்ட மாமே".

**பொது மருத்துவம் :**

1. **கையாந்தககரை யெண்ணெய்.**—வெளி ஆட்சிக்குப் பயன்படும்.
2. **அழிஞ்சில் ஆதவத்தைலம்.**—10 துளி இருவேளை ஒரு மண்டலம் உள்ளுக்கு.
3. **உத்தமாகாணியெண்ணெய்.**—உள்ளுக்கும் மேலுக்கும்.
4. **சடைச்சியெண்ணெய்.**—வெளி ஆட்சிக்கு.
5. **திரிவித சிந்தாமணித்தைலம்.**—தேய்த்துக் குளிக்க, அழுகண்ணிக் குட்டம் போம்.
6. **மஞ்சளெண்ணெய்.**—வெளி ஆட்சி.
7. **நிம்பாதித்தைலம்.**—பணவெடை (3½ குன்றி) சர்க்கரையில் இருவேளை மண்டலங் கொள்ளக் குட்டம் 18, பறங்கிச் சூலை, கடி விஷம் இவை தீரும்.

## கபாலப் பிளவை 10

### 1. மேகப் பிளவையின் குணம்

"மேகநோய்ப் பிளவை செய்யுங் குணத்தினை விளம்பக் கேளாய்
தாகமு மோக முண்டாய்த் தறுகிடாச் சுரமே யாகும்
வேகமாய்க் குத்துஞ் சூடு மிகுத்திடு நீரும் பாயும்
போகவே தசைக ழன்று பொருக்கென கரைவுண் டாமே."

### 2. சுரிப் பிளவையின் பண்பு.

" சுரிப்பிடர் மேல தாகும் பிளவைசெய் குணத்தைச் சொல்லில்
நெருப்பெனக் காந்துங் குத்தும் வெடித்திடி னீரும் பாயும்
தரித்திடு முதுகந் தண்டிற் றடியடி பட்டாற் போல்நோம்
அரித்திடு மிகுந்து கண்ணும் விரணமா மசாத்தி யம்மே. "

### 3. விரணப் பிளவையின் குணம்.

" விரணமாம் பிளவை செய்யுங் குணத்தினை விளம்பக் கேளாய்
உரமுடன் கனப்பு முண்டா யுடலெல்லாங் கடுத்துக் குத்தும்
தருமது வுழலை தாகந் தாபமு மேன்மூச் சுண்டாம்
மருவுறு மெண்ணெய் நெய்பால் மாமிச மருந்திற் சாவே. "

### 4. குருதிக் கண்ணன் பிளவையின் குணம்.

" குருதியின் கண்ணன் செய்யுங் குணத்தினைக் குறித்துக் கேளாய்
கரிதிடு முகஞ்சி வந்து கனத்திடுங் குருதி காலும்
பொருவரு முச்சி யெங்கும் புண்படக் குத்தி நோகும்
திருகிட வலிக்குந் தேகஞ் செயலாசத் தியமா மன்றே. "

### 5. பக்கப் பிளவையின் பண்பு.

" ஆனசாத் தியமோ ராறி லருகினிற் பிளவை செய்யும்
ஊனமாங் குணத்தைக் கேளாய் வலித்துறு சலமுண்டாகும்
ஈனமாஞ் சுரமேன் மூச்சு விக்கன்மே லிளைப்பு மில்லைத்
தானவை மீளு மென்று தவமுனி யுரைத்த தாமே. "

### 6. குன்றிப் பிளவையின் குணம்.

" குன்றிப் பிளவைக் குணங்கேளாய் கொதித்து வீங்கிக் கொப்புள [மாம்
அன்றிக் கனப்பு மிகவுண்டா முகமும வீங்கி யனலாகும்
துன்றும் பாணி பலாச்சுளைபோற சுரமும் வலியுங் காந்தலுமாம்
வென்றி பெறவே மீளுமிது வேக மறிந்து மருந்து செய்யே. "

### 7. பொக்கிப் பிளவையின் பண்பு.

"பொக்கிப் பிளவைக் குணங்கேளாய் புடைத்து வீங்கு முகந்தோயத்
தக்க சலங்கீ ழாய்க்கட்டுந் தண்ணீர் முகத்தில் வெடித்துவரும்
அக்கி மிகுந்து குத்துண்டா மடியிற் கனப்பு மாறுது
மிக்க குணத்தை நீயறிந்து விரைந்தே மருந்து செய்நன்றே. "

### 8. குருப் பிளவையின் பண்பு.

" குருவார் செய்யுங் குணங்கேளாய் கொதித்து வீங்கிக் குத்துண [டாம்
ஒருகால் வலியு மாறுதே யழலை மிகுந்து விரணமுமாம்
இருகா திருகண் ணுடன்காந்து மெரியு மற்று மிடிக்குமிகக்
கருகா முகுமு முன்னிதமாய்க் கனக்குங் குணத்தைக் கண்டறியே

### 9. அழுகண்ணிப் பிளவையின் இயல்.

" அழுகண்ணிப் பிளவை செய்யுங் குணத்தினை யறிய வேண்டில்
பழுதிலா வஃனசக் காய்போற் கண்ணது பலவு மாகிக்
கொழகொழத் தண்ணீர் பாயுங் கொத்துற வலியு முண்டாம்
வழுவறக் குணங்க டேர்ந்து மருந்துசெய் மாறு மன்றே."

### 10. பொன்னிப் பிளவையின் இயல்.

" பொன்னியாம் பிளவை செய்யும் குணத்தினைப் புகலக் கேளாய்
உன்னித மாகத் தானே யுருண்டெழுங் குருதி கட்டும்
மன்னியே நொங்கு போல வெடித்திடுங் கனப்பு முண்டாம்
இன்னவாங் குணங்க டேர்ந்து யியல்பினுன் மருந்து செய்யே."

**மருத்துவம் :**

**மேற்பூச்சு.**—கோவை, பசலை, பழம்பாசி, பூலா, நீர்வள்ளிக்கிழங்கு, நீர் வள்ளியிலை ஓரளவெடுத்தரைத்து, அவ்வளவே ஆவெண்ணெய் சேர்த்து சங்கிலுலிழைத்துப் பிளவைக்குப் பூசிட ஆறிடும்.

**வேறு.**—பூலாவேர், நெல்லிமுள்ளி, ஆவாரைப்பூ, செவ்வள்ளி, தாளி ஓரளவெடுத்தரைத்து அதற்குச் சரிநிறை ஆவெண்ணெய் சேர்த்துக் கலந்து பிளவை மேற்பூசில், காந்தல், வலி இவைகள் தீரும்.

**வேறு**—சிற்றாமணக்கு நெய், தாய்ப்பால், ஆவெண்ணெய் இவை ஓரெடை, மூன்றையும் ஒன்று சேர்த்துக் கலந்தரைத்து, நீர்வள்ளிக் கிழங்கின் கற்கத்தையுஞ் சேர்த்தரைத்துப் பூசப் பிளவை தீரும்

**வேறு.**—சிற்றாமணக்குப் பருப்பு, புளியம்பட்டை ஓட்டிலிட்டு வறுத்து இவ்விரண்டிற்கும் சரிஎடை வெண்ணெய் சேர்த்து, சிறிதளவு இந்துப்புச் சேர்த்துச் சங்காலிழைத்து வழித்துப் பூசில் பிளவை தீரும்.

**பிளவையிலுண்டாம் நீர்வேட்கை முதலியவற்றிற்குக் குடி மருந்து**

ஆவாரங் கொழுந்தைப் பறித்து மேதித்தயிரிலரைத்துக் குடிப்பிக்கப் பிளவையிலுண்டாகும் நீர்வேட்கை, எரிப்பு, காந்தல் இவை தீரும்.

**வேறு.**—அவுரிவேர்ப்புறத்தோலை ஆவின்பால் விட்டரைத்துப் பாக்களவு மூன்று பொழுதுண்ணத் தீரும்.

**வேறு.**—நிலவாகைவேர், வேலிப் பருத்திவேர், கருடக் கொடித்தோல், பங்கம்பாளைவேர் இவை ஓரெடை பசுப்பாலிலரைத்துக் கொள்ளப் பிளவை, படுவன், கரப்பன் தீரும்.

**வேறு.**—கருஞ்சீரகத்தை வறுத்தரைத்து, காயம் கழஞ்சு ¼ சேர்த்து, வாழைப் பழத்தினுள் பொதிந்து மூன்று வேளை கொள்ளப் பிளவை, பருவீக்கம் மாறிவிடும்.

**மேற்பூச்சு.**—வசம்பு, அமுக்கிரா வேர், நாரியின வேர் வகைக்குப் பாக்களவு ஆப்பால் விட்டரைதது, அப்ப, பிளவை, கரப்பன், படுவன் நீங்கிவிடும்.

**கட்டு.**—கற்ருழை மடலின் சோற்றை நீக்கிப் பிழிந்து எடுத்ததோலே ஆமணக்கெண்ணெயில் நன்ருய் வறுத்துவைத்து 3 நாள் கட்ட வீக்கங் குறையும்.

**ஒற்றடம்.**—உத்தாமணி, ஊததை, மாதளை, பசலை இவற்றினிலே ஓரளவு, ஆமணக்கெண்ணெயில் வதக்கி மூன்று நாள் ஒற்றமிடக் குத்தல், சூடு, வலி, காந்தல் என்பவை தீரும்.

**கட்டி உடைய மருந்து.**—தலைமயிர், புளியம் பொருக்கு, வாழைப்பழத் தோல், மாட்டுப்பல். ஆமையோடு, கருங்கல், ஆமணக்கிலே, ஆமணக்குவித்து இவைகளை சுட்டுப் பொடியாக்கி ஆமணக்கெண்ணெயினுல் நன்கரைத்துப் பூசக் கட்டி இளகியுடையும.

**காரம்.**—கட்டி கனத்து மிக்க துன்பந்தரின் அறுவை செய்து, எலிபாடாணத்தையும் துருசையும் ஓரளவெடுத்து அனலிற் சுட்டு நுணுக்கி வெண் சீலையில் வைத்துத் திரிதது, புண்ணிற்வைக்க உண்டாம் எரிச்சலைத் தணிக்க தயிரும் சோறும் அரைத்து வைத்துக் கட்டவும். பிறகு அப்பிளவையினின்று வரும் கசிவு நீரை அகற்றித் துவரெண்ணெய் பூசவும்.

**துவரெண்ணெய்.**—அத்தி, இத்தி, ஆல், அரசு இவற்றின் பட்டை ஆவாரை வேர்ப்பட்டை, பருத்தியிலைச்சாறு, பூவரசம்பட்டை, ஆடுதீண்டாப் பாளைச்சாறு, குப்பைமேனிச்சாறு ஆகிய இங்கு கூறப்பட்ட சாறுகளால் மேற் கூறிய பட்டைகளை ஒன்று சேர்த்து எலுமிச்சங்காயளவரைத்து, புங்கம் பட்டை, சுருள்பட்டை, அதிமதுரம், இருசீரகம், துத்தம், துருசு, வேப்பம் பருப்பு, அபின், கத்தூரிமஞ்சள், வெண்குங்கிலியம், மரமஞ்சள் இவை வகைகுக் கால் பலம், ஆமணக்கெண்ணெய் 10 பலம் கலந்து காய்ச்சி வடித்துப் புண்ணிலிடவும். விராலி, மாதளை, தெங்கினிலே, ஆவாரையிலே இவற்றை அவித்து வைத்துக் கட்டவும். எல்லாவகைப் பிளவையும் தீரும்.

**மெழுகெண்ணெய்.**—மஞ்சள், மெழுகு, வெண்குங்கிலியம், அஞ்சனக் கல், துத்தம், அதிமதுரம், கல்நார், காய்ச்சுக் கட்டி, வேப்பம் பருப்பு, சுருள்பட்டை, துருசு வகைக்குக் கழஞ்சு 1, எண்ணெய் பலம் 5 சேர்த்துக் காய்ச்சிப் புண்ணிலிடத் தீரும்.

### பிளவையில் சாக்குறி.

நீர்வேட்கை, மலம், சிறுநீர், கட்டுப்படுதல், இளைப்பு, விக்கல், மேற் சுவாசம், உழலை இவை மிகுந்து கண்டாலும், செவி, கண், மூக்கு, உடல், உச்சி, கை, கால் இவை குளிர்ந்தாலும் அல்லது சிறிது சூடாய் இருந்த கண்கள் குளிர்ந்து காட்டினும், வாய் மேல் நோக்குமாறுலும் சாக்குறி என்றறிக.

**மண்டைத் திமிர் 2.**

**வரலாறு.**

செய்ய கபாலத் திமிர்க்குணங்க டேனே சுரத்தால் வாதத்தால்
நையுஞ் சன்னிவிடமதனு ளுஞ் சிரததி லடங்குமது
உய்யும் படிக்கு வழிகாணு தொருபா ரிசத்தி லுண்டெனில்
மெய்யே மீளுஞ் சிரமுழுது மேவுங் கபாலத் திமிரிதுவே.

**1. மண்டைத் திமிர்க் குணம்—இது தீரும்**

" சென்னி மீது மேவிய திமிர்த்தி றங்கள் செபபுகேன
மன்னுநீர் மிகப் பெருதது மாறி டாம லூர்ந்திடும்
பின்னு ரோம மானதும் பிதிர்ந்து தீர்ந்து போய்விடும்
முன்னமே யுணர்ச்சி யின்றி மூரி வெள்ளை யாகுமே."

**2. மண்டைப் பாரிசத் திமிர்க்குணம்—இது தீராது.**

"செல்லுமோர் புறத்தில் வந்து சென்னி மீது தோனறிய
புல்லு பாரி சத்திமிர்ப் புறுங்கு ணங்கள் மின்னனுய்
வல்ல வாறு கேண்ம ரத்தின மேலதாய் மதர்த்திடும்
ஒல்லையி லுணர்ச்சி யின்றி வேர்வை யாகி யோடுமே."

"பருதி மேவு போதினும் பனிகொள் போது மானனுர்
அருகு மேவு போதினு மறப்ப சித்த போதினும்
உருகி வேர்வை யாகியே யுணர்ச்சி நீங்கு மிக்குணம்
அரிய பாரி சத்தி மிர்ப்ப சாத்திய மறிந்திடே."

**மருத்துவம்** —சம்பீரத் தைலம்—தலை முழுகத்தீரும்.

**செய் முறை.**—எண்ணெய் படி 1, பசுப்பால் ஒரு குறுணி, பழச்சாறு படி 1, மிளகு படி 1, கையான்சாறு, பாக்குமட்டைச்சாறு, வெற்றிலைச் சாறு, பாவட்டைச்சாறு, வள்ளிக் கொடிச்சாறு, பேய்ச்சுரைச்சாறு, பேய்ப் பீர்க்கஞ்சாறு வகைக்குப் படி 1, கோட்டம், குங்கிலியம், சண்பகப்பூ, சடா மாஞ்சில், கொடிவேலி, தேவதாரு, மோடி, கடுக்காய்த்தோல், மஞ்சள், துருசு, அபின், கிராம்பு, சாதிபத்திரி, வசம்பு, மரமஞ்சள், வெட்பாலை, விழலரிசி, தக்கோலம், ரோகணி வகைக்கு கழஞ்சு 1, கடைச் சரக்குகளைப் பால் விட்டரைத்து மேற்படியில் கலக்கிக் காய்ச்சி வடித்து முழுகுவோர்க்குத் திமிர் வாதம், மண்டைக் கனப்பு, மண்டைச்சூலை, காதிரைச்சல், மண்டைப் பக்கத் திமிர்ப்புச்சூடு முதலியன தீரும்.

**நாறுங் கள்ளி யெண்ணெய்.**—நாறுங் கள்ளியின் வடக்கு வேரை யுலர்த்திப் பொடியாக்கி எண்ணெயிற்றூவி, திரள வெந்தபிறகு, தலையில் நாடோறுந் தேய்க்க மண்டைத் திமிர், ஒரு பக்கத் திமிர், மிக்க வியர்வை கரப்பன் இவை தீரும்.

### 1. உட்கிருமிக் குணம்—இது தீரும்.

“ ஏயநற் கபாலத் துள்ளே யெய்திய கிருமித் தோஷம்
தீயவக் குணமே தெனனிற் சிரத்திலே தினவுண் டாகும்
தூய்மையில் சியநீர் கொண்டு தும்மலோ டிருமலுண்டா ரேன்றும்
ஆயகண் துடித்து வீங்கி யதன்மயிர் கழியுந் தானே.”

### 2. புறக்கிருமியியல்—இது தீராது.

“ தானே கபாலப் புறக்கிருமி தகக குணத்தைச் சாற்றக்கேள்
மானே தலையி லுரோமமெலாம் வடுவா யுதிர்ந்து தழும்பாகும்
பேனே யூரும் போலூரும் பின்னுஞ்சாம்பல் பொருககு விழும்
தேனே யிந்தக் குணமறிந்தாற செய்யு மருந்தைத் தேர்ந்தறியே.”

**மருத்துவம் :**

**நசியம்.**—வேலிப்பருத்தி, ஈருள்ளி, குபபைமேனி இவை மூன்றும் ஒரெடைத் தணணீர் விட்டுக் கசக்கி மூக்கில்விட, கிருமி மூககிலிருந்து கூட்டு டன் விழுந்து விடும், உட்புண்ணும், சீழ் நீர், இடி, தினவு இவை தீரும்.

**வேறு.**—பாகலிலைச் சாற்றில் வாயவிடஙகத்தை வறுததுப் பொடித்துக் கலந்து வாயிலிட்டு மூக்கில் ஊதத்துடக்குங் கிருமி, சீழ், இரத்தம் தீரும்.

**வேறு.**—ஆதளைவேர், ஆடுதின்னாப்பாளை, சிறுதக்காளி, இவற்றின் சாற்றோடு கர்ப்பூரம் பொடித்துக் கூட்டி மூக்கிலிட, கிருமிகள் நீங்கும்.

**பேய்ப் பீர்க்குத் தைலம்.**—பேய்ப்பீர்க்குச் சாறு படி $\frac{1}{4}$, பேய்ப்பீர்க்கன் வித்து வராகனெடை $1\frac{1}{4}$, எண்ணெய் படி $\frac{1}{4}$, துருசு, அபின் வகைக்குக் குன்றி 20, வாய்விடங்கம், படிகாரம் வகைககுக கழஞ்சு ஒன்று இவற்றைச் சேர்த்துக் காய்ச்சி மூக்கில்விட, கிருமி தீரும்.

**நீலி எண்ணெய்.**—வெள்ளை, அவுரி வேர்ப்பட்டை நன்றாக அரைத்து எண்ணெயில் சேர்த்து, துருசு கழஞ்செடை சேர்த்து மெல்ல எரித்து வடித்து மூக்கிலிட மண்டைப் புழுக்கள் தீரும்.

**உரோமக்கிருமி வெட்டுக்கு.**—மயிர் உதிர்ந்த இடத்தில் சங்குமுட் கொண்டு குருதிவரத் தேய்த்து மஞ்சாடி அளவு கவுரியைக் கரிப்பான் சாற்றிலரைத்து பிதிரத் தேய்த்து, கையான் சாற்றில் துணிசுட்ட கரியையும் கர்ப்பூரத்தையும் கலந்து பூசவும்.

வேறு.—ஆலம் பாலில் அரிதாரம் காசெடை $\frac{1}{2}$ பொடித்துப் போட் வெயிலில் வைத்து 10 நாள் தலையில் பூசிவர கிருமிகள் செத்து உதிர்ந்த மயிர் வளரும்.

### மண்டைக் கனப்பு 3

#### 1. வளிக் கனப்பின்குணம் இது தீராது.

" வாயு மிகுந்து மண்டையினில வந்தே கனக்குங் குணங்கேளாய்
தூய விழியும் புகைந்துவருந் துண்ட மடைக்குஞ் செவியிரைக்கும்
ஆய பிடரி வலியுண்டா மலகு கடுக்கு முகமதைக்கும்
சேய சிரத்தி லுணர்வுகெடுஞ் சேருங் குணத்தைச் செப்பிடிலே. "

#### 2. குருதிக் கனப்பின் பண்பு—இது தீரும்.

" செம்மிடு மிரத்தத் தாலே சிரக்கனப பாகுஞ் செய்கை
அம்முகங் கனப்பு முண்டா மடிக்கடி சுரமே யாகும்
விம்மிடும் விழியி ரண்டும் வெதும்பிடு மூச்சி மீது
வெம்மைசேர் விழியி லுய்கேள் புருவமும் பிடரு நோமே."

#### 3. நீர்க்கனப்பின் இயல்—இது தீரும்.

" நீரினுற் சிரங்க ணக்குஞ செய்கையை நிகழ்த்தக் கேளாய்
ஊருமே பரப ரத்து ரோமமு முதிருங் கண்டாய்
கார்குழன் மானே சென்னி கசிந்துமென் மேலும் நோவாம்
பாருமிக் குணஙக ளோர்பா லுண்டெனிற் பக்க நோயே. "

**மருத்துவம்.**—1. மாவிலிங்கம் வேர்த்தைலம், நிம்பாதித்தைலம், அமுக்கராத்தைலம், இவையிற்றில் தலைமுழுகக் கனப்புத் தீரும்.

**சிவனார் வேம்புக் கற்பம்.**—சிவனார் வேம்பு வேர்ப்பட்டை, திப்பிலி, சிற்றரத்தை, வெள்ளறுகன்கட்டை, கடுக்காய்த்தோல், சுக்கு, மஞ்சள் ஓரெடையு புன் வறுவலாக வறுத்துப் பொடித்து வெருகடி அளவு நெய் அல்லது தேனிற்கொள்ள மண்டைக் கனப்புத்தீரும்.

### மண்டை வலி I

#### வரலாறு.

" நீரினுற் குருதி சீயம" னெருக்கிய வாயு தன்னல்
சீரிய சுவையால் வெப்பாற் சிரத்தினில் வலியுண்டாகும்
ஆரிய னுரைத்த வுண்மை யாயுரு வேதந் தன்னில்
கூருமிக் குணங்க ளெல்லாங் குறித்துநீ யறிந்து கொள்ளே."

#### மண்டை வலியின் இயல்.

" கண்டந் தன்னின் மேன்மூன்று கதிக்க மண்டை வரட்சியினுல்
துண்டம் புருவங் கூடுதலிற் சுழியிற் கண்ணிற் குத்துண்டாம்
மண்டு நீரு மிடியுண்டாய் வலிக்கு மலகு கடுக்குமிக
மண்டை முழுதும் பரந்துகுத்தி வருத்துங் கபால வலியாமே."

" ஓடியே சிரத்திற் குத்து முளைத்திடுங் கன்ன நெற்றி
நீடிய புருவத் துள்ளே நெரித்திட வலிப்பு முண்டாம்
கூடிய புணர்ச்சி தன்னிற் குலவுநீர் சிவந்து வீழும்
நாடிய குணங்க பால வலியென நாட்ட லாமே. "

" கருதிய கபாலத் துள்ளே கனலெழ வெரிப்பு முண்டாம்
இருசெவி யிரைச்ச லோடு மிருமிடுங் கோழை வீழும்
திருகவே முகம்வ லிக்குந் தேருநா வரட்சி யாகும்
பெருமிகக் குணங்க பால வலியெனப் பேச லாமே. "

**மருத்துவம் :**

1. கருங்காலித் தைலம் தலை முழுக.
2. திப்பிலிச் சூரணம்—வெருகடியளவு, இருவேளை தேனில்.

**அஞ்சனம்.**—பூண்டு, கடுக்காய், திப்பிலி, மிளகு, ஏலம், சுக்கு வகைக்கு கழஞ்சொன்று இவற்றைப் பொடித்து வெற்றிலை நீரிலரைத்து நீண்ட மாத்திரை செய்து உலர்த்தவும். வேண்டியபோது வேண்டிய அளவு பொடிசெய்து கண்ணிற்றூவவும். முலைப்பாலிலரைத்துமிடலாம்.

**நசியம்** —பழம்பாக்கு, பழ அரைப்பு (பழைய இலுப்பைப் பிண்ணாக்கு), மிளகு, இந்துப்பு, இவற்றை அத்திப்பாலிலரைத்துப் பொடித்து, முலைப் பாலில் கலந்து மூக்கிலிடக் கபால வலி போம். பசாசுகணம் தீரும்.

## மண்டைக் குத்தியல்.

" புருவச் சுழியிற் குத்துநின்று போகப் பிரிவு மல்லாமல்
உருவ விடித்துத் திமிர்ப்புண்டா முடனே யடங்குஞ் சிரந்தன்னில்
திருகப் பிடரி மிகவலிக்குஞ் சில்லென் றடைக்கு மிருகாதும்
பெருகக் கபாலக் குத்திதென்று பேசி யிருப்பர் பெரியோரே. "

**மருத்துவம்.**—திருமேனியெண்ணெய்—தலையில் தேய்க்கக் குத்தறும்.

**அஞ்சனம்**—சுக்கு—இதன் தோலைத்தள்ளி, வேலிப் பருத்திச் சாற்றில் ஊறவைத்து, வெயிலில் உலர்த்திப் பொடித்து முலைப்பாலில் கரைத்து வெள்ளைச் சீலையிலூட்டி உலர்த்திப் பிறகு, திரித்துப் பசு நெய் விட்டுத்தோய்த்து, எரித்து விழுந் தைலத்தைச் சிமிழிலடைத்து வைத்துக் கண்ணிற்றீட்டுக.

**வேறு.**—கருங்காலித் தைலம் தலைமுழுகப் பயன்படும்.

## மண்டை வரட்சியின் பண்பு.

" இயம்பிய சிரத்தின் மீது கனலென வெரிக்குங் கண்ணும்
தயங்கிய செவியுண் ணுக்கு நாசியுஞ் சாலச் சூடாம்
நயம்பெறு சிறுநீர் தானு நாளுமே கலங்கிக் காட்டும்
வயங்கிழை மானே மண்டை வரட்சியின் குணங்களோ"

" ஏயநா வுலருங கைகா லெரித்திடு மிருகண் பொங்கும்
சாயவே யிரும லுண்டாஞ் சலமொடு மலமும் தீயும்
தூயகண் மருண்டி ருண்டு சுழன்றிடுங் கிறுகி றெனனும்
ஆயமா முனிவர் சொன்ன மண்டையின் வரட்சி யாமே "

இக்குணங்கள் தலையின் ஒரு பக்கத்தில் மட்டும் தோன்றின், அதனை மண்டைப பக்க வரட்சியெனக் கூறுவாருமுளர்.

**மருத்துவம்**.—சந்தனாதித் தைலத்தில் மூழ்கத் தீரும்.

**நசியம்**.—கர்ப்பூரம் அல்லது பச்சைக கர்பபூரம், நிலவேர் (நாங்கூழ்), கொடி முந்திரிகை, பேரீந்து, சண்பகப்பூ, துருசு, துத்தம் வகைக்குக் கழஞ்சு ஒன்று இவைகளை ஆனெய்யிலிட்டுக் காய்ச்சி மூக்கில் நான்கு துளி யொழுக்கிவர கபால வரட்சி தீரும்.

**வேறு**.—ஏலம், கோரோசனை, சீனி, முந்திரி, பேரீந்து, பச்சிலை, கர்ப்பூரம் இவைகளைப் பசு நெய்யிலிட்டுக் காய்ச்சி வடித்து மூக்கில் நான்கு துளி துளித்து வர மண்டை வரட்சி குறைந்துபோம்.

### மண்டைச்சூலை—3.

**அவை**:—(1) வளிச்சூலை, (2) குருதிச்சூலை,(3) நீர்ச்சூலை என்பனவாம். வளிச்சூலை தீரும் ; மற்றவை தீரா.

### வளிச்சூலையின் குணம்.

" கேளாய் சிரத்தில் வாயுநின்று இளருஞ் செவியி லிரைச்சலுண்
டாம்]
"தாளா திடிக்கு முச்சியெங்குந் தயங்கு நாசி வரண்டிருக்கும்
வாளார் விழியாய் முகங்கறுக்கும் வழுத்து மலகும் பற்கடுக்கும்
நாளே காது மந்திக்கும் நவிலும் வாயுச் சூலையிதே."

### குருதிச்சூலையின் பண்பு.

நாசி தனிலே யசறுவிழு நாற்ற மெடுக்கு மிடியுண்டாம்
பேசி லலகு தனையிடிக்கும் பின்னுந் தலையின் மயிர்கழியும்
ஆசை யுடனே மோர்பாலெய் யருந்திற் பகையாய் முகங்கனக்கும்
வாச மிகுந்த குழலாரே மண்டை யிரத்த சூலையிதே."

### நீர்ச்சூலையியல்.

" சென்னி வேர்க்கு மயிர்முறியுஞ் சீறு நாசி நீர்வடியும்
இன்னே சுகநதத் துர்க்கந்த மிரண்டு மணவா திடியுண்டாம்
அன்ன நடையாய் பல்லலையும வாயு நாறு மலகுளையும்
மின்னே மண்டை யுட்புண்ணாய் மேண்மேற் கோழை விழு
மன்றே.]"

**மருத்துவம் பொது:**

### ஆடுதீண்டாப்பாளை யெண்ணெய்

ஆடு தீண்டாப்பாளைச் சாறு படி 1, எள் நெய் படி 1, மிளகுத்தூள் படி $\frac{1}{4}$, தேவதாரம், அபின், மதுரம், சுருள்படடை, நன்னாரிவேர், சருஞ் சீரகம, கஸ்தூரிமஞ்சள் இவை வராகனெடை $1\frac{1}{4}$, பால விட்டரைத்து மேற்படியில் கலந்து காய்ச்சி வடித்து நசியமுஞ் செய்து முழுகியும் வரச் சூலை தீரும்.

**நிர்க்குண்டித் தைலம்.**—தலை முழுகத தீரும்.

**அமுக்கராத் தைலம்.**—இதுவும முழுக உதவும்.

**மண்டைச்சூலைக்குப் புகை.**—இரசம் வராகனெடை $2\frac{1}{2}$, தாளகம் குன்றியெடை 20, துருசு குன்றியெடை 10, வெள்ளைப்பாடாணம் குன்றி யெடை 5, இவற்றைப் பொடித்து ஊமத்தையிலைச் சாற்றாலரைத்துக் குளிகை செயயவும். இம்மாததிரையை நாள் ஒன்றுக்கு ஒரு மாத்திரை யாக நெருப்பிலிட்டு உண்டாம் புகையைப பிடிக்கவும். இப்படி ஏழுநாள் செய்யவும். பிறகு 7 நாள் மறுபத்தியமிருந்து பிறகு ஒன்று விட்டொரு நாள் சிற்றாமணக்கு நெய் தேய்ததுக்குளிர்நதநீரில் 7நாளைககு முழுகவும் இப்படி இருமுறை செய்யப பறங்கி சிரசூலை, கிரந்தி வெடிசூலை ஆகியவை தீரும்.

**பத்தியம்.**—உறைப்பு, புளிப்பு, நீக்கவேண்டும்.

இம்மருத்துவத்தால் நோயாளிக்கு எருவாய வழியாய்க் குருதி வெளிப் படின் அதனை மாற்றக் கஞ்சியுடன் வெண்ணெய் கலந்து கொடுக்க, வயிற் றுளைவும் நீங்கி, உடலும் குளிர்ந்து பிணியுந் தீரும்.

**குக்கிற் சூரணம்.**—வெருகடியளவு இருவேளை தேனில் மண்டலம் பத்தியத்துடன் கொள்ளத் தீரும்.

### மண்டைச்சன்னிக் குணம்.

" உகைத்தே சிரத்தின் மிகவலிககு முடம்பு வேர்க்குங் கண்குழியும்
புகைத்தே யிருமுங் காதடைக்கும் பொருந்து நாவும் வரண்டு
வரும்]
மிகைத்தே யுடம்பு கருகிவரு மெய்யே நடுக்கும் விழிசுழற்றும்
பகைத்தே யியைப்பு வாந்திவிக்க லுண்டாங் குணத்தைப் பார்த்
தறியே"]

" ஓங்குஞ் செவியிற் சீவீழு முலர்ந்து நாறு மொடுமாறு
ஆங்குக் கைகா லைசந்திருக்கு மரம்போ லுவுங் கருத்திருக்கும்
தூங்குங் கண்ணும் புகைந்துவருஞ்சொல்லும் பேச்சு மறப்புண்டாம்
ஈங்குச் சிரத்திற் சன்னியிதென் றியம்பு மாயுண் மறை
தெறிந்தே."]

**மருத்துவம் :**

1. நிம்பாதித் தைலம்.—தலையில் தேய்ப்பதற்கு.

2. பஞ்சரத்தினசிந்தாமணித் தைலம்.—தலையிலும் தேய்த்துக் காதிலுந் துளிக்க, மண்டைச்சன்னி, வெடிசன்னி, கண்வலி, பிடரிவலி, பிடரித் திமிர்ப்பு, பிடரி வியர்வை, செவியிரைச்சலிவை தீரும்.

3. நாவிற்றடவுமருந்து.—உருத்திராக்கம, கலைக்கொம்பு, அக்ராகாரம், பேராரத்தை, திப்பிலி, பவழம், முத்து இவைகளைப் பிள்ளைப்பாலி லிழைத்து கர்ப்பூரங் கூட்டி அரம் போன்றிருக்கும் நாவினிறரேயக்க மண்டைச் சன்னி தீரும்.

4. இராச மிருகாங்குச மாத்திரை.—முலைப்பால், தேன், இஞ்சிநீர் இவையில் அநுபானித்துக் கொடுக்க மண்டைச்சன்னி தீரும்.

5. வேலிப்பருத்தி யெண்ணெய்—தலை முழுகத்தீரும்.

## மூளை நோய் 16.

இப் பதினாறில் 8 தீரும் 8 தீரா.

## தீரா எட்டு நோயில் முதலாவது

### 1. மூளை (அமுத)வளியின் குணம்.

" மூளையுள் வாதஞ் சேரின் முதிர்ந்திடுங் குணத்தைக் கேளாய்
நாளுமே சிரங்கு ளிர்நது நயனமும் பீளை சாடும்
தான்செவி யடைத்துக் காட்டுந் தறுகிடா திடிக்கும் சென்னி
வாள்விழி மானே கனைத் தலையிடை வலியுண் டாமே. "

**மருத்துவம்.**—ஆயிலெண்ணெய்—தலைமுழுகத் தீரும்.

### 2. மூளை (அமுத) ஐயப்பண்பு.

" வெதும்பிடுஞ் சென்னி மீது வேர்த்திடு நாவி னித்துத்
ததும்பிடுங் குவளை குத்துந் தறுகிடா திரும லுண்டாம்
பதம்பெறு குரலுங கன்றும் பல்லல குடஞேம் பார்க்கில்
விதம்பெறு சென்னி மீது மூளையிற் சேறப மெண்னே."

**மருத்துவம்**

1. **இண்டாதி லேகியம் பாக்களவு இருவேளை மண்டலங் கொள்ளத் தீரும்.**
2. **அரிதகித் தைலம் தலையிலிட அதன்கட் சேர்ந்துள்ள ஐயம் நீங்கும்.**

### 3. மூளை (அமுத) அழல் ஐயவியல்.

" சிரசின் மூளையுட் சேர்பித்த சேற்பனம்
விரையச் செய்யுங் குணத்தை விளம்பக்கேள்
புரை கொள் விக்க லிருமல் புகைந்தெழும்
கரையுந் தேக முடனேழுங் காய்ச்சலே."

" காய்ச்ச லாயிரு மூக்கிற் கபம்விழும்
பேச்செ லாந்தொண்டை கட்டியே பேசிடும்
மூச்செ லாமுடை நாற்ற முதிர்ந்திடுங்
கூச்ச மாம்பல மூளையுட் கொள்கபம்."

மருத்துவம்.—தேற்ருன் எண்ணெய்—தலையிற் பூசத் தீரும்.

### 4. மூளை (அமுத) ஐயவளிக்குணம்.

" எய்து மூளை யெழும் ஐய வாதத்தின்
செய்கு ணங்கள் தெரிந்துரை செய்குவன்
துய்ய கண்முகம் வீங்குந் துரப்பெழும்
நொய்ய நாசியி னூடு நுரைக்குமே."

" நுரைத்துப் பொங்கி யுரமது நோவுண்டாம்
உரத்துச் சென்னி யுடனுச்சி குத்திடும்
பரித்த ரோம முதிரும்பல் வேர்கெடும்.
சிரத்தின் மூளையுட் சேத்தும வாதமே."

மருத்துவம்.—மயிலடிக்குருந்தெண்ணெய்—இதைத் தலையிற்றேய்க்கத் தீரும்.

### 5. மூளை (அமுத) வளி ஐயப்பண்பு.

" எய்திய வமுத மீதே யியம்பிய வாத சேற்பம்
செய்குறி யதனைக் கேளாய் சிரதனீர் சேரும் வேர்க்கும்
ஐயுமே மிகுந்த நோவா யரியவெப் பிரும லுண்டாம்
கையுங்கா லுங்க சிந்து கண்முகம் வெளுக்குங் காணே."

மருத்துவம்.—தழுதாழை யெண்ணெய்—தலை முழுகத் தீரும்.

### 6. மூளை (அமுத) வறட்சியினியல்.

"ஓதில் சென்னியின் மூளை யுட்கொடு தீமையான வரட்சி செய்
கோதி லாத குணங்கள் கேளுடல் குத்தி நொந்து கொதித்திடும்
ஊதை சேர்செவி நாசிகண்களு முள்ளு லர்ந்து வரண்டிடும்
ஓதிலாத புலப்ப முஞ்சில புத்தி கேடு முண்டாகுமே."

மருத்துவம்.—தாய்ப்பா லெண்ணெயில் முழுகத் தீரும்.

7. மூளை (அமுத) தோடத்தின் குணம்.

" திருகி நடுக்கிச் சுழற்று முச்சியில்
வெருவ விடித்துக் கனத்து நொந்திரு
செவியு மடைத்துப பிதற்றியேயுறு—செயன்மாறிக்

கருகு முதட்டிற் பரித்த தந்தமு
மலகு கடுத்துக் கதத்து வெம்பிய
கடமு மிளைத்துச் சுருக்கெழுங்களெ—மதனுடே

பெருக மயக்கிற் சினதது விக்கலு
மிருமி யிளைத்துக் கொதித்து முற்றிய
பிடரி வலித்துத திமிர்தது நீள்விழி—யெரிவாகி

மருவு மிடுப்புப் பொருத்து டனறழ
லெழவும் வலித்துத் திடுக்கி டுங்குண
மமுத தலத்திற குடிக்கொள் சன்னியின்—வகையாமே."

**மருத்துவம்.**—நிம்பாதித் தைலம்—தலையிற்றேய்த்தும் செவியிலும் விட்டுவாக் குணமாகும்.

8. மூளை (அமுத) நீர்க்குணம்.

" வாள் விழியி னுய்தலை வலித்திடு மிடிக்கும்
கோழைமிக வாயிருமி யேகுவழை கக்கும்
தாழ்செவியி னூடுருகி யேசலமு மாகும்
மூளையுறு நீரென மொழிந்தனர்கண முன்னோர்."

" ஓதிய சிரத்துருகு நீர்வித முரைக்கில்
கோதையறி வாயிது வசாத்யகுண மென்ன
ஆதிமறை யோன்முனி வனுக்குரைசெய் வண்ணம்
கோதிறமி மூாலுரைசெய் கொள்கையது வாமே."

**மருத்துவம்.**—கருங்காலி யெண்ணெய்—தலையிற்றேய்க்கக் குணமாம்.

**திரும்வகை எட்டில்—முதலாவது.**

1. மூளை (அமுத) அழலின் குணம்.

" மூளையிற் பித்தஞ் செய்யுங் குணத்தினை மொழியக் கேண்மோ
நாளிலே யுடமபு வற்றி நலங்கெட வெளுதது நாவும்
கோளதாய் வாண்டு கைக்குங் குணங்கெடப் புலப்ப முண்டாம்
ஊளை நீர் நாசி யாலே விழுந்திடு மொடுப்புண் ணுமே."

**மருத்துவம் :**

1. சிந்தில்நெய்—பொட்டுக் கரண்டியளவு இருவேளை உட்கொள்ள
2. நிம்ப எண்ணெய்—முழுக மூளை யனற்றீரும்.
3. தலையில் மத்திக்க மருந்து.

நெல்லிவற்றல், சிறுபயறு, ஆவெண்ணெய், அதிமதுரம், சந்தனம், இவைகளைப் பன்னீரானரைத்து, தலையிலும், கையிலும், காலிலும் தேய்த்து முழுக அனல் தீரும்.

**2. மூளை (அமுத) வளி அழலின் பண்பு**

"தேக்கிய வமுத மீது வாதபித் தத்தின் செய்கை
தாக்கிடும் பிடரி மேன்மேற் றறுகிடா வலியுண் டாகும்
ஊக்கமா யிரும லாகி யுளைந்திடு முறுப்பெண் சாணும்
மூக்குளே சேரு மையு முள்விழி புகையு மாமே."

**மருத்துவம்.**—கடுகாமலத் தைலத்தில் மூழ்கத் தீரும்.

**3. மூளை (அமுத) அழல் வளியினியல்.**

"முந்து சென்னியின் மூளைமீதுறு முந்து பித்தமும் வாதமும்
சொநதமான குணங்கள் கேளுறு தொண்டை நொந்து சுருக்
[கெழும்.
சிந்து நாசிவ ரண்டுசெம்மியி ரத்த நீர்கள் செறிந்திடும்
மந்த மாயிரு கர்ணி யங்களும் வாரியென்ன வொலிக்குமே."

**மருத்துவம்.**—அசனுமலகத்தைலம்—இதனைத் தலைக்குப் பூசித் தேய்த்து வரத் தீரும்.

**4. மூளை (அமுத) ஐய அழலின் பண்பு.**

"பூவை யேசிர மூளையிற் புக்கிய
பாவு சேற்பன பித்தத்தின் பண்புகேள்
மேவு காதி லிரைச்சல் மிகுந்திடும்
வரவு சென்னி வலிக்கும் வகைகளே."

"மறுகு வாந்தி மயக்க மிருமலும்
குறுகு றுப்பொடு விக்கல்கொட் டாவியும்
தறுகி டாச்சுரஞ் சாருங் குணங்கணீ
அறிவை தீர்க்கு மருந்தை யறையக்கேள்."

**மருத்துவம்.**—கடுமிளகு தான்றி யெண்ணெயில் முழுகத் தீரும்.

**5. மூளை (அமுத) குருதி நோயியல்.**

"துன்னிவரு மூளையிற் சுரோணித குணங்கேள்
மன்னுமிரு நாசிசெளி யால்வரு மிரத்தம்
மின்னுவிழி மீதில்வரி மேவுதிர மாகும்
அன்னநடை யாய்சிர மடிக்கடி கனக்கும்."

**மருத்துவம்.**—சந்தனாதி நெய்—இதனை யுள்ளுக்குங்கொண்டு, தலைக்குந் தேய்த்து நாசியிலுமிடத் தீரும்.

## மூளை (அமுத) சூலை.

**தீர்வன 1. அரிதில் தீர்வன 2 :**

**1. நீர்ச் சூலையினியல்—அரிதில் தீரும்.**

" நீரில்வரு சூலைசெயு மக்குண முரைக்கில்
கூர்விழி மயங்குநுத லுச்சியொடு குத்தும்
கார்குழ லுதிர்ந்துபிட ரேகடு கடுக்கும்
வார்முலையி னுயலகு காதடி வலிக்கும்."

**2. குருதிச் சூலையின் பண்பு—அரிதில் தீரும்.**

இரத்தமுறு சூலைசெயு மிக்குண முரைக்கில்
சிரத்தினி லடிக்கடி திரண்டுடையு மின்னே
உரத்திட விடிக்குமுக மோங்கிமிக வீங்கும்
நெருப்பென வெரிக்கும்விழி நீதெளிகு வாயே."

**3. வளிச் சூலையின் பண்பு—தீரும்.**

" வாயுவுறு சூலைசெயு மக்குணம் வழுத்தில்
காயுமுடல் நீள்செவி கடற்பட விரைக்கும்
மேயசிர மெங்கணு மிரும்பென விறைக்கும்
தூயவிழி மேலிமை துடித்தது துளங்கும்."

மருத்துவம்.—மூளைச் சூலை மூன்றுக்கும்—ஏலாதியெண்ணெய், இதனை மூக்கிலும் காதிலும் துளியளவாய் விடுவதுடன் நான்கு நாட்கொருமுறை மூழ்கிவரச் சூலை தீரும்.

### செவிநோய்.

செவியில் வளி 4— இரண்டு தீரும் ; இரண்டு தீராது.

**தீரா இரண்டில்:**

**1. சுரோணித வளிக்குணம்.**

" மேலான சுரோணித வாதமதின் மிக்கான குணத்தை [விளம்பிடுகில்
நூலான நரம்பிடையே தழல்போலேவாக வடிக்கடி வீங்குமது
பாலாகிய மென்மொழி மாதுநலாய் பாதாகமு மோகவு பாதியு [மாம
கோலா கலமாக வெடித்ததிலே குருதிப்புனல் பொங்கிடு மிக் [குணமே."

"மேவுஞ்செவி சுற்றிட வீக்கமதாம் விசைநாடி யிரண்டும் விரைத்து வரும்
கூவுஞ்சிர மெங்கணும் வெப்பமுறுங் கோழைத்திரள் தொண்டை [யினுட்குறுகும்
தாவும்பிடர் நெஞ்சொடு தாளுளையுஞ் சந்தித்து மயங்குமுள் விக் [கலுமாம்
வாவும்பிடி போனடை மங்கையரே மாருத சுரோணித வாதமதே."

**மருத்துவம் :**

1. விரேசன சுந்தரக்குளிகை, ஒரு குளிகை—தாய்ப்பால், இஞ்சிநீர், தேன் இவற்றில் கொடுக்க மலங்கழிந்து மண்டைவளி, செவிவளி, இவை தீரும்.

2. தேவதாரு கிருதம்—காதில் துளிப்பதற்கு.

3. மேற்பூச்சு—வேப்பம் பிசன், வேலன் வேர்ப்பட்டை, வசம்பு, உள்ளி, அபின், முக்கடு, குக்கில், மரமஞ்சள் இவைகளைப் பசு நெய்யிலேனும் ஆமணக்கு நெய்யிலேனும் அரைத்துப் பூசலாம்.

## 2. விரண வளிப்பண்பு.

"விரணம தெழுவாதக் குணமதை வினவிக்கேள்
கரணென வெழுமோகப் பருவிவை களினுலே
அரணுடை யிருகாதுக் கடியினு மலகூடும்
உரனுற வலியாகித் திருகிடு முணர்வாயே."

"மறுகுற வலியாகு மயர்வொடு வெயர்வாகும்
விறைவொடு திமிர்மேவும் விரணமு மிகவாகும்
சுறுளிடு மிருகாதுந் துரவெழு முரமேவிக்
குறுகுறு குறுவாகிக் குறுகிடு முயிர்தானே."

மருத்துவம்.—பூநாகத்தைலம் காதில் துளிக்கத் தீரும்.

**திருமிரண்டில் முதலாவது:**

## 3. செவி விறைவளிக்குணம்.

"செவியூடு விறைத்திடு வாதமுமே செய்யுங்குண மானது நீதெளி [வாய்
சவியேகெட நீள்சிர மெங்கணினுந் தளராமல் வலித்திடு மூதை [யுறும்
குவைமீது கடுத்திடு மீரலிற் கொட்டாவியு நெட்டையு மாறறிதாம்
புவிமீது நடுக்கி மயக்கிவிழும் பொல்லாத விறைத்திடு வாதமதே."

**மருத்துவம்.**—தேங்காய் நெய்யைப் பொங்கக் காய்ச்சில் ஒற்றடமிடக் காது விறைவளித் தீரும்.

### 4. செவித் திமிர் வளிக்குணம்

"கன்னிகை திமிர்வாதஞ் செய்குறி கழறக்கேள்
சென்னியி னிடைவாயு சேரிடும் வெயர்வாகும்
உன்னிய வலங்கூடும் கன்னமு முளைவுண்டாம்
மன்னிய களநாடி வலியொடு விறைவாமே."

**மருத்துவம்** :—சினேக பொட்டளி (பொட்டணம்) திரிகடு, கடுகு, ஓமம், முப்பலம், கருஞ் சீரகம், ஆளிவிதை, கார்கோலரிசி, சன்னிநாயகம், சிறுபுன்னைவித்து, அகில், ஏலம், நாகணம், அதிமதுரம், அழிஞ்சில் பட்டை, எட்டிப்பட்டை, மகிழம்பூ, மாம்பட்டை, சிறுசின்னி, புங்கம் ஏரண்டம், சிற்றகத்தி, பேரகத்தி, கொம்மட்டி, பருத்தி, முதிரை, உழுந்து, முருங்கை இவற்றின் வித்து, முட்சங்கிலை, முசுறுமுட்டை, பேய்ப்பீர்க்கு, எள், குன்றி, வாகை, முற்றியதேங்காய், வசம்பு, சாதிபத்திரி, வெளிச் சப்பசின், ஐந்துப்பு, விளங்கம், குக்கில், இவை ஒரெடை நன்றுயிடித்து ஒருகிழி கட்டி ஐந்தெண்ணெயில் (எண்ணெய், முத்துநெய், ஆனெய், தெங்குநெய், புங்குநெய்) விரவிக்கலந்து பிறகு, ஒரு சட்டியில் சுட வைத்து வேப்பெண்ணெயில் எரித்துவைத்து, தலை, நெற்றி, பிடர், தோள், செவி சுற்றிலும் ஒற்றடமிட வெப்புறுநோய், வளி, இவைபோம். மேலும் புறவலி, தனுவாதம், திமிர்வாதம், விரைவாதம், சன்னிவாதம், எரிவாதம், குதிரைவலி இவை யொழியும்.

வேறு.—செவிவளி பலவற்றிற்கும் விடமுட்டித் தைலம்—இதனைக் காதில் விட சூலை பதினெட்டு, சன்னி முதலிய தீரும்.

### செவிச்சூலை.

இஃது ஆறு வகைப்படும்; அவை—1. நீர்ச்சூலை, 2. வாயுசூலை, 3. மாங்கிஷசூலை, 4. சுரசூலை—இந்நான்குந்தீரா, 5. குருதிச் சூலை, 6. சன்னி சூலை—இவ்விரண்டும் தீரும்.

### 1. செவிநீர்ச்சூலையின் குணம்.

"தோகைய ரேசெவி யூடு றங்கிய
மேகம தாயுறு நீர்மி குந்திடு
சூலையி னூர்செய் குணங்க ளானவை—சொலவேகேள்
மோகம தாக மயங்கு மேவெயர்
வாகுல மோடு வெதும்பு நீள்சிர
மேமலி வாக வயர்ந்து தாபமு—மிகவாகி
தாகமு மாயிரு காது மந்தமு
மூதையு மீறியொவ் வாது நாவது
சாரமு மாறி வரண்டு பேச்சுரை—தடுமாறிக்
கூகைகள் போலல கூடு காதொடு
தாவிட மோதி யெழும்பு மாறிது
கூறிடி யம்பிய நீர்கொள் சூலைசெய்—குறியாமே."

### 2. வாயுச் சூலையின் குணம்.

"ஊதை மிகுத்தெழு சூலை விதத்தினை யோதிடு மிக்குரைகேள்
மோதி யிடித்திடு நீள்செவி சுற்றுற மோக மயக்கமுமாம்
வாதை மிகுத்திட வேசிர மொக்கவு மாறரு வெப்பமுமாய்க்
காதடி தொட்டல கோடு கவுட்டல மீது கனக்குமதே."

### 3. மாங்கிஷ சூலையின் குணம்.

"உரைத்தசெவி யூடுற நெரித்தகனல் போலெழுந்
துதைத்ததசை மீதெழும்—விஷசூலை
வருத்துகுண மானது சிரத்திலிடி மீறிய
பிடர்க்குள்வலி யாயல—குடனேவாம்
பெருத்ததசை காதிடை யிரத்தவடி வாயது
கரிப்பதுட னேவரும்—பெலமாகி
வருத்தமுற வேபெரு தரப்பினிடை யூதைகொண்
மயக்கமிக வாகிடும்—வகைகாணே."

### 4. சுரசூலையின் பண்பு.

"செப்புப் போன்முலை மாதுந லாய்செவி
யொக்கத் தாவியே கோப மிகுத்திடும்
வெப்புச் சூலையி னுர்செய் குணங்க—ளறிந்தேகேள்
துப்புப் போல்விழு நாறு முளைந்திடு
மக்கித் தாகமு நாவும் வரண்டது
சுக்குப் போலுலர் வாகி மயங்கிட—வயர்வாகி
அப்புக் கூர்விழி மீறி வடிந்தழல்
மிக்குத் தேகப மாகி விரைந்திடு
மச்சத் தோடிரு கால்கர மெங்கணு—மதுநோவாய்
உப்பித் தேவயி றூதி வருந்திட
விக்கிச் சீறிட வேவெயர் வாகிடு
முற்றுத் தானறி வாகட நூலினை—யுணர்வோனே."

## திரா இரண்டில் முதலாவது;

### 5. சன்னி சூலையினியல்.

"கன்னிக முற்றிடு சன்னி கதித்தலின் மன்னிய சூலைசெயுங்
காரண மேதெனி னீள்செவி சீழுற நீடு கனப்புமிகுந்
துன்னிவி றைத்தது சென்னியொடுச்சியு மொக்க வலித்திடியா
வுடரொடு வாகி யுரோம முதிர்ந்திட லேறவு நொந்துளையும்
அன்னம றுத்திடு முள்ளிய விக்கலு மாக மயக்கமுமா
யானன வேர்வையு மாறரு மோகமு மாகி நடுக்கமுறும்
தன்னுண ர் வற்றிட விண்ணின் மறப்பொடு குன்னி முடக்குமுடல்
தாபமொ டேபர தாகமு பாதியு மாகும தன்குணமே."

### 6. குருதிச் சூலையின் பண்பு.

"கறணிக சுரணித மெழுகுண மதிலுறு கடுகிய வெடிசூலைக்
குறியிரு செவியொடு விரணம தெழமிகு குருதிகள் விழுமதனல்
மறுகுற விடிவலி திமிரொடு முழலைகள் சலமுற வறுமதுவே
சிறுகிடு மிருகுரல் திருகிடு மலகுக டெரிகுவை தெளிகுணநீ."

**மருத்துவம்:**

1. நீர்ச்சூலையில் சிற்றுமுட்டித்தைலம் தேய்த்து நீராடப் பயன்தரும்.

2. வளிச்சூலையில் செம்மணத்தித் தைலத்தில் தலை முழுகத் தீரும்.

3. மாங்கிஷ சூலை—நிர்க்குண்டித்தைலம் தலைமுழுகவும், காதில் விடவும் பயன் தரும்.

4. சுரசூலை—உசிர் சந்தனுதித்தைலம் உள்ளுக்குங் கொடுத்துக் காதிலும் விடத்தீரும்.

5. சன்னிசூலை—குருந்தெண்ணெய் நீராடவும் காதில் விடவும் பயன் பெறும்.

6. குருதிச்சூலை—அசுவகந்தித் தைலம்—இதைத் தலையிற்றேய்த்தூற வைத்துக் குளிக்கத் தீரும்.

காதின் சூலை யெல்லாவற்றிற்கும், கந்தகம் சேர்த்து முடிக்கப் பெற்ற ஓரிரசாயனத்தையும், குக்கிலாதி சூரணத்தையும் உள் மருந்தாக வெருகடியளவு பொருத்தமான துணை மருந்துடன் கொள்ளத் தீரும்.

## செவிச் சன்னி. 4.

**அவை** :—சீழ்ச்சன்னி, 2. குருதிச் சன்னி, 3. நீர்ச்சன்னி, 4. வளிச் சன்னி—இவற்றுள் முன் இரண்டும் தீரும்; பின் இரண்டும் தீராவாம்.

### 1. சீழ்ச் சன்னியின் பண்பு.

"கேள்வி யுளில்வரு தோஷ மதுதனில் வாதமிகுசிய ஞேவுகேள்
கெண்டை போலும் விழி யொண்டொட செவியு மண்டை யூடுருவ
[நொந்திடும்
தாழு மலகுகண் மோதி விறைவொடு பாக மயர்வுற வீசியே
துண்ட மாகவலி கொண்டு நீள்விழிகள் துண்ட மோடிசிவு
[கொண்டிடும்
நாளு மொழியுறு நாவு வரள்வுற வோது பலவுரை யீனமாய்
நந்த லாய்மிகவு மந்த மாகிமெலி வுந்த ளாடலொடு குத்திடும்
சூழு கபமது தாழு மிருமிடு மூலைத கெ ளும்விழி சோரிடுந்
தொந்த நோவுமதி மந்த மொடுசுழல் வுந்து காளைடைகள்
[சிந்துமே."

**மருத்துவம்.**—வசலாதித் தைலம் காதில் விடத் தீரும்.

### 2. குருதி வெடிசன்னியினியல்.

“ முந்துநீள் செவியி னூடே தாவிட
நொந்து கோபமுற வேதான் மோகமு
மொய்ம்பு தாழ்பிடரி கீழ்நா மேலணை—முறநோவாம்
கொந்து சேர்குழலி கேளாய் நாளினி
லுந்து மேயுடையு நீரா மேயவை
மந்த மாயகுறி கொண்டு வேர்வையு—மிகவாகி
வந்து கால்கள்கர மோவாய் நாவுலர
வுந்த ளாடலுட னேதா னுகுல
மந்த மோடுமயர் வாயே காதினிடை—வருசோரி
சிந்து மேயிதுவு மோர்பா லேயுற
வந்த போதிலுறு மாறே நீதெளிதி
சிந்தை கூறமுனி தானே யோதுமுறை—தெளிவீரே.”

**மருத்துவம்.**—இலசுனுதி நிம்பத்தைலத்தைக் காதில் விட்டும் மூக்கில் துளித்தும் தலையும் மூழ்கி வரத்தீரும்.

### 3. நீர்ச் சன்னிக் குணம்.

“ செவியி னூடுற நொந்து வருந்திட
மறுகு நீள்சிர மெங்கு முளைந்தது
சிறுகு நீள்குரல் பம்பி மெலிந்துறு—சோபமாகி
குவியு நீள்விழி பொங்கி மருண்டிடு
மலகு காதடி வந்துற வுந்திடு
குமிழி போலும்வெடி கொண்டு சுரந்ததில்—வருநீரும்
சவிகெ டாயிரு மங்க முலைந்திடு
மிருமி யேசல நெஞ்சி லுறைந்தது
தளர்வ தாய்வெகு சம்பிர மஞ்சல—மதுதானும்
கவியு மாமுகில் பொங்கு நெடுங்கிரி
யுறையு மாமுனி முந்த மொழிந்திடு
கருணை யாயுறு பண்டிதர் கண்டிது—கருதீரே.”

**மருத்துவம்.**—திரிகடுகாதி நிம்பத் தைலம்—காதில் விடவும் மேலே பூச்சாகப் பூசவும் பயன்படும்.

### 4. வளிச்சன்னிக் குணம்.

“ஓதிற் காதிடை குத்து மிடித்திடு
மாறுற் றேவலி கக்கல் பெருத்திடு
மூர்வற் றேசிர மொக்க வரட்சியு—முடனுகும்
மோதிச் சீறிட விக்கி யிளைத்திடு
மோகத் தாகமு மொக்க வெயர்த்திடு
மோலித் தார்கலி யொக்க விரைத்திடு—முரைகேளா

வேதித் தேயல குக்கிடை யிட்டிடு
மீறித் தாகமு மக்கி பெருத்திடு
மீளக் கோழைகள் சத்தி யெடுத்திடும்—விரைவாக
வாதித் தேபுரு வத்தொடு நெற்றியு
மாகத் தாழ்பிடர் சுற்ற வலித்திடும்
வாயுச் சீலினின் முட்டிடு சன்னியின்—வகைதானே."

**மருத்துவம்.**—செவி சன்னி கட்கு வசம்புத்தைலம் காதில் துளிக்க.

**செவி விப்புருதி—6 வகைப்படும்.**

**அவை** :—1. சதை விப்புருதி, 2. ஒடுவிற்புருதி, 3. மடுவிற்புருதி, 4. என்புவிப்புருதி, 5. இரண விப்புருதி, 6. புற்றுவிப்புருதி—இதில் முதன் மூன்றும் தீரும் ; மற்ற மூன்றுந் தீராவாம்.

**1. சதைவிற்புருதியின் குணம்**

" சுற்றுதசை விற்புருதி யுற்றகுறி தொக்கிலுறு
சுற்றதனிற் பக்க முமெலாம்
உற்றிட வதைத்தனி லக்கிவலி குத்திடுெடு
மொத்தவெ யெரித்து விழுமால்
எற்றுகரு நத்தையினி லுற்றதசை யொப்பதென
வெப்பமுற முற்றி யெழுமே
உற்றதிவை யிக்குணம தொக்கமுனி செப்புமறை
யுற்றறித லொத்த முறையே."

**2. ஒடுவிற்புருதியின் பண்பு**

" வடுவைப் பிளவுசெய் விழிபொற் கிளிமொழி மயிலுற் றறிநீயே
கடுகச் செவியிடை விரணத் துடனூறு கறஞைத் தெழுமொலியே
வெடிபட் டுளேவொடு வலிகுத் தயர்வுகள் மிகவுற் றழலாயே
ஒடுபட் டழிசல மிகுமிஃ தொடுவிற் புருதிசெய் குறியாமே."

**3. மடுவிப்புருதியின் இயல்**

" வடவெற் புறுதன மயிலுற் றறிகுவை மடுவிற் புருதியை நீயே
அடைபட் டிருசெவி குடைவுற் றதிலிடி யழலுற் றெழுமல இடையே
முடுகித் திடிரென வெளுபற் கழல்வுற முகமக் கவுமது கனமாய்
இடியிற் கடிதெழு குடைநற் புதிரென விரைவுற் றெழுமத
[னியல்பே."

**4. என்புவிற்புருதியின் குணம்**

" ஓசை சேர்செவி யிலென்பு விற்புருதி செய்கு ணங்களிவை
[யோதிடில்
கூசு மேயலகு கூடு மெல்லைகள் குவட்டி ளேடுமிடி கொண்டிடும்
பேசி லோகவு ளிடிக்கு மேயிரு புறத்து மென்புகள் புறப்படும்
நாச மாகுமிது தீரி டாதுவகை நாக மாமுனி யுரைத்ததே.

### 5. இரண விப்புருதியின் பண்பு

" குறியுறச் செவியுளே விரணவிற் புருதிமேல்
கொதிகொள்வெப் புடனெழுங் குணமோதில்
மறுகுறச் சிரமெலா முளைவுறத் துடிகள் போல்
வசமறக் கபமுமாய் வலியாகும்
இறுகுறக் கனமுமா யெரியெழச் சுரமுமா
யிருகவுட் கிடையெலா மிடிமோதிக்
கறணெனப் புலவுநீள் கனலையொப் பதுவெனக்
கருதியுற் றிடுமிஃ தறிவீரே."

### 6. புற்று விற்புருதியினியல்

" முத்தை யொத்தநகை மானே நீயறி
புற்று விற்புருதி தானே காதடி
முற்று முட்டனில மாயே மோதிட—முகபேதமாய்
நத்தை யுட்டைசகள் போலே சீயொடு
குத்த யர்ச்சியிடி மாறு வேதனை
நச்ச முற்றுதுய ரோயா வேர்வொடு—வெகு மோகமாய்ச்
சத்தி விக்கலழ னீறும் மேலெழு
பித்து மிக்கபமு மாறும் மீறிய
சத்தி யிற்கிசைய நோயாய் நீரினில்—மிகுதாகமாய்
அத்தி யுற்றெழுதல் போலே சீறிட
நெற்றி தொட்டலகு மீதே நோவெழு
மக்கு ணத்தையறி தீரா நோயிஃ—தெனவோதினர்."

**பரிகாரம்.**—இந் நோயின் வகைகளைத் தைலங்களைக் கொண்டும் சுட்டிகை களைக்கொண்டும், அட்டைகளைக் கொண்டும் மருத்துவஞ் செய்து குணப்படுத்தலாம். அவற்றுள் :

நாரிகேளத்தைலம் காதில் விடுதற்கும் மேற் பூசுவதற்கும் பயன்படும். இரணவிப்புருதியில் காதின் அடிப்புறத்தில் சுட்டிகை செய்யலாம். புற்று விப்புருதியில் காதைச் சுற்றிலும் அட்டை விடலாம்.

### செவியெழுச்சி 6

**அவை.**—1. நீர் எழுச்சி, 2. செந்நீரெழுச்சி, 3. சீயெழுச்சி, 4. இரண வெழுச்சி, 5, சுரவெழுச்சி, 6. முக்குற்ற வெழுச்சி—இவற்றுள் சுரத்தி னாலும் முக்குற்றத்தினாலும் உண்டாகும் எழுச்சிகள் தீராவாம்.

### 1. நீர் எழுச்சியின் குணம்

" கோத்தநீர்த் தோடத்தாற் கொண்டெழுச்சி—தோற்றில்
தலைவலிக்கு மூக்கடைக்குந் தக்கபிடர் கனக்கும்
உலையுஞ் செவியுள் ளுடையும்."

**2. செந்நீர் எழுச்சியின் பண்பு**

“ இரத்தவெழுச்சி யிருகா தடைக்கும்
வருத்து மிடிகுத்து வலியோ—டுரைத்திடுகில்
வீக்கமுட னேவாய் வெடிக்குங் குருதிசிந்தும்.”

**3. சீயெழுச்சியினியல்**

“ தாக்கிய சீலெழுச்சிதன் குணங்கள்—கேட்கில்
சிரமுழுதுஞ் சூடு செறிந்திடும் வீக்கம்
உரமுறு காந்தலுடல் சிலிர்த்தல்—கரைய
வெடிக்குஞ் சீல் ”. . . . . . . . . . . .

**4. இரண வெழுச்சிப் பண்பு**

‘‘ . . . . . . . .மற்ற விரண வெழுச்சி
இடிக்கும் பரிதாக மேங்கல்—மிடைப்படவே
பொட்டிக் குருதி பொசிந்து வரும்.”

**5. சுரவெழுச்சிக் குணம்**

‘‘ சுரத்தி லெழுச்சியுறு தோட மது கேள்
பெருத்தவிடி காந்தல் பிரமை—வருத்தும்
நடுக்கல் விறைவிறைத்த லுவறட்சி தாகம்
தடுத்த பிடர்க் குத்து விறைப்புத்—தொடுத்த
அலகு கடுத்துளையு மானதிமிர் கொள்ளும்
சலமோடு நீரிரத்தஞ் சாடும்—உலகறிய
காதுகேளாது கருதீ ரசாத்தியமாய்.”

**6. முக்குற்ற வெழுச்சியின் குறி குணங்கள்**

. . . . . . . . . . . . .சன்னியினுல்
முட்டு மெழுச்சிக் குணமுரைக்கில்—மட்டில்
இடிவலிகுத் தோடிரைச்ச லேற்றலகு நெட்டி
கொடுவீக்க நெட்டுயிர்ப்புக் கொள்ளும்—கடுகிய
மண்டைக் கனப்புவிக்கல் வாந்தி சுரமிருமல்
தொண்டை சிதறல் தொடர்ந்துதலை—கொண்டதோ
வாயு செறுத்திரைதல் வார்த்தைகே ளாதிருத்தல்
தீதுற் றசாத்தியமாம்.”

**மருத்துவம்—பொது.**—பதினுறு பங்கு எண்ணெயில் ஒரு பங்கு எருக்கிலைக் கற்கத்தைக் கலந்து, அதில் தோல் நீக்கிய சுக்கு, பூண்டுத்திரி, வசம்பு, கஞ்சாவிதை, கோட்டம், இந்துப்பு, திப்பிலி இவற்றை வகைக்கு எருக்கிலைக் கற்கத்திற்கு 1/7 பங்காகச் சேர்த்துக் காய்ச்சிக் காதில் துளி அளவில் விடவும்.

**வேறு.**—பதினுறு பங்கு எண்ணெயில் ஒரு பங்கு பேய்மிரட்டி இலையை யரைத்துக் கலந்து காய்ச்சிப் பயன்படுத்தலாம்.

**பிற மருந்துகள்,**

1. காதில் வலியுள்ளபோது பூண்டை நசுக்கி ஒரு துளி சாற்றை விடலாம் அல்லது ஒரு திரிபூண்டைக் காதில் வைத்தடைக்கலாம்.

2. மருள்பட்டையை வெதுப்பிப் பிழிந்த சாற்றைத் துளிக்கணக்காகக் காதில் விடலாம்.

3. திருநீற்றுப் பச்சையைத் தனியாக வேனும் அல்லது சிறு உப்புக் கல்லிட்டுக் கசக்கிய சாற்றையேனுங் காதில் விடலாம். இவ்வண்டவே, துளசியையும் கலியாண முருக்கன் தளிரையுங் கசக்கி விடலாம்.

4. பனை மரத்தில் முளைக்கும் ஒரு விதப்புல்லுருவி, இதற்குப் பனைக்கற்றுழை என்றும் பெயர். காதிலிரைச்சலுடன் கூடிய வலிக்கு வழங்கலாம்.

5. எள்ளிலையை யரைத்து வீக்கத்துடன் உண்டாகின்ற வலிக்குப் பற்றிடலாம்.

6. முடக்கற்றான் இலைச் சாற்றைக் காதில் வேதனையுடன் சீழ் இருப்பின் விடலாம்.

7. நாய்வேளைச் சாற்றைக் காதில் அதிகமாகச் சீழிருக்கும் போது விடலாம். ஆனால், இதைத் தனியாகவிடின் காதில் எரிச்சல் உண்டாகும். ஆகையால், இதில் சாறெடுக்கும் போதே தண்ணீர் கலந்தெடுக்க வேண்டும்.

8. எருக்கிலைப் பழுப்பில் நெய் தடவி அனலில வாட்டித் தாபிதமில்லா மற்படி வலிக்கும் நோய்க்கும் தாபிதமிருந்தாலதற்கும் இச் சாற்றை விடக் குணப்படுத்தும்.

9. விஷ மூங்கிலிலைச் சாற்றுடன் 1/20 உப்புச் சேர்த்துக் காதில் விட வருத்தம் நீங்கும்.

10. காதிரைச்சலுடன் வருத்தமிருப்பின் முசுமுசுக்கையின் சாறும் பூண்டுச்சாறும் சேர்த்துக் காதில் விடவும்.

11. சவுரிப்பழத்தைலம் காதில் விரணமிருப்பின் பாவிக்கலாம்.

12. சுக்குத்தைலம், அர்க்கக்ஷீரத் தைலம், பச்சையெண்ணெய் இவற்றுள் ஒன்றைக் காதில் விடலாம்.

13. காதிலிருக்கும் அழுக்கு நீங்கிய பின், 20 பங்கு படிகாரம், 1 பங்கு மஞ்சள் சேர்த்துப் பொடித்த நுண்துகளைக் காதில் தூவலாம்.

14. ஆயில் பட்டைத் தைலம், இது காதிலிரைச்சலிருக்கும்போது, தலைக்குத் தேய்த்து முழுகுவதற்கும், நசியஞ் செய்வதற்கும் உதவும்.

15. காது மந்தமாயிருப்பின், மிளகுத் தைலத்தைத் தலை முழுகுவதற்ககப் பயன்படுத்தலாம்.

16. நாயுருவியிலை, சங்கிலை, தூதுவளையிலை, வேலிப் பருத்தியிலை இவைகளையரைத்துக் காலையில் தலையில் அப்பி மாலையில் நீராட்டவும். இவ்வாறு பத்து நாட்கள் செய்யக் காது மந்தம் குணமாகுமெனக் கூறப் பட்டிருக்கின்றது.

17. காதிலிரைச்சலும் மந்தமும் வேதனையுமிருப்பின், நெய் படி ½, எண்ணெய் படி 1, அபின் கழஞ்சு 1, ரசம் கழஞ்சு 1, கந்தி கழஞ்சு 1 ஆகியவற்றுள் முறைப்படி அரைக்க வேண்டியவைகளை அரைத்துக் கலந்து காய்ச்சிக் காதில் துளிக்கவும்.

18. தேரா தயிலவர்க்கத்தில் கூறியிருக்கும் அயசிருங்கத் தைலம், காதி லுண்டாகும் எல்லாவித நோய்களையும் போக்குமெனக் கூறுகின்றது.

**காது கரப்பான்**

இஃது எண்வகைப்படும். அவை :—1. நீர்க்கரப்பான், 2. கொள்ளிக் கரப்பான், 3. அக்கிக்கரப்பான், 4. பொக்கிக்கரப்பான், 5. வெடி கரப்பான், 6. அழுகண்ணிக் கரப்பான, 7. தேமற்கரபபான், 8. சொறி கரப்பான், என்பன.

**நீர்க்கரப்பான், கொள்ளிக்கரப்பான், அக்கிக்கரப்பான் இவற்றின் பண்புகள்.—**

"எட்டுக் கரப்பனென மட்டுக் கடக்கமது
விட்டக் குணங்களிவை யறிநீயே
துட்டக் கரப்பனிது வப்பித் தெழுந்தவகை
தொக்கக் குமிட்டியது சொறிவாமே
விட்டுத் தெழுந்தகனல் கட்டிக் கனிந்தசொறி
வெப்புற் றழுங்குமிஃ தறிவாயே
சட்டச் செவிக்குளெழு மக்கிக் கரப்பனது
சற்றுப் பொருக்கையழல் தருமாமே."

**பொக்கிக்கரப்பான், வெடிகரப்பான், அழுகண்ணிக்கரப்பான், தேமற்கரப் பான், சொறிக்கரப்பானிவற்றினியல் :—**

"பொக்கிக் கரப்பனது மிக்குற் றெழுந்த குறி
பொக்கிச் செழுங்குருதி புலவாகுமே
தொக்கித் தெழுந்தகனி வெப்பித் தெழுந்தகனல்
சுட்டுப் புகைந்ததென வெரிவாகுமே
புக்கிக் கடிந்தவெடி முட்டிச் சுரந்தசொறி
பொத்துக் கரிந்துசெலு முதிர்வாகுமே
தக்கித் தெழுந்திதலை யப்பிப் படர்ந்தசொறி
தட்டிப் பரந்ததழு தணேதேமலே"

"பம்புகர் ணிகத்திலே முன்பெழுங் கரப்பனீர்
பண்புகொண் டிடச்சொறி வதுவாகியே
வெம்பிடுஞ் சுரக்குமே வந்துபின் வலிக்குமே
விண்டுதான் வெறிக்குமே வெடிநாறுமே."

**மருத்துவம்.**—வேப்பமுத்து நெய்படி ½, எள நெய் படி ½, இந்துப்பு, கந்தி, மால்தேவி, வெங்காரம், இலிங்கம், புங்கம் வித்து, எருக்கம் வித்து, இரசம், குக்கில், சண்பக மொக்கு, பெருங்காயம், நாகணம், சாம்பிராணி வகைக்கு வராகனெடை ½, இவைகளை வாழைக்கிழங்குச் சாற்றிலரைத்து மேற்படி எண்ணெயிற் கலந்து காய்ச்சி வடித்து இதை மேற் பூச்சாகப் பூசத் தீரும்.

## செவியிற் குட்டம் 8.

**அவை.**—சருமகுட்டம், வெணகுட்டம், கருங்குட்டம், புள்ளிக்குட்டம், செங்குட்டம், கடுப்புக்குட்டம், விடக்குட்டம், கடிக்குட்டம், என்பனவாம்.

இவற்றுள் சருமம், புள்ளி, கடுப்பு, செம்மை ஆகிய நான்கும் தீராவாம். மற்றைய நான்கும் தீர்வனவாம்.

**மருத்துவம்.**—காட்டுககாளான், அழிஞ்சில்வேர், சிவனார்வேம்பு, ஆகாய கருடன, சிறு ஊமத்தை, கருவேல், வெள்வேல், வெள்ளறுகு, எட்டி, நெய்க்கொட்டை, இலைக்கள்ளி வேர், கரிப்பான வேர், செங் கொட்டைக்கரந்தை வேர், வெண்கொடடைக்கரந்தைவேர், குாட்டை விதை, குன்றி விதை, மஞ்சாடி விதை, கட்டுக கொடி, ஈயக் கொடி, வட்டத்துத்தி, கரு நொச்சி, வெண்ணொச்சி, கழற்சி வேர், புங்கம் வேர், சேங்கொட்டை, வெட்டி வேர், குருவேர், சதகுப்பை, சிற்றரத்தை, பேரரத்தை, இலிங்கம், தாரம், இவையிற்றை ஓரளவாக நிறுத்துக் குழித்தைலம் இறக்கி மேலுக்குப் பூசத் தீரும்.

## செவிப் பரு 8.

**அவை.**—குன்றிப்பரு, அனற்பரு, பொக்கிப்பரு, விரணப்பரு, குவைப்பரு, நீர்ப்பரு, குருதிப்பரு, விடப்பரு என்பனவாம். இவற்றுள் நீர்ப்பரு, விரணப்பரு, அனற்பரு, குவைப்பரு, நான்கும் தீராவாம். மற்றவை தீரும்.

**மருத்துவம்.**—கோவை, பசலை, பொன முசுட்டை, ஊமத்தை, நெற் பொரி, எட்பொரி, நீர்ப்பூலா, சித்திரப்பாலை, சீந்தில், நெல்லிவற்றல், நீர் வள்ளி, நிலப்பனைக் கிழங்கு, தாளிக்கீரை, சிவப்புப்பசளை, சிற்றுமணக்கு வித்து, புளியம் விதைத்தோல், கருங்காலி இவற்றைப் பசும்பால் விட் டரைத்துப் பசு வெண்ணெய் கூட்டியரைத்து வழித்துப் பூசப் பருவிலுண் டாம் வீக்கந் தீரும். இப்பொருள்களையே சிற்றுமணக் கெண்ணெயிலிட்டுக் காய்ச்சி மேற் பூசப் பரு தீரும்.

## செவிப் பிளவை 5.

**அவை.**—(1) நீர்ப் பிளவை, (2) செந்நீர்ப் பிளவை, (3) குனறிப் பிளவை, (4) வளிப் பிளவை, (5) கழலைப் பிளவை என்பனவாம்.

**(1) நீர்ப் பிளவை.**—இது காதினுட் புறத்தே யுண்டாகும். இதி னின்றும் துர் நீர் கசியும்.

(2) **செந்நீர்ப் பிளவை.**—முன் சொன்னது போலவே ஒரு பிளவை தோன்றி, அதனின்றும் எழுநாள் வரை குருதி கலந்த நீர் பெருகும். அப்போது காது மந்தமாயிருக்கும்.

(3) **குன்றிப் பிளவை.**—இப்பிளவையானது குன்றிமணி போல் செந் நிறமாயிருக்கும். இதினின்றும் மாமிச நாற்றம் வீசும்.

(4) **வளிப் பிளவை.**—இப்பிளவையில் உச்சியில் நோதலும், காது இரைச்சலும் உண்டாகும்.

(5) **கழலைப் பிளவை.**—இஃதொரு கழலைபோற் காதிற்றோன்றும்.

**மருத்துவம் :**

1 **சுட்டிகை.**—இதற்கெனச் செய்யப்பட்ட புள்ளடி போன்ற ஒரு கருவி யால் காதின் நரம்பைச் சுட்டுப் பிறகு, அப்புண்ணில் மயில் துத்தமும் வெற்றிலைச் சாறும் சேர்த்தரைத்துப் பூசலாம். இவ்வாறு செய்வதால், காதினின்று துர்நீர் அவ்வழியாய் வெளிப்பட்ட பிறகு, பிளவையும் வற்றி விடற்பாலதாம்.

**காதில் சீழ், புழு முதலியவற்றிற்கு மருத்துவம்**

1. காந்தள் கிழங்கு, கரிசாலை, முக்கடு மூன்றையு மரைத்து ஒரு தூய துணித்துண்டில் முடிந்து ஒன்றல்ல திரண்டு துளி காதில் விடவும்.

2. **வேறு.**—இலைக்கள்ளியிலை, கோழியவரையிலை, குப்பைமேனியிலை இம் மூன்றையுந் துணியில் முடிந்து காதில் பிழியத் தகுவனவாம்.

3. **வேறு.**—எருக்கிலைப் பழுப்புச்சாறு, நொச்சியிலைச்சாறு, வேளைச்சாறு, இஞ்சிச்சாறு, உகாவேர்ப்பட்டைச்சாறு, பிரண்டைச் சாறு, வேப்பமுத்து நெய், எள் நெய் வகைக்குப் படி $\frac{1}{4}$, செங்கடுகு, கருங்கடுகு, வெண்கடுகு, ஏலம், ஒருதலைப் பூண்டு, கஞ்சா விதை, கருஞ்சீரகம் வகைக்கு கழஞ்சு 1, மேற்படி சாற்றிலரைத்துக் கரைத்துக் காய்ச்சி வடிக்கவும். இத்தைலத் தைக் காதில் விட, சீழ், புழு, இவைகள் நீங்கும்.

**மூக்கு நோய்**

மூக்கில் உண்டாகும் நோய்கள் 86. இவ்வாறு கூறியிருப்பினும், இப்போது நாம் அறியக் கூடியவை சிலவேயாம். அவை வருமாறு :—

(1) நீர்ப்பாய்ச்சல்.
(2) பீனிசம்.
(3) நாசிகா பீடம்.
(4) கரப்பான்.
(5) கழலை.
(6) பரு.
(7) பிளவை.

**மூக்கு நோய்ப் பொதுக் காரணங்கள்.**—பனியில் திரிவதாலும், குளிர்ந்த காற்றில் அடிபடுவதாலும், மிகுசீதள நீரில் குளிர்ப்பதாலும், தன் நாடல் லாத இடங்களில் உள்ள மலினநீரைப் பயன்படுத்துவதாலும், பதினெண்கு

வேகங்களைச் சார்ந்த கண்ணீர், உவாந்தி, இவற்றை யடக்குவதாலும், மிக உரத்துப் பேசுவதாலும், அளவுக்கு மிகுந்தாவது குறைந்தாவது தூக்கங் கொள்வதாலும் மூக்கில் நோயுண்டாகு மென்றறிதற் கிடனுகும்.

### 1. மூக்கு நீர்ப் பாய்ச்சலின் குணம்.

"கண்டமேன் முகங்கண் காது கரகரத் தூர்வ தேபோல்
துண்டமேற் றினவு பற்றிச் சொறிந்துதான் சலமும் வீழ்ந்து
மண்டையுங் கனத்து நொந்து வலிமிக வுளதே யாகில்
பண்டுசேர் மூக்கி னீரின் பாய்ச்சலென் றுரைக்க லாமே."

குறிப்பு.—மூக்கின் வெளிப்புறத்தில் நீர் ஓடிக்கொண்டிருப்பின் அதனை முன்னீர்ப்பாய்ச்சலெனவும், தொண்டையினுட் புறத்தே நீர் பெருகி வாயின் வழிவரின் பின் நீர்ப்பாய்ச்சலெனவுங் கூறுவர்.

### 2. பீனிசத்தின் பொதுப் பண்பு.

இது பதினெட்டு வகைப்படும் என நூல்களில் பல் வேறு இடங்களில் கூறப்பட்டிருப்பினும், நாம் இங்கு கூறுவன நான்கேயாகும். (1) நீர்ப் பீநசம், (2) குருதிப் பீநசம், (3) சீழ்ப் பீநசம், (4) சிராய்ப் பீநசம்.

"தலைமிக வலிக்கு நாசி சளிவிழு மொடுவுண் டாகும்
நலிவுறு தும்ம லுண்டா நாட்செலில் வரளு நாசி
மலைவுறத் திரண்டு வீழும் வாயுமே நாற்ற முண்டாம்
பெலமுற மூக்க டைக்கும் பீனிச மென்று தேரே."

"தலையுங் கனத்து வலிகொண்டு சளிபோ லுசாற் றிரண்டுவிழும்
அலையு மொடுப்போ லொருகாலு மறுதிப் படவே மாறாது
நிலையுங் கெடாது பரிகார நியதிப் படவே செய்துவரில்
தொலையுஞ் சொன்னேம் பீனிசமுஞ் சொல்லுங் கபால
[வரட்சியுமே."

"ஒடுக்கமா மைய நாடி யொருங்குடன் பக்க நின்றால்
நடுக்கமாம் பீனி சங்க ளுசிநீர்ப் பாய்ச்ச லுண்டாம்
பிடித்திடு மண்டை சூலை பெருகிடுந் தலைக்க னப்புத்
தடுத்திடு நன்று நெய்யைத் தலையிலே தப்பத் தீரும்."

### 3. நாசிகா பீடம்—குறி குணம்.

"நன்றிது கனன பீட நாளிலே கதுப்ப டைத்துக்
குன்றிபோன் மூளை தன்னிற் குற்றமே பற்றி நின்று
கன்றியே நாசி யாலே கனக்கவே சீகள் வீழ்ந்து
பொன்றிடச் செய்யு மென்று புலவர்வா கட செய் தாரே."

"நாசியிற் றசைவ ளர்ந்து நலிவுற வடைக்கு நாசி
மாசுசேர் சீநீர் வீழு மண்டையுங கனத்து நொந்து
பேசரும் வலியுண்டாகும் பெருகுகண் கதுப்பு நோகும்
நாசிகா பீட மென்று நவின்றனர் கலைவல் லோரே."

**4. கரப்பான், கழலை, பரு, பிளவை**

ஆகிய இந் நான்கும் மற்ற இடங்களில் தோன்றும் கரப்பான் முதலிய வற்றின குறிகுணங்களையே பெற்றிருக்கும்.

**மருத்துவம்.**—மூக்கு நோய்கள் எல்லாவற்றிலும் பொதுவாகச் செய்யும முறைகள் எறக்குறையக் கூறப்படுவனவற்றுளடங்கும்.—

(1) நோயாளியை யமைதியாகவும், மிக்க காற்றோட்டமில்லாததுமான ஓரிடத்தில் இருக்கும்படி செய்யவேண்டும்.

(2) மூலிகை முதலிய மருந்தின் தொகுதி சேர்த்துக் காய்ச்சிய நீரினின்று வரும் ஆவியைப் பிடித்தல்.

(3) நசியம் செய்தல்.

(4) வெப்ப குணம் பொருந்திய உணவுகளை யூட்டி ஆதரித்தல்.

(5) தைலங்களைக் கொண்டு தலை முழுக வைத்தல்.

**குறிப்பு.**—மேற்கூறிய உபசாரங்களைப பிணியாளியின் உடலமைப்புக்கும் வன்மைக்கும் தக்கவாறு செய்யவேண்டும்.

**நீர்ப்பாய்ச்சலின் மருத்துவம்.**—நோயாளியைத் தூசு நிறைந்துள்ள காற்றைச் சுவாசிக்காதபடிக்கு வைத்திருத்தல் வேண்டும். வறட்சித் தன்மை பொருந்திய புகைகளை முகரச் செய்ய வேண்டும்.

**நாம் பொதுவாகப் பயன்படுத்தும் புகை.**

**சுக்குத்திரி.**—சுக்குத் தூள் பங்கு 100, கர்ப்பூரப் பொடி பங்கு 1. இவை கலந்த பொடியை முறைப்படி திரி செய்து, கொளுத்தி, அதினின் றெழும் புகையை முகரவேண்டும்.

**குறிப்பு.**—இது தலைவலியை விரைவில் குணப்படுத்தி விடும்.

**நீராவி பிடித்தல்.**—எலுமிச்சமிலையைச் சேர்த்து அவித்த நீரினின் றெழும் ஆவியைப் பிடித்தல். இதற்குத் துளசியிலையும், நொச்சியிலையும் பயன் படுத்தலாம்.

**நசியம்.**—தாய்ப்பால், ஆனெய் இவ்விரண்டையுங் கலந்து அதில் சாரணை வேர், இந்துப்பு, மிளகு, சீந்தில் ஆகியவற்றை முடிந்துபோட்டு சற்றூறியபின் மூக்கில் பிழியவும்.

இநநோயிலுண்டாந் தலை நோய், தலைப் பளுவு குறைய நீர்க்கோவை மாத்திரையைத் தாய்ப்பால் அல்லது வெந்நீரிலிழைத்து நெற்றியில் பற்றிடலாம்.

**தைல முழுக்கு.**—சிறுசெம்பைத் தைலம், மிளகுத் தைலம் இவற்றி லொன்றால் முழுகத் தீரும். இதனைச் செய்யும் முறையைத் தேரர் தைலவுர்க்கச் சுருக்கத்தில் காண்க.

## பீநச மருத்துவம்

**1. புகை.**—இலிங்கம், தாளகம் இவ்விரண்டையும் ஊமத்தையிலைச் சாற்றிலும், குப்பைமேனியிலைச் சாற்றிலும் முறையே யரைத்து ஒரு சுத்த மான துணித்துண்டில் தடவித் திரிசெய்து கொளுத்த எழும் புகையை மூக்கின் வழியாக உள்ளிழுத்தல் வேண்டும். இது பீநசத்திற்கே யன்றி நீர்ப்பாய்ச்சலுக்கும் வழங்கலாம். இது போன்ற வேறு திரிகளுண்டு. அவைகளிற் கூறப்படும் முக்கிய மருந்துப் பொருள்களாவன : இரசம், கந்தகம், தாளகம், இலிங்கம், வெளளை, அபின், மஞ்சள் ஆம்.

**2. நசியம்.**—ஒரு தைலம்—வெற்றிலைச் சாறு ஆழாக்கு 1, ஆதொண் டைச் சாறு உழக்கு 1, சிற்றாமணக்கு நெய் ஆழாக்கு 1 இவற்றுடன் சுக்கு, திப்பிலி சேர்த்துக் காய்ச்சிப் பயன்படுத்தலாம்.

**பீனிசத் தைலம் வேறு.**—எள்நெய் பலம் 10, சதாப்புப்புழு 2, ஓமம் வராகனெடை 2, இதை ஒரு கண்ணாடிக் குப்பிக்குள் அடைத்து இரண்டு மாதம் வெயிலில் வைத்துப் புழுவை நீக்கிப் பயன்படுத்தவும்.

**வேறு.**—நாசிகாரோக நாசத்தைலம் (தேரர் தைலவர்க்கச் சுருக்கம்) இது நசியத்திற்கும் தலை முழுகுவதற்கும் பயன்படும்.

**வளி, அழல், ஐயம், நீர், குருதி, சீழ், சிராய் மூக்கு நோய்கட்குத் தைலம்.**—கையாந்தகரை, ஆதொண்டை, சவுரிப்பழம், வெறறிலை, நெல்லிக் காய், எலுமிச்சம்பழம், நாரத்தம்பழம், முசுமுசுக்கை, முடக்கற்றான் இவைகளின் சாறு வகைக்குப் படி ¼, எள்நெய் படி 1 ஒன்றாகக் கலந்து அதில் மிளகு பலம் ¼, மதுரம், சந்தடி, சண்பகப்பூ, சீரகம், விடங்கம், உருளரிசி, தோகை விளங்கும் அழற்காய், கததூரி மஞ்சள், ஏலம், கிராம்பு தாளிசபத்திரி, கருவாப்பட்டை வகைக்கு வராகனெடை 5, கோரோசனை வராகனெடை 3, இவற்றைப் பொடித்துப் போட்டுக் காய்ச்சிப் பதமாய் வடித்து மூன்று நாட் கொருமுறை மூழ்குவதன்றியும், மிளகைக் கொட் டைப்பாக்களவு வெற்றிலைச்சாறு விட்டரைதது வெள்ளைச் சீலையிற்றடவிப் பிறகு சவுரிப்பழச் சாற்றில் எட்டு முறை நனைத்து நிழலிலுலர்த்தித் திரி செய்து மூக்கிற் புகை பிடித்தும் வரத் தீரும்.

**வேறு.**—குப்பைமேனி, ஆடுதீண்டாப்பாளை, அழிஞ்சில் வேர், முள்ளிக் கீரை இவைகளின் சாறு வகைக்குப் படி ½, எள்நெய் படி 2 ஆகிய இவற் றையொன்றாய்க் கலந்து மெழுகு பதமாகக் காய்ச்சி முழுகிவரத் தீரும்.

## மூலப் பீநசம், கண்ட பீநசம்—மருத்துவம்

நாசியில் கோழைச் சதைபோலும் அதில் சூடு போலும் (கொண்டை) வளர்கின்ற மூலப் பீநசத்திற்கும், நாசியில் சுண்டைக்காய் போலச் சதை வளர்ந்து, தலைநீர் நெஞ்சிலிறங்கிக் கபங் கட்டுகிற கண்ட பீநசத்திற்கும்— ஆயில்பட்டை, மலாக்கா சந்தனம் வகைக்கு வராகனெடை 2, மட்டுப்பால், சாம்பிராணி வகைக்கு வராகனெடை 1½, மிருதாரசிங்கி, இலிங்கம், அரிதாரம் வகைக்கு வராகனெடை 1, இலுப்பைப் பிண்ணாக்கு வராகனெடை ¼

இவற்றை ஊமத்தஞ் சாற்றாலரைத்து, எருக்கம் பாலும் சதுரக் கள்ளிப் பாலும் ஒரு துணியிலூட்டி யுலர்த்திப் பிறகு மேற்படி மருந்தை அதில் பூசிக் காய வைத்துச் சிறிது கத்தரித்து, சுங்கானில் வைத்துக் கொளுத்தி வரும் புகையை நாசியிலேற்ற மூலப் பீநசம், கண்ட பீநசம், சிராய்ப் பீநசம், மண்டைச்சூலை, வலி, இரணம் முதலானவை தீரும்.

### நாசிகா பீடத்திற்குப் பரிகாரம்.

**நசியம்.**—வாழை இலையைச் சுட்ட சாம்பல், வாழைப்பழத்தோல் எரித்த சாம்பல், சுரைக்குடுக்கைப்பொடி, கற்சுண்ணாம்பு இவற்றை நீரில் கலந்து அந்நீரை நசியமாக உபயோகிக்க வேண்டும்.

**வேறு.**—வெள்ளைப்பாடாணம் பங்கு 1, பூங்காவி பங்கு 2, இரண்டை யும் பசு நெய்யில் சேர்த்து நசியமாக வழங்கலாம்.

**பீநச கிருதம்.**—இதனைத் தேரர் தைலவர்க்கத்தில் காண்க. இதனால் பீநசம், பீடம் ஆகிய நோய்களும் விலகும் என்பதாம்.

### வாய்நோய்.

**உதட்டின் நோய்கள்.**—இவை வளி, அழல், ஐயம், முக்குற்றம், சதை, நீரு, மினுமினுப்பு, குருதி, குட்டம், வெடிப்பு, அடிபட்ட வீக்கம் என வகுக்கப்பட்டுள்ளன.

**வளி உதட்டின் பண்பு.**—இதில் வறட்சியுடன் சிறு பிளப்புகள் ஏற்படும். அதனால் நோயுண்டாகும்.

**அழல் உதட்டின் குணம்.**—இதில் உதடு மஞ்சள் நிறத்துடன் செம்மை கலந்திருக்கும். இதில் குருக்கள் தோன்றும். நாளுக்கு நாள் வேறுபட்டு, தோன்றிக்கொண்டே யிருக்கும்.

**ஐய உதட்டினியல்.**—இதிற்றோன்றும் குருக்கள் சற்று வெளுத்திருக் கும். உதடு வீங்கும். புலால் நாற்றத்துடன் வெண்ணிறத்தையுடைய நீர் கசியும்.

**முக்குற்ற உதட்டின் பண்பு.**—இந்நோயில் உதடு சில சமயம் வீங்கியும், சில சமயம் வறறியுமிருக்கும். கொப்புளங்கள் உருவ வேற்றுமையுடைய தாயிருக்கும். இதினின்று கசியும் நீரானது மிக்க நாற்றத்துடன் விரை வில் ஆறக்கூடாத தன்மையுடையதாயிருக்கும். ஈதன்றி உதட்டில் சிறு சிறு பிளபபுகள காணப்படும்.

**சதை யுதட்டுக்குணம்.**—இந்நோயில் உதடுதடித்து முற்றும் புண்ணாய் விடும். அந்நிலையில் அது சதையை நிகர்க்கும்.

**நீருதட்டின் பண்பு.**—நீர்த்துளிபோன்ற சிறு முளைகள் உதட்டின் மீது காணப்படும். சில வேளையில் அவைகளினின்றும் ஒருவித நீர் கசியும்.

**மினுமினுப்பு உதட்டினியல்.**—உதடு மிகவும் வீங்கி மினுமினுத்து இருக்கும். அதைக் கையால் சுரண்டுவதற்குப் பிரியமுண்டாகும்.

**குருதியுதட்டின் குணம்.**—இப்பிணியில் உதடு வீங்கிச் சிவந்திருக்கும்

**குட்ட உதட்டின் பண்பு.**—உதடு தடித்து இயற்கை நிற அமைப்பு இன்றி மாறுபட்ட வண்ணங்களைப் பெற்றிருக்கும். சிறு முளைகளும் பிளப்பும் இருப்பதுடன் செந்நீர் பெருகும்.

**வெடிப்பு உதட்டினியல்.**—இந்நோயில் உதடு நிரம்ப வெடித்திருக்கும்.

**உதட்டில் அடிபட்ட வீக்கத்தின் குணம்.**—இந் நிலையில் உதடு வீக்கத்துடன் சிவந்தும் வலியுடனுமிருக்கும்.

*மருத்துவ முறை.*

**ஈருள்ளியெண்ணெய்.**—வெங்காயச்சாறு, நொச்சிச்சாறு, கற்பூரவள்ளிச் சாறு, எள்நெய் இவைகளுடன் வேப்பம் பட்டை, சீரகம், கருஞ்சீரகம், குக்கில், கீழ்க்காய் நெல்லி இவைகளைக் கற்கமாகச் சேர்த்துத் தைலங்காய்ச்சிப் பயன் படுத்த, சதை, நீர் ஆகிய இரண்டு நோய்களையுங் குணப்படுத்தும்.

**களிம்பு.**—துத்தம், குக்கில், இரசம், தாளகம் இவற்றை வெண்ணெயில் சேர்த்தரைத்துச் சுத்தித்துப் பின் உதட்டில் பூசவும்.

**வேறு.**—உதட்டுப் புண்ணுக்குத் துத்தம் 2 பங்கு, வேப்பம் பிசின் 1 பங்கு இரண்டையும் பழச்சாற்றாலரைத்து, ஆமணக்கு நெய்யில் கலந்து உதட்டில் பூச்சாகப் பூசலாம்.

**உதட்டின் எரிச்சலுக்கு.**—வெண்ணெயையேனும், குக்கில் வெண்ணெயையேனும், பசலைக் கீரையை யரைத்து வெண்ணெயுடன் கலந்தேனும் பூச மேற்கூறிய எரிச்சல் தணியும்.

**குட்ட உதட்டின் தீர்வு.**—கொட்டை நீக்கிய 50 கடுக்காயையெடுத்து அதில் ஆழாக்குத் திரஞ் சோத்து அரைக்காலாகச் சிறுக்கிய குடி நீருடன் இருவேலி, சதகுப்பை, கோட்டம் இவைகளைச் சேர்த்துக் குழம்பு செய்து பூசலாம்.

## நாக்கு நோய்.

1. நாக்கரணை, 2. நாக்குப்புற்று, 3. நாக்குப் பிளவை, 4. நாக்குக் கிரந்தி, 5. நாக்குப் புண், 6. நாக்குச் சிலந்தி, 7. உள் நாக்கு முதலியன. இந் நோய்கள் ஆணகளுக்கு நாக்கின் வலப்புறத்திலும், பெண்களுக்கு இடப்புறத்திலும் தோன்றில் தீர்தலரிதாம்.

**நாக்கரணை, நாக்குப்புற்று, நாக்குப்பிளவை இவற்றின் பொதுக் குறி குணங்கள்.**—நாக்கின்கீழ் குறுநெற் சோறுபோல் வெளுத்த நிறத்தோடு குருக்கள் தோன்றும். இது தோனறிய பின் காதில் குத்தலேற்பட்டுத் தலை வலியுண்டாகும். வாயில் நீர் ஊறி வடியும். ஒக்காளம் உண்டாகும். பிடரி திமிர்க்கும். உடல் வியர்வை கொள்ளும். முக்குற்றங்களில் ஐயக்குற்றம் மிகுந்து காணும். ஐயம் மிகாமலும், வியர்வை ஒக்காளம் இல்லாமலுமிருக்குமாயின் நோய் விரைவில் ஆறுமென்றறிக.

ஐயத்தின் குறிகுணங்கள் மிகுதிப்பட்டுத்தோன்றுமாயின் நோய் தீரா; மிக்கநாள் செல்லும். நாக்கின் ஒரு புறத்தில் தடித்து, சுண்ணம்புபட்டு வெந்ததுபோலப் புண்ணாகிப் பிறகு, குமிழம் பழம் போலே உருண்டு புண்ணாகும். நாத்திமிர்த்து நாடி விறைக்கும். மிடறுவரளும். பேசின் நாத்தடுக்கும்.

**நாக்கரணை, புற்று, பிளவை, இரந்தி, புண் இவற்றிற்குச் சுட்டிகையும் பிற மருத்துவமும்.**—நாக்கு நோய் தோன்றினவுடனே நல்ல பொன்னினாற் செய்த* ஆழிச் சூட்டுக் கருவி, ‡ பொட்டுச் சூட்டுக் கருவி எனனும் இரண்டு கருவிகளினால் சுட்டிகை செய்யவேண்டும்.

**செய்முறை.**—முதலில் நோய் தோன்றிய இடத்தில் பொட்டுச் சூட்டுக் கருவியினால் சுட்டு வெதுப்பி முளைகளைக் கருக்கிய பின், ஆழிச் சூட்டுக் கருவியினால் சூழ்ந்து சுடுக; கீழ் நாக்கிற்றோன்றும் முளைகளையும் அவ்வாறே சுட்டுக் கருக்கிய பின் பஞ்சாக்கினித் தைலத்தைச் சீலையிற் றோய்த்து மேலே போடவும். இப்படி ஐந்து நாள் செய்தபின், வத்திராஞ்சனப்புகை, பதினொரு திரிபுகைக்கவும். பிறகு, அட்டசூத பற்பம் பணவெடை வீதம் இருவேளை தேனில் உண்டு முடிந்தபின், பதினைந்து நாள் காலை மாலை நானகு நாழிகை, குளிர்ந்த நீரில் மூழ்கவும்.

**வாய்ப் புற்றுக்குச் சுட்டிகையும் உள் மருந்தும்.**—முளைகளை முற்கூறிய வாறு கருக்கிய பின், காதின் கீழ் இரண்டங்குலம் விட்டும் நெற்றியின் மேலும், தலை யுச்சியிலும் பொட்டுச் சூடும், பிடரிச் சுழியில் குறுக்குச் சூடும் சுட்டுப் புண்ணான பின், நாராயணத்தைலம் எட்டு நாளைக்கு அப் புண்ணின் மீது போடவேண்டும். மேற்படி தைலத்தைக் காசெடை முப்பது நாள் இரு வேளையுண்டு, பிறகு இரண்டு கிழமைக்குச் சாராங்கப் பூகை யூட்டவும். பின் வச்சிரகாயக் குளிகை யாகிலும், அட்ட சூத செந்தூரமாகிலும் உண்ணப் புழுக்கள் வெளிப்படும்.

பிறகு, பெரு மருந்து வேரும் கல்லுப்பும் ஓரளவு சேர்த்து எருக்கம் பாலாலரைத்துப் பல்லடியில் தேய்த்து, பனை வேர், தென்னைவேர், நாயுருவி வேர், ஓரெடை கொண்டடித்து நான்கு நாழி நீர்விட்டு ஒரு நாழியாக வற்ற வைத்து வாய் கொப்புளிக்கவும்.

**உணவு.**—உப்பு, புளி, கிரந்திப்பண்டம் நீக்கிப் பால், நெய் சேர்த் துண்ணவும்.

**குறிப்பு.**—மேற்படி புகையினால் வாய் வேக்காடடையின், கோவையிலை, தென்னங்குருமபை, தாளிக்கீரை மூன்றையும் ஓரளவாக அரைத்து ஆவெண்ணெயில் கலந்து பல்லடியிலும், நாக்கிலும் பூசி எருக்கு வேரையும், அமுக் கிராவேரையும் குடி நீர் செய்து கொப்புளிக்க வீக்கம், புழு முதலிய துன்பங்கள் நீங்கும்.

* ஆழிச் சூட்டுக் கருவியென்பது வட்டமாக மோதிரம் போன்ற இடைவெளியுள்ள கருவி.

‡ பொட்டுச் சூட்டுக் கருவியாவது வட்டமாகப் பணம் போன்ற இடைவெளியில்லாத ஒன்று.

**நாக்குச் சிலந்தி, உண்ணாக்கு முதலியவற்றிற்கு மருத்துவம்.**—நாக்கில், நோய் தோன்றிய விடத்தில் பொற்கம்பியினால் சுட்டிகை செய்து, கண்டத்தின இரு புறத்தும் பொடடுச சூடடுக கருவியினாற் சுட்டிகை செயது, பிறகு, பொரிகாரம், பெருங்காயம், துருசு, இந்துப்பு, நவாச்சாரம், துத்தம் இவற்றை ஓரளவு தூககிப பழச்சாற்றாலரைத்து எருககம்பாலூட்டி யுலர்த்திய சீலையிற்றடவித் திரியாகச் செயது தொண்டை யளவுக்கும் ஏற்றி, ஒரு நாழிகை கழித்தபின் திரியை நீக்கி, வெந்நீரை வாய் நிறையக்கொண்டு அலசிக் கொப்புளிக்கவும்.

இங்ஙனம், ஐந்து நாளும் ஒவ்வொரு வேளை திரியேற்றி, கொப்புளித்து வர, சிலந்தி, உள்நாக்கு முதலியன கரைந்து புண்ணாகும். பிறகு, 10 நாள் காலை மாலை வத்திராஞ்சனப புகை யூட்டிவர நாக்கிற் புண்ணும், கண்ட நோய்கள் யாவும் தீரும்.

**வத்திராஞ்சனப் புகை செய்முறை.**—வெள்ளீயம் 1 பலம் நெருப்பிலிட்டு உருககி, 2 கழஞ்சு இரசததை அதனுடன் தொந்தித்து, கல்வத்திட்டு, துருசு, துத்தம், கந்தி, சிலை, மால்தாரம், வெண்குங்கிலியம், கடகரோகணி வகைக்கு 2 கழஞ்சு, இலிஙகம் 3 கழஞ்சு இவைகளை யெல்லாம் தனித்தனியாக நன்றாகப் பொடித்து, வங்கத்தோடு சேர்த்து நன்றாயரைத்து, எருக்கம் பாலூட்டி யுலர்ததிய துணியில் அரைத்த பொடியை 13 பங்கு செய்து, 13 திரி செய்யவும். இத் திரியைக் கொளுத்தி வாயினாற் புகையையிழுதது மூக்கினால் வெளிவிட்டால், நாசிகா பீடம், மூக்குச் சூலை, நாக்கிலுண்டாம் சிலந்தி, உணணாக்கு வளர்ச்சி, மண்டைச் சூலை, மூலம், பிளவை, பவுத்திரம் ஆகியவை தீரும்.

**அட்டசூத பற்பம் செய்முறை.**—இரசம், கந்தி, வகைக்கு 6 கழஞ்சு, கல் வத்திட்டுக் கலந்தரைத்துப பிறகு முருக்கிலைச்சாறு, கையாந்தகரைச் சாறு, ஆடாதோடைச சாறு, கற்றாழைப்பால், கடுக்காய்க் குடிநீர் முறையே ஒவ்வொரு சாற்றிலும் மும் மூன்று நாள அரைக்க வேண்டும். அரைத்து வில்லை தட்டி மூனறு நாள் காயவைத்து, குஞ்சு பொரித்த கோழிமுட்டையோட்டைத் தூய்மை செய்து, வில்லைக்கு 3 பஙகு இருக்கும்படி யெடுத்துக் கொள்ளவும். அந்தச் சிற்றண்டத்தைப் பொடித்துப் பாதியையொரு சட்டியிற்கொட்டி அதன் மீது வில்லையை வைத்து மிகுதியுள்ள பொடியை மேலே கொட்டி, மேற்சட்டி மூடி, சீலை செய்து அடுபபேற்றி 8 சாமம் காடாக்கினியாக எரிக்கவும். சீலையை நீக்கிப் பார்க்க மருந்து நீற்றிருக்கும். பொடித்துக் கொள்ளவும்

**துணைமருந்து.**—மிளகு, சுக்கு, காயம், ஓமம், வெங்காரம் இவற்றின் பொடியுடன் சேர்த்துண்ணவும்.

**நாக்குச்சிலந்திக்கு.**—செவ்விளநீர் மட்டைச்சாறு படி ½, விட்டுணுக்கிரந்திச்சாறு படி ½, சுடுவான், கருஞ்சீரகம், அமுக்கரா வகைக்குக் கழஞ்சு ½ கூட்டிக் காய்ச்சி வடி கட்டி 7 நாள் உட்கொண்டு வாய் கொப்பளித்து வரவும்.

**உள்நாக்கு வளர்ச்சிக்கு மருத்துவம்.**

முடி தும்பையிலையும் பூண்டையுமரைத்து உச்சியிலும் பிடரியிலும் தேய்த்து மூன்றல்லது நான்கு மயிரை உச்சியிலிழுக்கவும். இப்படி 3 நாள் செய்யவும். செய்த பின் அவ்விடத்தில் நெய் பூசவும்.

மேற்கூறிய மருத்துவ முறைக்குத் தீராவிடின் கருவி கொண்டு வெட்டி விடவும்.

**வேறு.**—ஆலம் விழுது, கொடிவேலி வேர்ப்பட்டை, வேளை வேர், நாயுருவி வேர், இவற்றுடன் ஆமணக்கு ஓட்டுப் பொடியையும் சேர்த்து அரைத்துத் தடவி வரலாம்.

**வேறு.**—முட்சங்கன் இலையையும் சுண்ணும்பையும் சேர்த்தரைத்துப் பூசவும்.

**குறிப்பு.**—இதைப் பூசி வரும்போது புழுங்கலரிசி மாவுடன், சங்கிலையைச் சேர்த்து உண்டாக்கிய உரொட்டியை யூட்டி வரவேண்டும்.

**மேற்பூச்சுத் தைலம்.**—சண்பகப்பூ, இராம்பு, சீரகம், கோட்டம், மதுரம், ஓமம், மாதுளம் பிஞ்சு இவற்றை நெய்யில் சேர்த்துக் காய்ச்சிப் பூசி வரவும்.

**பல் நோய்கள்.**

1. பற்கூச்சம், 2. பற்குத்தல், 3. பல்லாட்டம், 4. பல்சாய்தல், 5. குட்டிப் பல், 6. பல்சிராய். 7. பல் உதிரல், 8. பல்கருத்தல், 9. பல் பிளத்தல், 10. பற்புழு.

**பல்லடி நோய்கள்**

1. பல் ஊன் மெலிவு, 2. பல்லடிக்கரைவு, 3. பல்லடி வீக்கம், 4. பல்லடிக் கொதிப்பு, 5. பல்லடிக் கட்டி, 6. பல்லடித்துளை, 7. பல்லடி ஊன வளர்சசி, 8. பல்லடியுள்ளூன் குறைதல், 9. பல்லடி கருத்தல், 10. பல்லடி மஞ்சளாதல், 11. பல்லடி வெளுத்தல், 12. பல்லடி பலநிற மடைதல், 13. பல்லடிக் காயம்.

**பற்புழுவுக்கு மருத்துவம்.**—ஓமத்தீநீர் கொப்புளிக்கப் பயன்படும். அர்க்கக்ஷார நாளிகா சூரணம் (எருக்கனுப்பு தேங்காயோட்டுக்கரி) பல் தேய்க்க உதவும், கல்நார் பற்பம், தசனப் பொடி, உளுத்தமா பல் தேய்க்கலாம்.

**பல் வீங்குதற்கும் துவாரம் விழுதற்கும்.**—கண்டங்கத்தரி வித்துப்புகை, இலவங்கப்பட்டைத் தைலம், மருக்காரைக் குடிநீர் இவைகளைக் கொண்டு தீர்த்துக்கொள்ளலாம்.

**பற்கறறு, பற் கொதிப்பு இவற்றிற்கு மருந்து.**—இருவேலி, விலாமிச்சு, கீழாநெல்லி, எருக்கு, உத்தாமணி, நத்தைச் சூரி, சிவன் வேம்பு, குறுந்தொட்டி, பேராமுட்டி, சிறுபீளை, வேல், கோட்டம், பூண்டு, சந்தனம் சண்பக மொட்டு, கருஞ்சீரகம், திப்பிலி, சுக்கு, தேவதாரு இவைகளைக் குழிப்புட நெய்யிறக்கிப் பயன்படுத்திக் கொள்ளவும்.

**பல்லாட்டத்திற்கு மாற்று.**—சுக்கு, மிளகு, மஞ்சள், கடுக்காய், இந்துப்பு, வெளிச்சப பிசின், திப்பிலி, வெங்காரம், முதியாா கூந்தல், வேலிப் பருத்தி வேர், பெருமருந்து வேர், கழற்சிப் பருப்பு ஓாளவாகத் தூக்கிப பொடித்து தேனிலிழைத்துப் பல்லாட்டத்திற்கும், பற்கட்டிக்கும் பூசி வெந் நீரில் வாய கொபபுளித்து வரலாம்.

**வேறு.**—தூதுளை வேரால் பற்றுலக்கி வெள்வேலெண்ணெயை உபயோகிககலாம்.

**ஆடும் பற்களுக்குப் புகை.**—சாரணைவேர், எருக்கன் வேர், சந்தனம், சாம்பிராணி, செம்பு, சுக்கு, இலிங்கம் இவற்றைப் பொடித்துப் புகை பிடிக்கலாம். புகை பிடிக்குமுன் வேப்ப முத்து நெய்யைத் தடவிக் கொள்ள வேண்டும்.

**பற் புழுவுக்கு.**—பாகலிலைச்சாறு, சிறுவழுதுணைச்சாறு, எள்நெய் இவறறை ஓரளவாகக் கூட்டி வாயிலிட்டுக் கொப்புளிக்கவும்.

**வேறு.**—காற்ரேடிக்காய் (ஆதொண்டை), பூண்டு, மிளகு, சுக்கு, பனை வெல்லம் இவறறை நேறகூறுகச் சேர்த்தரைத்துத் துணித்துண்டிற பூசிப் பறகளிடையே புழுவுளள இடத்தில் வைக்கலாம்.

**பல் வன்மை பெறற்கு.**—நீர் வற்றிய தேஙகாயை மெல்லியதாகச் சீவி உத்தமாகாணி வேரும் சேர்த்துப் பிசைந்து வெய்யலில் வைக்கத் தயி லம் பிறக்கும். அதனைப் பிழிந்து பச்சைக் கறபூரப பொடியையதிற் றாவிப் பல்லடியிலிடப் பல் வலுக்கும்.

**பல் வீக்கத் (பேத்தை) திற்குப் பொடி.**—சேங் கொட்டை, துருசு, கல் லுப்பு இவறறைத் தனித தனியே சுட்டெடுத்து, இம்மூன்றுக்கும் நேர் கூறு ஏலப் பொடி சேர்த்துக கலந்து, பற்றுலக்குவதுடன், பல்லடியில் வைக்க வீக்கந் தீரும். ஆனல், உடனே வாய் கொப்புளிக்கக்கூடாது.

## கண்ணோய்.

### நலல கண்ணியல்.

“ வெள்ளையில் சிவப்புறுது விளங்குநற் படிகம் போன்று
ஒள்ளிய சோதி தன்னில் ஒளி நிற வண்ண மாகில்
உள்ளொளி பொருந்த வங்கே உன்முகம் விளங்கத் தோன்றில்
ஒள்ளிய நயன மாகும் உண்மையீ தறிந்தி டாயே. ”

“ பங்கமில் விழியி னீளம் பகர்தரு மகலந் தனதே
டிங்கத னுழ நீதான் இயல்புட னுரைக்கக் கேளாய்
அங்குல மிரண்டி னேடே யரையுமொன் றுன்ன லாகும்
செங்கயல் விழியின் மாதேசெகத்துளோர்க் கறிந்து கொள்ளே.”

" நயனத்தில் மூன்றத் தொன்று நகைகரு விழியே யென்ப
பயனுத்து நிலவு மாறு பகுத்திடு மேழி லொன்று
வியனுத்த சோதி யென்ப மேதினி தனில்வாழ் மக்கட்
கயனுத்துப் படைத்தான் கண்டாய் அன்னமென் னடைய
[ணங்கே. "

வெள் விழியில் செம்மை நிறமின்றிப் படிகக்கல் போன்று வெண்மை யாகவும் தெளிவாகவு மிருக்க வேண்டும். சோதியென்று கூறப்படும் தாரையானது கருநிறத்தோடும் பாவையில் கண்ணைச் சோதிப்பவரின் உருவமானது தெளிவாகவுந் தெரியவேண்டும்.

கண்ணின் நீளம் 2 அங்குலம், அகலம் ½ அங்குலம், ஆழம் 1 அங்குலம் என்றறிக.

முழுக் கண்ணில் ½ பாகம் கருவிழியும், பாவை கருவிழியில் 1/7 பாகமுமாகும்.

**கண்ணோய் தொண்ணூற்றுறின் பெயர்.**

அக்கிர ரோகம் அவிகாய விரணம்
உக்கிர ரோகம் உடைந்தெழுந் திடுதல்
சாய்கண் குருடு தடிப்புத் தினவு
தூய வெண்குருடு சுக்கிர ரோகம்
மாலை காசம் மருவுகண் சிவப்பு
நீல காசம் நெறியொளி மழுங்குதல்
அருவிநீர் தும்மல் அடைந்தெழுந் திடுதல்
பருமுளை யெழுச்சி படர்வெள் ளெழுத்து
சோதியில் விரணம் துர்மாமிச வளர்ச்சி
கோதிலா விழியில் குருதி சீழ் பிடித்தல்
நிமை முழி மாமிசம் நெருக்கிப் பிடித்தல்
அழிகண் புழுவெட்டடர்ந்தெழுந் திடுதல்
நாக படலம் நன்முழி விழுங்கி
மேக வெட்டையால் மேவிடு மந்தம்
முழிகண் குருடு முன்னிமைக் குத்து
வாத காசம் மணிகாசம் கண்குருடு
உருவிழி புடைதது உயர்ந்தெழு காளான்
பரவைப் பூவொடு பஞ்சுநீர்ப் படலம்
அமரம் புகைச்சல் அதிகமந் தாரம்
திமிரம் சேர்நெறி செவ்வேர் முடமயிர்
அந்திர காசம் அழற்றின கண்ணோய்
சந்திர ரோகம் தலையெழு நாயிறு
கூசி விழித்தல் குவளை நெறித்தல்
காச மிருட்சி கண்விர ணப்பூ
துண்ணு காசம் சுழல்விழி யெரித்தல்

அன்ன கோபம் அழற்றிய மாலை
கண்பக்கப் படலம் கற்பமா ரோகம்
அக்கரம் பில்லம் அளித்திடும் பிரித்தல்
பித்த காசம் பிறவிக் குருடு
துத்திடுங் காளான் துன்னுவெண் புகைச்சல்
கண்ணி லெழுச்சி கண்குவளை நெரித்தல்
விரண சுக்கிரன் வெண்ணோக் காடு
சூழ்ந்திடும் பில்லம் சேராக் கண்துடிப்பு
வருஞ்சல ரோகம் மயிர்பபுழு வெட்டு
விதன மந்தாரம் வீங்குதல் விழியனல்
மதன மந்தாரம் வளர்ந்தெழு ரோகம்
சுடர்பல தோன்றல் சுடரதி மாமிசம்
உயர்ந்த கண் புடைத்தல் உவரெழு காசம்
வால காசம் மருவிழி காசம்
ஒரு நீர்ப் பில்லம் ஒரு நீர்ப பாய்ச்சல்
குவளை விப்புருதி குன்றிமைத் தடிப்பு
குவளை காசம் கொடும்புழு வெட்டு
மந்தார காசம் வாலையிற் காசம்
அந்திர விரணம் இமையோ டுறுத்தல்
நத்தைப் படுவன் நற்குவ ளையோடு
புத்து எழுந்திடும் பொங்கிய விதனம்
எண்ணிய வியாதிகள் தொண்ணூற் றுறும்
கண்ணினில் வினையெனக் கருத லாமே

என அகத்தியர் நயனவிதி ஐந்நூற்றில் கூறியுளது.

அவை :—

1. அக்கிரரோகம்.
2. அவிகாய விரணம்.
3. உக்கிரரோகம்.
4. உடைந்தெழு காசம்.
5. சாய்கண் குருடு.
6. இமைத்தடிப்பு.
7. கண் தினவு.
8. தூயகண் குருடு.
9. சுக்கிர ரோகம்.
10. மாலை காசம்.
11. சுழல் வண்டெரிதல்.
12 அன்ன கோபம்.
13. மருவு கண் சிவப்பு.
14. ஊறுகாசம்.
15. எரிவிழி மழுங்குதல்.
16. பற்பரோகம்.
17. அதிமந்தம்.
18. குவளை நெறித்தல்.
19. அழிகண் பிரித்தல்.
20. சோதிகா விரணம்.
21. மணி நீல காசம்.
22. படிகுந்தம்.
23. மதன மந்தாரம்.
24. நாகபடலம்.
25. நீர்ப் பாய்ச்சல்.
26. அரூபம்.
27. வெள்ளைப் படலம்.
28. கண் விரணம்.
29. நீரொழுக்கம்.
30. நீல காசம்.

31. குமரிகாசம்.
32. வாதகாசம்.
33. முடமயிர்.
34. கண்குருடு.
35. அடைந்தெழுந்திடுதல்.
36. பருமுளை.
37. எழுச்சி.
38. தூர்மாமிசம்.
39. வெள்ளெழுத்து.
40. உறுவிழி புடைத்தல்.
41. பரவைப்பூ.
42. பஞ்சு நீர்ப்படலம்.
43. அமரம்.
44. புகைச்சல்.
45. அதிமந்தாரம்.
46. திமிரம்.
47. சோதி நெறி.
48. செவ்வேர்.
49. சிலேத்தும காசம்.
50. குவளை நெரித்தல்.
51. காசமுறுசி.
52. மாலைக்கண்.
53. துண்ணு காசம்.
54. சுழல் விழி எரித்தல்.
55. பக்கப்படுவன்.
56. அக்கரம்.
57. பில்லம்.
58. அழிந்திடும் பிரித்தல்.
59. பித்தகாசம்.
60. துத்திடுங்காசம்.
61. துண்ணு வெண்புகைச்சல்.
62. சோராக் கண் துடிப்பு.
63. வெண்ணோக்காடு.
64. சூழ்ந்திடும் பில்லம்.
65. மயிர்ப்புழுவெட்டு.
66. விதன மந்தாரம்.
67. வளர்ந்தெழு ரோகம்.
68. சுடர் பல தோன்றல்.
69. வீங்கி விழிததல்.
70. மதன மந்தாரம்.
71. சுடரதி மாமிசம்.
72. உண்டைஎழுச்சி.
73. வாரெழு காசம்.
74. உயர்ந்து கண் புடைத்தல்.
75. வாலகாசம்.
76. நீர்ப்பில்லம்.
77. மநதார காசம்.
78. குவளை விப்புருதி.
79. கும்பிமைதடித்தல்.
80. குவளை காசம்.
81. நத்தைப்படுவன்.
82. குவளைப்படுவன்.
83. புத்தியழித்தல்.
84. பொங்கிய விதனம்.
85. கண்ணோய்.
86. சந்திரரோகம்.
87. எழுநாயிறு.
88. கூசி விழித்தல்.
89. இரத்தப் படலம்.
90. நீர்ப்படலம்.
91. அழற்றி.
92. பிறவிக்குருடு.
93. வருஞ்சலரோகம்.
94. கொடுப்புழு வெட்டு.
95. இமையொடுறுத்தல்.
96. அந்திர காசம்.

**கண்ணோய் வரு வழி.**

"கெர்ப்பத்திற் சிசுவாம் போது கிருமிகள் சேர்ந்திட் டாலும்
கப்பிய பசியுற் றுலுங் கலக்கங் கொள் திகில்நேர்ந் தாலும்
செப்புமாங் கனிகாய் மெத்த தேடியே புசித்திட்டாலும்
ஒப்பறு மகவின் கண்ணில் வியாதிவந் தணுகுந் தானே."

" கடுகிய வெயிலி னாலும் கனத்தடி சுடுகை யாலும்
தடியடி படுகையாலும் தலையது சுமையி னாலும்
முடுகவே எண்ணெய் வார்த்து மூழ்கிப்பின் படுக்கை யாலும்
படிப்பினிற் கூர்மையாலும் படர்ந்திடும் கண்ணி னோயே."

" உட்டண மதிகத தாலும் உதித்திடு மந்தத் தாலும்
உட்டணப் பொருள்க டம்மை யுகந்துதான் முகர லாலும்
உட்டண வெயிலில் நாளு முழன்றுநீ ராட லாலும்
உட்டண மதிக மீறி உதித்திடுங் கண்ணி னோயே."

" நித்திரை யிலாத தாலும் நீள்வெயி லெழுகல் தன்னால்
நித்திரை சமயந் தனனில் நிமிரதலை கவிழ்தல் தன்னால்
பத்தியங் காடி கொள்ளல் பருகுநீ ரதிகங் கொள்ளல்
மத்திய மதிகக் காற்றால் வந்திடுங் கண்ணி னோயே."

" மனமிடை குன்றி னாலும் மாதர்தம் மாசை யாலும்
கனமலச் சேர்க்கை யாலும் கவிழ்ந்திடு பார்வை யாலும்
தனமிகக் கெடுகை யாலும் தணிவிலா நடையி னாலும்
சினமிகக் கொள்ள லாலும் சேர்ந்திடும் நயன நோயே."

" கண்ணது அழன்றெ ரித்த காரண மேதோ வென்னில்
நண்ணிய வப்பு தன்னை நலமிகப் பருகை யாலும்
திண்ணிய வறட்சி யாலும் சேர்ந்தெண்ணெய் போகா தாலும்
விண்ணெழு மின்ன லோடு விளங்குதீப் பார்ப்ப தாலும்."

" தடியடி படுகை யாலும் தலையதிற் சுமையி னாலும்
கடிவிரை நடையி னாலும் கவிந்திடும் பார்வை யாலும்
நெடுவிரல் நகத்தி னாலும் நெருங்குநித் திரையி னாலும்
படியெழு கூர்மை யாலும் பாவையிற் படரு நோயே."

" உண்டிடு மசனந் தனனி லுகந்துகல் கடிக்கை யாலும்
கொண்டகல் மயிரி னாலுங் கொடுமலச் சேர்க்கை யாலும்
பண்டுவெற் றிலையும் பாக்கும் பக்கரை யடக்கை யாலும்
கண்டநேத் திரந்த னக்குக் கருதிய நோய்க்குத் தாயாம்."

என அகத்தியர் நயன விதியிலும்,

" பாரேய் பொடிசுடல் பருவெயின் மேற்படல்
வாரேறு கொங்கையாள் மாயை மிகச்செயல்
காரே முழுக்கறல் கண்ணு லனல்பார்த்தல்
சீரேறு பாடாணம் தின்றதாற் கண்ணோயே."

" கண்ணோய வருகிற காரண மின்னுங்கேள்
பண்ணுன மேகத்தாற் பருவெட்டை வாயுவால்
தண்ணு மலக்கட்டால் தண்சலக் கட்டினால்
புண்ணு மிரணத்திற் போடுங்கா ரத்தாலே."

" காரச் சுறுக்காற் கடுரசத் தூமத்தால்
நேரொத்த சார்நின்ற மூக்கின் வாசத்தால்
பாரொத்த பேதியாற் பலபல தண்ணீரால்
சீரொத்த கண்ணில் சிறக்கும் வியாதியே."

எனத் திருமூலர் கூறியவற்றாலும் அறிக.

**கண்ணோய்ப் பொதுக்காரணம்.**—தலையில் மிகுபாரத்தைச் சுமத்தல், வெயிலில் அலைதல், எண்ணெய் முழுக்கு தவறுதல், மலின நீரில் முழுகுதல் ஆகியவற்றாலும், அளவுகடந்து மயக்கந்தரும் பொருள்களைப் பயன் படுத்தலாலும், பெண்களை அடிக்கடி கூடுவதாலும், புறக்காயங் களினாலும், காதினுள் பூச்சி செல்லுதலாலும் கண்ணோயுண்டாகும்.

**சிறப்புக் காரணம்.**—தலை முழுகும் போது எண்ணெய் நன்றாக விடாமற் படி முழுகுதல், காலில் தாட்காப் பணியாமல் சுடுகின்ற தரையில் நடத்தல், பொருள்களைக் கவனித்து உற்று நோக்குதல், மிக்க சீற்றங்கொள்ளுதல், கருவுற்றிருக்கும்போது தாயின் கருப்பையில் பூச்சிகள் சேரல் என்பன வேயாம்.

### கண்ணில் நோயணுகாதிருக்கக் கடைப்பிடிக்க வேண்டுபவை.

" நிலமிசை மாந்தர் நோய்கள் நீங்கிடத் திங்க ளாறில்
சலமறச் சத்தி செய்யத் தக்கதாம் சதுர்மா தத்தில்
மலமறப் பேதி செய்ய மாத மொன் றினிலே நசியம்
பலமுற மூன்று நாள் அஞ்சனமிடப் பகர்ந்த தாமால்."

ஆறு திங்கட் கொருமுறை வாந்தி மருந்தும், நான்கு திங்கட் கொருதரம் பேதி மருந்தும், திங்கட் கொருதரம் நசியமும், மூன்று நாட் கொருமுறை கண் மருந்தையும் பயன்படுத்த வேண்டும்.

### மேற்கூறியவாறு செய்வதால் அடையும் பலன்.

" ஆதிமுப் பிணிகள் தீர அமைத்திடத் தொழில்கள் நான்கில்
பேதியில் தாழும் வாதம் பித்தம்சத் திக்கத் தாழும்
ஓதிய நசியத் தாலே உயர்கபம் தீரு மிக்க
ஓதியஞ் சனத்தால் கண்ணில் நிகரிலா ஒளியுண் டாகும்."

பேதி மருத்துவத்தால் வலி குறையும், வாந்தி செய்வித்தால் அழல் குறையும், நசியஞ் செய்வதால் ஐயந்தாழும், கண்ணில் மருந்திடுவதால் மிக்க ஒளியுண்டாகும்.

### மேலே கூறப்பட்ட மருந்துகளை நாளினிடு நேரம்.

" செய்யநற் பேதி தானும் செய்வதும் கால மேற்க
உய்யும்ஒக் காளத் துக்கே உகந்ததோர் சாமத் துள்ளாம்
பொய்யுமா நசியந் தானும் பெரும்பதி னேழுக் குள்ளாம்
மெய்யுறு மருந்தே கண்ணில் மிகுந்திடும் அந்தி மிக்காம்."

பேதி மருந்தைக் காலை நேரத்திலும், வாந்தி மருந்தை ஒரு சாமத்திற்குள்ளும், பதினேழு நாழிகைக்குள் நசியமும், அந்தி நேரத்திற்குள் கண் மருந்தையு மிடவேண்டு மென்பதாம்.

### திங்கட்குத்தக, கண்ணில் மருந்திடு நேரம்.

" மிக்கவ ரெழுது காலம் யாவுமா மிதுன நன்றே
டொக்கவே துலாந்தேள் மாசம் காலையாம் உயர்வில் லோடு
தக்கமா மகரம் கும்பம் மீனமத் தியானம் மற்ற
பக்கமா தங்கள் கண்ணில் பதினெட்டாம் அஞ்ச னங்கள்."

ஆனி, ஐப்பசி, கார்த்திகை இத் திங்களில் காலை நேரத்திலும், மார்கழி, தை, மாசி, பங்குனி இத் திங்களில் நண் பகலிலும், சித்திரை, வைகாசி, ஆடி, ஆவணி, புரட்டாசி இத் திங்களில் பதினெட்டு நாழிகைக் குள்ளும் மருந்திடல் நன்மை தரும் என்பதாம்.

### கண்ணில் புற மருத்துவம் செய்யும் நேரம்.

" களவுறு நரம்பு குத்தல் கருவிக ளாடல் காலை
யளவுறு கொம்பு வைத்தங் குதிரம்வாங் குதல்மத் தியானம்
அளவுறு அட்டை விட்டு ஆற்றுவ தந்தி காலம்
தளவுறு நகைப்பால வெய்யோர் புரஞ்செற்றூர் சாற்றி னூரே."

நரம்பு குத்தல், சத்திரஞ் செய்தல் இவற்றைக் காலையிலும், நண் பகலில் கொம்பு வைத்துக் குருதி வாங்குதலையும், அட்டை விடுதலை மாலை நேரத்திலும் செய்தல் சிறப்புடையனவாம்.

### பற்றேய்த்தல்.

" சீர்பெறு நயனந் தன்னில் சேர்ந்த நோய் வாரா வண்ணம்
கார்செறி குழலி னாளே கருதிச் தர்த சுத்தி
நீர்திகழ் ஆல் எருகரு நிறைவேலம் மருது பூலா
சேரிடப் பக்க முற்றி தேய்த்திட வலத்தில் பின்னே."

சிறப்பாக ஆல், எருக்கு, வேல், மருது, பூலா ஆகிய இவற்றின் குச்சிகளால் பற்றேய்த்துச் சுத்தம் செய்ய வேண்டும்.

### உள்ளங்காலில் நெய் பூசுதல்.

" கண்ணது பலகால் நொந்து கடுகியே வழன்று வந்தால்
நண்ணிய உள்ளங் காலில் நறுநெய்யை மிகவும் தேய்த்துத்
திண்ணிய தவிடு மாவால சிறக்கவே தூவி வைத்துத்
தண்ணெனக் கழுவி நல்ல சந்தனம் பூசத் தீரும்."

கண்ணழன்றிருப்பின், படுக்கைக்குப் போகுமுன் உள்ளங்காலில் ஆனெய்யை நன்றுய்த் தேய்த்து, தவிட்டால் பொருத்தி உறங்கி எழுந்து தண்ணீர் விட்டுக் கழுவித் துடைத்து இழைத்த சந்தனத்தைப் பூச அழற்சி நீங்கும்.

## கண்ணில் நீரிடுதல்.

" உண்டுகை கழுவிப் பின்னே உறுமைய மூன்று துள்ளி
வண்டணி குழலாள் வார்த்து வளமிகும் நிமையைத் தேய்த்துக்
கொண்டொரு கடிகை நேரம் குணமிகும் கதிரைப் பார்த்துப்
பண்டுபோ லிருக்கும் போது பரிவுகண் அமிர்த யோகம்."

இரவில் உண்டு, கை கழுவிய பிறகு கண்ணுக்குள் மூன்று துளி தண்ணீர் விட்டு இமைகளை நன்ருய்த் தேய்த்து ஒரு கடிகை நேரம் நிலவைப் பார்த்து வந்தால் கண் ஒளியுறும்.

**கண்ணுக்கு அஞ்சனமிடுதல்.**—அஞ்சனம் பலவகையுண்டு. சிறப்பாகச் சேரக் கூடிய பொருள்கள், அஞ்சனக்கல், பீதரோகணி, திப்பிலி, இந்துப்பு இவை முதலியன.

## நிலவைப் பார்த்தல்

" கைவிரல் தன்னைக் கொண்டு கலந்துபல் கணிபோல் விட்டு
துய்யசந் திரனை மெள்ள தெளியவே நோக்கிப் பாரும்
வெய்யொளி யுண்டு நீயும் விரவிய கண்ணில் நீரைத்
துய்யமாய் விட்ட லம்பித் துவளாகப் பிசைந்தி டாயே."

கைவிரல்களைப் பலகணிபோல் பின்னிக்கொண்டு விசும்பில் மாசில்லாக் காலங்களில் மதியை அவ்விரலின் இடைவெளியில் சிறிது நேரம் பார்த் திருந்து, பிறகு, கண்ணில் தண்ணீரை விட்டுக் கழுவிவிட்டுக் கண்களைப் பிசைந்திடுவாயாக. இப்படிச் செய்யக் கண்ணுக்கு ஒளியுண்டாம்.

## எந்நேரங்களில் கண்ணில் மருந்திடலாகாது

" தனக்குமந் தாபந தானும் தலையது முழுகி ஞானும்
வினக்குறு மாதர் மாதவிடையினுல் வெளிநின் ருலும்
மனக்குறு பற்றுத் தானும் மருந்துதான இடுதல் தானும்
கனக்குமே கண்ணில் நோவு காணபிக்கும் செய்யா நாளே."

மழை பெய்யும்போதும், எண்ணெய தேயத்து மூழ்கின பிறகும், பெண் கள் வீட்டு விலக்கா யிருக்கும் போதும் கண்ணுக்கு மருந்திட லாகாது ; தவறிச் செய்யின நோய் மிகும்.

## கண்களுக்கு ஒரு நாளைக்கு எத்தனை முறை மருந்திடலாம் என்பது.

காலையிலும், மாலையிலும் மருந்திடக் கண்களில் இருள் நீங்கி நோய் தீரும். ஞாயிறு மறைந்த பின் மருந்து போடலாகாது. ஒரு பொழுது மருந்திட வேண்டியிருப்பின், மாலை நேரமே சிறந்தது.

மருந்திட்ட பின் கண்ணிலிருந்து கசிதது நீர் வடிந்தபின் வெந்நீரால் கண்ணைத துடைத்து விடல் நலம்.

**கண்ணோய்க்கு மருத்துவம் பெறுவோர் கவனிக்க வேண்டுபவை.**

வெயிலிலும் நெருப்புள்ள இடங்களிலும் இருக்கலாகாது. வெறியைத் தரக்கூடிய சாராயம் முதலிய குடித்தல் கூடாது. பகற் றூக்கம், முயற்சி இவைகளை நீக்க வேண்டும்.

**கண்ணோய் 96-க்கு விவரம்.**

" கருவிழி தன்னில் நோய்கள கலந்திடும் நாற்பத தஞ்சும்
மருவிய வெள்ளை தனனில் வந்திடு மிருப தென்க
பெருகவே யிமையில் தோஷம் பேர்பதி னாறு தாகும்
பருவமாங் கடை யி ரண்டில் பதினைந்து தோஷ மாமே."

| | | |
|---|---|---|
| கருவிழியில் | .. | 45 |
| வெள்விழியில் | .. | 20 |
| இமையில் .. | .. | 16 |
| கடைக்கண்ணில் | .. | 15 |
| ஆக | .. | 96 என அறிக. |

இது நாகமுனிவர் கூறியவாறுகும்.

**வேறு.**

" சோதியி லிருபத் தேழு தொல்கரு விழியில் பத்து
தீதுபன் மூன்றும் வெள்ளை சிறந்திடு சந்தி லொன்பான்
கோதைகேள் மூவெட்டாகும் குவளையி னிமையி னுள்ளே.
ஏதமில் நயன மெங்கும் எழுந்தநோய் பதின்மூன் றுமே."

சோதியென்ற பாவையில் 27, கருவிழியில் 10, வெள்விழியில் 13, கருவிழிக்கும் வெள்விழிக்கும் இடையில் சந்து என்ற இடத்தில் 9, குவளையெனப்படும் மேலிமையில் 24, கண் முற்றும் 13 ஆக 96 நோய்கள் கண்ணிற்றோன்று மென்பர் அகத்தியர்.

**மூக்குற்ற அளவாகக் கண்ணில் உண்டாகும் நோய்த் தொகை.**

" சேரவே தொண்ணூற் றுரும் திறந்திட வாயு நிற்கும்
மாருறு நாற்பத தஞ்சும் மார்கபம் இருப தென்க
சீரிய பித்தி னேடு சிறந்தவை முப்பத் தொன்று
பேர்பெறு நயன ரோகம் பேணிமுன் பிறக்கு மாறே."

மேலும் கண்ணில் வளி மிகுதியால் 45, பித்த மிகுதியால் 31, ஐய மிகுதியால் 20 ஆகப் பிறக்கும் என்று அகத்தியர் நயன விதி கூறும்.

### இனிக் கருவிழியிற் றேன்றும் 45 நோய்கட்கு விவரம்.

" தோன்றிய காச மெட்டுப் படலமேழ் குமுத மூனறு
வாண்விழி யுந்தல் மூன்று திமிரமேழ் வரியும் மூன்று
நீண்டசுக் கிரனே யைந்து நெரிசல்குந் தம்மும் மூன்றாய்
மாண்விழிப் பூவும் மூன்றும் மணியினோய் நாற்பத் தைந்தே. "

(நாகமுனி நயன விதி.)

காசம் 8, படலம் 7, குமுதம் 3, விழியுந்தல் 3, திமிரம் 7, வரி 3, சுக்கிரன் 5, நெரிசல் 3, குந்தம் 3, பூ 3 ஆகக் கருவிழி நோய் 45 ஆகும்.

### காசம் எட்டின் பெயர்

" நேத்திர மதனிற் காசம் நினைவுட னுரைக்கக் கேளாய்
பாத்திய நீல காசம் பண்தரும் பித்த காசம்
மாற்றிய வாத காசம் மதித்திடும் வால காசம்
ஏத்திய பகலெல் மந்தம் இன்பமந் தார காசம்."

" செப்புமந் தத்தாற் சேருஞ் சிலேட்டும காசத் தோடு
ஒப்பறு வலியுங் காசம் உற்ற தோர் விரண காசம்
மைப்படி கண்ணி னுளே வகுத்தவிக் காச மெட்டுங்
கப்பிடில் மறையுங் கண்டாய் கண்ணெனக் கழறு வாரே."

(1) நீலகாசம், (2) பித்தகாசம், (3) வாதகாசம், (4) வாலகாசம், (5) மந்தாரகாசம், (6) சிலேட்டும காசம், (7) வலியுங்காசம் (குமரிகாசம்), (8) இரணகாசம். இவ்வாறு நாகமுனி நயனவிதி இருநூற்றில் கூறப் பட்டிருக்கிறது.

அகத்தியர் நயனவிதி ஐந்நூற்றில் மேலே கூறப்பட்ட எட்டில் இரண காசம் நீங்கலாக ஏழுடன் (1) உடைநதெழு காசம், (2) மாலைகாசம், (3) ஊறுகாசம், (4) மணிநீலகாசம், (5) நீரெழுகாசம், (6) துண்ணுகாசம், (7) துத்திடுங்காசம், (8) வாரெழுகாசம், (9) குவளை காசம், (10) அந்திர காசம் எனப் பத்தையுஞ் சேர்த்து, காசம் பதினேழென்பர்.

### காசங்களின் குறிகுணங்கள்—தீரும் தீராதவையும்

" மணிதனில் வண்டு போல வண்ணங்கள் பலவு முண்டாய்த்
தணிவிலா வாத காசந் தரியாம லோடி நீற்கும்
பிணியெனும் பித்த காசம் பிறங்கியே பச்சை போல
மணுதனி லந்தி யாக வந்துறுஞ் சிலேட்டும காசம்."

" கூறிய வால காசங் கொழும்புகை யார்த்தல் போலாம்
மாறிடும் நீல காசங் கருவிளம் பூவின் வண்ணஞ்
சீறுமந் தார காசஞ் செம்பஞ்சு மேகம் போலாம்
வேறுள விரண காசம் வெண்டழும் பாகுங் காணே."

" சொன்னதோர் சிலேட்டு மகாசந் தோன்றிடுங் கருமை போலாம்
மின்னுய் பித்த காசம் விளம்புமந் தார காசம்
பின்னுமோர் நீல காசம் பேசிய ரோக மூன்றும்
மன்னுசாத் தியங்கள் மற்ற தஞ்சும சாத்ய மாமே."

மேற்கூறிய எண் வகைக் காசத்தில் பித்த காசம், மந்தார காசம், நீலகாசம் ஆகிய மூன்றும் தீரும். மற்றவை தீரா.

1. **வளிகாசம்.**—கருவிழியில் ஒரு வண்டு போல நிறம் மாறுதல தோன்றும்.

2. **பித்தகாசம்.**—மேற்கூறியது போலவே பச்சை நிறமாயிருக்கும்.

3. **ஐயகாசம்.**—இதில் எள்ளைப் போன்ற வெண்ணிறந் தோன்றும்.

4. **வாலகாசம்.**—இதில் கருவிழியில் புகை நிறமாயிருக்கும்.

5. **நீலகாசம்.**—இதில் நீலமாகவும் அல்லது விசும்பு வண்ணமாக இருக்கும்.

6. **மந்தாரகாசம்.**—இதில் பச்சையல்லது விண் நிறமாயிருக்கும்.

7. **குமரிகாசம்.**—இதில் கருமை நிறமாக இருக்கும்.

8. **இரணகாசம்.**—வெள்ளை இரணத்தைப் போன்றிருக்கும்.

இனி அகத்தியர் நயன விதியில் கூறியபடி காசங்களின் குறிகுணங்களைக் காண்பாம்.

**1 வளிகாசம் :**

" சுழிதனைக் கடுத்துக் கண்ணும் சோரவே சுழித்து வாங்கும்
நெளியவே இமையும் வீங்கி நின்றிடும் உறக்க மில்லை
சளியவே இடித்து நொந்து சலம்வீழும் வாதை யாகும்
வழிபட நோயுந் தீரா வாதமாம் காச மாமே."

நடு விழியை கடுத்துக் கண்ணும் சோர்வடையும் அதாவது அக்கண்ணில் பார்வை இராது. நடுவிழியைச் சுழித்து உள்ளே இழுக்கும். இமைகள் வீங்கும். தூக்கம் இராது. தலையை இடித்துக் கண்களிலிருந்து நீர் வடியும். துன்பம் மிகுத்திடும்.

**2 பித்தகாசம் :**

" சினத்திடும் சிவப்பே யாகும் சிறுகவே பீளை கண்கள்
அனத்திடும் பீளை தோன்றும் அதிகமாய்ச் சிவந்து கூசும்
சுனைத்தடஞ் சோனை மாரி சொரிதல் போல் நீரே தூவி
கனத்திடும் பைத்தி யத்தின் காசமாய்க் கருத லாமே."

ஒருவருக்குச் சினத்தின் காரணமாகக் கண்கள் சிவத்தல் போலச் சிவந் திருக்கும். கண்கள் சிறுத்திருக்கும், பீளை சாரும், கூச்சமிருக்கும், சுனையில் இருந்து நீர் சுரப்பது போலவும், மிக்க மழை பொழிவது போலும் கண்ணி லிருந்து நீர் வடியும்.

3 ஐயகாசம் :

"வட்டமாய் விழிக்க மாட்டார் மழைமுகில் சொரிந்தாற் போல
விட்டிலா நீரே நிற்கும் வேதனை வெகுவாய்த் தோன்றும்
கொட்டினுற் போலே நெற்றி குலையவே வலிக்கு மாகில்
திட்டமே தெரியச் சொன்னேம் சிலேத்தும காசந் தானே."

கண்ணை நன்ருய் விழிக்க முடியாது. விசும்பினின்று மழை பெய்வது போல் ஓயாமல் நீர் வடியும். வலி மிகுந்திருக்கும். தேள் முதலிய நஞ்சுயிர்கள் கொட்டினதுபோல் நெற்றியில் மிக்க வலியிருக்கும்.

4 வாலகாசம் :

"காலமே புகைந்து யாமம் கலந்தபின விட்டுப் போகும்
நீலம்போல் ஒருகால் தோற்றும் நீர்விழி வேற தாகும்
சாலவே நீரும் பாயும் சலவர்ணம் பாவைப் பிள்ளை
வாலிப வயதிற் காணும் வாலமாங் காசந் தானே."

காலை நேரங்களில் கண்கள் புகைச்சலாய்த் தெரியும். மூன்று மணி நேரம் சென்ற பிறகு புகைச்சல் நீங்கிப் போம். பார்வை சில சமயம் நீலநிற மாகத் தோன்றும். சில சமயம் வேறு வகையாயிருக்கும். மிக்க நீர் வடியும். பாவை, நீரின் நிறமாக விளங்கும். இந்நோய் காளையர்கட்கு உண்டாகும். ஆகையால், இதற்கு வாலகாசம் என்ற பெயராயிற்று.

5 நீலகாசம் :

"நல்லதோர் மணியும் நொந்து நாளிலே புகைந்து காட்டும்
சொல்லவே புருவங் கண்ணில் சிரசினில் சேர நோகும்
சொல்லவே சோதி நீலம் சூட்சுசாய் நீரும் பாயும்
நல்லிமை நீக்கும் நீங்கார் நீலமாம் காசந் தானே."

முதலில் தலையில் நோய் தோன்றிய பிறகு, கண்மணியில் வலியுண் டாகும். நாளுக்கு நாள் கண் புகைந்து கொண்டே வரும். பாவை யானது நீல நிறமாகி வரும். வெகு நுட்பமாக நீரும் வடியும்.

6 மந்தாரகாசம் :

"சாயுங் காலம் மழைமேகம் சண்டை கசப்பு புளிவிரும்பில்
காயங் கனக்கில் மலங்கட்டிக் கன்னி யுடனே பேசிடுகில்
ஆய மான சோதி தன்னில் அருண்ட புகைச்சல் தானுண்டாம்
மாயம் போல வந்திடுமந் தார காச மெனலாமே."

மாலை நேரத்திலும், கார் கம்மியுள்ள போதும், சண்டையிட்டாலும் கசப்புப் பொருள்களையும், புளிப்புப் பொருள்களை விரும்பியுண்டாலும், உடல் கனத்தாலும், மலக்கட்டிருந்தாலும், பெண்ணைக் கூடின நாளிலும்—கண்ணுக்கு புகைச்சலுண்டாகு மாதலாலிதற்கு மந்தாரகாச மென்று பெயர்.

**7 குமரிகாசம் (வலியுங்காசம்) :**

" கடுவலி கண்கள் தன்னில் கலங்கியே பீளை சாரில்
நடுவிழி தன்னில் குத்தும் நன்மணி புடைத்து வீங்கி
வடுவென திரண்டு காட்டி வாயுவும சலமுங் கோக்கும்
குடிதனைக் கெடுக்கு மின்னுய் குமரிதன் காச மாமே. "

கண்களில் தாங்க முடியாத வலியுண்டாகும். கண்கள் கலங்கலாய்ப் பீளை சாரும், நடுவிழியில் குத்தலுண்டாகும். கண்மணி பெருத்து வீங்கியிருக்கும். கண்ணில் வாயு மிகுந்து நீர் கோத்துக் கொண்டிருக்கும். நாளடைவில் பார்வையைக் கெடுக்கும்.

இது வரை நாகமுனி நயன விதியில் கூறிய எண் வகைக் காசங்களின் பண்புகளையும் அவ்வெண் வகைகளுள் அகத்தியர் நயன விதியில் பெயரளவில் ஒற்றுமைப்பட்டு, குறிகுணங்களில் வேற்றுமைபட்ட ஏழு காசங்களின் குறிகுணங்களையும் கூறினோம்.

இனி, நாகமுனி நயன விதியில் கூருத மற்றப் பத்து வகைக் காசங்களின் பண்புகளைக் கூறுவோம்.

**1 உடைந்தெழு காசம் :**

" அடைந்தெழும் பீளை கட்டும் அதிகமாய்ச் சிவப்பு நீரும்
கடைந்திடும் கருவி போலக் கடைக்கண்ணைக் குத்தி வாங்கும்
குடைந்திடு நெற்றி காதும் குத்திடும் உச்சி தன்னில்
உடைந்தெழு காச மென்றே யுரைத்தனர் தமிழ்வல் லோரே."

கண்ணில் மிகச் சிவந்து பீளை சார்ந்து நீர் வடியும், கடைவிழியில் வலியிருக்கும், நெற்றி, காது, உச்சி இவ்விடங்களில் குத்தலுண்டாம்.

**2 மாலைகாசம் :**

" மருவிய கண்கள் நொந்து வற்றியே எரிப்புண் டாகில்
கருவிழி தன்னில் சற்றே கலங்கிய ரூபம் வேறும்
அருவியே உருத்தி நொந்து அதிகமாய்ப் புகைச்ச லுண்டாம்
உருவியே சாயுங் காலம் உதிக்குமே மாலை காசம். "

கண்கள் நொந்து சிறுத்து எரிச்சலோடிருக்கும். கருவிழி கலங்கி யிருக்கும். உருத்து நொந்து கண்ணில் புகைச்சலிருப்பதுடன் மாலையில் புகைச்சல் மிகும்.

**3 ஊறுகாசம் :**

" கடுக்கும் கண்ணும் சிவந்தெரிக்கும் கட்டை பட்ட புண்போலாம்
படுக்கு மிரவில் சதைவந்து பறந்து மூடும் விழியடங்கும்
இடுக்கு மிமையுங் கனத்திருக்கும் இருண்டு தோற்றும் பலவித [மாய்.
ஒடுக்கம் சற்றே மணிதோற்றும் ஊறுங் காச மெனலாமே. "

புண்ணின் மீது விறகு பட்டதுபோல கண்ணானது கடுத்து, சிவந்து எரிச்ச லோடிருக்கும். இரவில் படுக்கும் போது விழிமுழுதும் சதை விரிந்து மூடிக்கொள்ளும். கண்ணிடுங்கி இமை கனத்திருக்கும். கண்ணிருண்டு பலவிதமாய்த் தோற்றும். கண்மணி சற்று சிறுத்திருக்கும்.

**4. மணிநீலகாசம் :**

" கூசிடுங் குணமும் நீரும் கூர்விழி தன்னில் குத்தும்
வீசிடும் புகைந்து காட்டும் விம்மியே வலிக்கு மாகில்
பேசிடு மணியி னுள்ளே பிணிபோலக் கருத்துக் காணும்
மாசிடுங் குணங்கள் கண்டால் மணிநீல காச மாமே. "

கண்கூசி நீர்வடியும், விழியில் குத்தலுண்டாகும், பார்வை புகைந்து காட்டும், கண் விம்மிக் கண்மணி கருத்திருக்கும்.

**5. நீரெழுகாசம் :**

" கருவிழி கீழு மேலும் கலந்துதான் சிவப்பே யுற்று
வெருவிடு மின்னல் போல விசையுட னெந்து குத்தும்
பெருகிடுஞ் சலமு மோடும் பேசிடில் கண்ணி னேகும்
நெருங்கிட இவைகள் செய்யில் நீரெழு காச மாமே. "

கருவிழியின் கீழும் மேலும் சிவந்து, ஆகாயத்தில் மின்னல் மின்னுவது போன்ற வலியுண்டாகும். கண்ணில் நீர் பெருகியோடும். பேசினாலும் கண்ணில் நோயுண்டாகும்.

**6. துன்னுகாசம் :**

" வளர்ந்திடும் சதைகள் சூழ வலித்திடும் இமைக னக்கும்
தளர்த்திடும் நீரும் பாயும் சளியவே இடித்துக் குத்தும்.
உளந்தனி லெரிப்புக் கூச்சம் உறுதியாய்ப் புகைந்து காட்டும்
துளங்கிய குணத்தி னாளே துண்ணிய காச மாமே. "

கண்ணில் சதை வளர்ந்திருக்கும். கண்ணில் வலியுடன் இமை கனத்திருக்கும். நீர் வடியும். தலையிடித்துக் குத்தலுண்டாம். கண் கூசிப் பார்வை புகையும்.

**7. துத்திடுங்காசம் :**

" குத்திடுங் கண்ணைச் சூழ குவளையி லருவு றுத்தி
பத்திடும் வெள்ளை யோடிப் பறந்திடும் விழிய டங்க
உத்திடும் பார்வை குன்றில் ஒளியது மறைந்து காட்டும்
துத்திடுங் காச மென்று சொல்லுவர் பெரியோர் தாமே. '

கண்ணைச் சுற்றிலும் குத்தலுண்டாகும். கீழிமையில் உறுத்தும். கண் முற்றும் விசாலமாக வெள்ளை படர்ந்திருக்கும். நாளடைவில் பார்வை குறைந்து கொண்டு வரும்.

8. **வாரெழுகாசம் :**

" நீர்விழும் புகைச்ச லுண்டாம் நித்தமுங் கடுக்குங் கண்ணை
ஊர்வது சிவந்து கூசி உள்ளங்கை காலுங் குத்தம்
கார்முகில் போலே எங்கும் கண்ணது இருண்டு தோற்றும்
வாரெழு காச மென்று வகையுடனுரைத்த வாறே. "

கண்ணில் நீர்வடியும், பார்வை புகைச்சலாயிருக்கும். ஒவ்வொரு நாளும் கண்ணைக் கடுக்கும். அரிப்புண்டாகிச் சிவந்து கூசும். உள்ளங்கையிலும் உள்ளங்காலிலுங் குத்தலுண்டாகும். கண் இருண்டு காணும்.

9. **குவளைகாசம் :**

" புருவத்தில் நொந்து குத்தி புடைத்திடும் கடைக்கண் கூட்
கடுவுற்ற கருப்பி னுள்ளே கலந்திடும் நீலம் போல
திருவுற்ற மேனி யாளே சேர்ந்திடி னதிக மாகும்
குருவுற்ற சூழ வெள்ளை குவளைதன் காச மாமே. "

புருவம் வலித்துக் குத்தலுடன் கனத்திருக்கும். கடைக்கண் வீங்கியிருக்கும். பாவையில் காசநீர் கலந்திருப்பதால், நீலநிறமாகக் காட்டும். தலைவலி மிகுந்திருக்கும். வெள் விழியைச் சுற்றிக் குரு போன்ற சிறு முளைகள் காணப்படும்.

10. **அந்திரகாசம் :**

" சந்திர னுதயந் தன்னிற்புகை தானே விழியில் வெளியாகு
மிந்திர போகம் போற்சிவக்கு முற்றுப் பார்க்கிற் பயமாகு
முந்திர கோபம் தானுண்டா முதிர்ந்தாற் கண்ணு மிகவிருளு
மந்திர காச மிதுவென்று மறிய வுலகி லுரைத்தாரே. "

விசும்பில் நிலவு தோன்றும் போது விழியிலுள்ள புகைச்சல் தானே விலகிப்போம். இந்திரகோபப் பூச்சியைப் போலக் கண்கள் சிவப்பாயிருக்கும். கண்களைப் பிறர் பார்த்தால் பயமாகவிருக்கும். இந்நோயினனுக்கு அடிக்கடி சின முண்டாகும். நோய் நாட்படின், கண் மிகவிருளும்.

**மருத்துவம் :**

**காசத்திற்கு இரத்தினுதி மாத்திரை.**

" நவமணி யேழு லோகம் நற்கொடு சோகி பீங்கான்
இவுளியின் பல்லு நாயின் பல்லொடு பசுவின் பல்லும்
கவையடி மேதிப் பல்லும் கமடத்தி னோடும் பன்றி
நவையறக் கொண்டு நன்னீர் முதலைப்பல் ஒட்டைப் பல்லே. "

" கலங்கொம்பு ருத்தி ராட்சங் காளைப்பல் கழுதைப் பல்லும்
நலமுறு பீத ரோணி நறுந்துத் தந் துருசு சூதங்
குலவிய சந்தத் தாரங் கோஷ்டங்கோ ரோச னையிந்
திளகிய சீனக் காரம் இனியமுக் கடுகு கேளே. "

" திரிபலே தேற்றுங் கொட்டை சித்தோடோ ரிதழின் மூலம்
உறுவது சமனாய்க் கூட்டி யொன்றித்து அரைக்குஞ் சாறு
இருமெலு மிச்சஞ் சாற்று லேழுநா ளூறவ ரைத்து
மறுபடி கோழி முட்டைச் சலத்தை வார்த்தரைத்துக் கொள்ளே."

" கொண்டதோர் மருந்து நன்றாய்க் குறுகிநின் றெுத்த வண்ணம்
உண்டைசெய் யிரும ருங்குஞ் சுழிவிழா துருட்டி நன்றாய்
மண்டல நிழலு லர்த்தி வளர்கையான் பொன்னுங் காணி
ஒண்டொடி மூலேப்பா லாநெய் தேனினி லுரைத்துப் போடே."

## காசத்திற்கு—குழம்பு.

" கையாந் தகரை நெல்லிக்காய் கமல வளையங் காணியுடன்
தொய்யில் புளியிலே சீதேவி துலங்குஞ் சாறென் றொருபடிகொள்
நெய்யார் சந்த மகில்தாரம் நெல்லி தான்றி கடுதேற்றான்
ஐயும் வெட்டி லாமிச்சு சமன்செய் தெட்டொன் றாய்க்காய்ச்சே."

" இனிய கஷாயத் துடன்கலந்தே இளநீர் மடல்நீர் சரிகூட்டிக்
கனியக் காய்ச்சி யிளம்பதத்தில் கருதும் பீதரோ கணிதுத்தம்
முனியுஞ் சீனக் காரமுடன் முதிருந் துருசொன் றொருகழஞ்சு
நனிசேர் தேன்விட் டளாவியதில் நவிலும் பொடியை மேற்றூ
[வே. "

" தூவிப் பாணி தனிலிட்டுச் சொன்னேன் விழியி லெழுதிவரக்
கோவித் தெழுந்த காசமுடன் கொள்ளும் புகைச்ச லுட்டணமுங்
காவி மலர்க்கண் மடமானே கண்ணி லனேக தோஷமறும்
யாவித் திதனைச் செய்யுமென்று பகர்ந்தார் பழைய மறை
[யாய்ந்தே. "

## காசத்திற்குப் புடலாதி இருதம்.

" சொல்லுபேய்ப் புடல்கொடுப்பை தூயவல் லாரை காணி
நல்லபூ சனிக்காய் மூங்கில் நறியநீர் வள்ளி தாழை
புல்லும்வெள் ளரிக்கா யோடு போதுமா துளஞ்சம் பீரம்
மெல்லவோ ரொன்று நாழிச் சாறது விரையைக் கூட்டே. "

" குமரிவேர் சிற்று முட்டி கொவ்வையின் தண்டு முத்தங்
கமுகுவேர் வனச வேருங் கருதுசீ தேவி வேரும்
நமதுசெங் கழுநீர் மூலம் நன்னாரி சீந்தில் வேலி
அமரவோ ரொன்று பத்துப் பலமெட்டொன் றாகக் காய்ச்சே. "

" காய்ச்சுமந் நீருஞ் சாறுங் கலந்துநெய் நாழி விட்டுப்
பீச்சிடு மான்பால் நாலு படிவிட்டுப் பேசக் கேளாய்
வாய்ச்சநற் சந்தந் தாரம் மதுரஞ்செங் கழுநீர் கோஷ்டம்
கூச்சமில் கூகை நீறு குலாவிய கிராம்பு சாதி. "

" சாதிபத் திரியோ டேலந் தகரங்குங் குமநற் கோட்டம்
பேதித்த சிவதை ரோணி பேசுங்கற் பூரம் பத்திரி
சாதித்த மகரப பூவுஞ் சாற்றுபே ரீந்து முந்திரி
பூதொக்கக் கழஞ்சொவ் வொன்று மிவைவெந்து சீனி தூவே. "

" காலையிற் கடுகி ஞேடு கரண்டிநாற் பதுநாட் கொள்ளச்
சாலவே பித்த ரோகந் தலைகிறு கிறுப்பி ஞேடு
மூலவுட் டணங்கண் ஞேவு மொழிந்திடுங் காச மெட்டும்
மேலுநீர்ப் பாய்ச்சல் கண்ணில் மருவுநோய் விரைந்து போமே. "

(நாகமுனி நயனவிதி.)

## பித்த காசத்தின் அறுவை செய்முறை.

"காச வகையில் வரும்பித்தக் காசந் தீர்க்கும் வகைகேளீர்
ஆதி தன்னில் எண்ணெய் தன்ஞல் அவிழ்த மதஞல் தான் [பலிக்கும்.
யாதி சென்ருல் பலியாது பலியா பலிக்கும் சத்திரத்தால்
நீதி யுடைய பண்டிதர்க்கே நிற்கும் நில்லா மூடர்க்கே."

" மூடர் குத்தும் சத்திரந்தான் முட்டைத் தூர்போல் முளையாமே
வாடா நீளம் நல்விரலால் வைக்கோல் தாளின் பருமனதாய்
நாடாய் நீயு மிதனுடைய நவச்சித் திரனி லையறிந்து
கோடா வண்ணம் நெல்லளவு குறித்துத் தானுங் குத்திவிடே."

" குத்துங் காசம் முத்துப்போல் கூடிப் பிரியுங் குன்றுமல்
சற்றுங்களிம்பொன் றில்லாமல் தாம்பிரச் சலாகை முப்பட்டம்
முற்றும் ஆறு விரல்நீளம் முன்னும் பின்னும் விரல்நீக்கி
மற்று நிலையை வைத்தணைத்து வைத்துக் கட்டி குறைதீரே. "

" குத்துகை காசங் கேளீர் குவளைவெண் மேகம் போல
மற்றதின் கருப்ப துள்ளே வளைசங்கு நிறம தாகி
உற்றதன் பாவைப் பிள்ளை உளுந்தினிற் பாதி போன்றும்
குற்றங்கள் தெரியா தாகில் குவளையிற் குறித்துக் கொள்ளே."

" பத்திநெல் லிடைவிட் டப்பால் பலப்பட நூலால் சுற்றிச்
சித்திர மாகக் குத்திச் சிறந்ததோர் சலாகை விட்டுச்
சுற்றியே மூன்று காலஞ் சுழிதனில் நீலம் பாரில்
வெற்றியாய்த் தெளிந்து நன்ருய் விரைவுடன் வெளிய தாமே."

" வெளியது ஆன பின்பு வெச்சென அனல்தான் காட்டி
தெளியவே பஞ்சில் மஞ்சள் தேர்ப்பொடி தன்னை விட்டு
விழிதனில் கட்டி வைத்து மெத்தெனப் பேச்சுக் கொண்டு
புளியிலை யிடித்துக் கட்டிப் பெய்துதா ணவிழ்த்துக் கட்டே. "

"இப்படி மூன்று நாளு மிருந்தபின் னவிழ்த்து விட்டு
ஒப்புடன் பற்று வேது உகந்தநற் காய்ச்சுற் தண்ணீர்
செப்பமாய் மருந்து எண்ணெய் செயலுடனறிந்து செய்ய
ஒப்புமாய்ப் பித்த காசம் ஓடியே போகுந்தானே."
(அகத்தியர் நயனவிதி.)

### குத்தின கண்ணுக்குஒழுக்கு மருந்து

"மேவிய விஷநீர் மாற்றி வேதனை மிகுந்தி டாமல்
ஒவிய மனையாய் கண்ணில் ஒழுக்கிடு மருந்து கேளாய்
ஆவினெய் யதனிற றுத்தம் அபின்சீனக் காரங் கூட்டிக்
கூவியே வலிக்குங் கண்ணி லூறறியே குழைத்துப் பூசே."

"பூசியே நெற்றி மீது புதியவெண் பஞ்சைக் கட்டிக்
கூசிடா திமையின் மீதே கூரிய வெள்ளைச் சீலை
மாசறு ததனைக் கட்டி மறுபடி மூன்று நாளும்
வீசிடும் விழிகன் றும லனல்காட்டி விழிக்கச் சொல்லே."

"விழித்திடும் போது குத்தி வேதனை கண்ட போது
கழித்திடு மெட்டு நாளுங் கண்ணுள்ளே ஒழுக்கு நெய்கேள்
தெளித்திடு மதுரந் தாரஞ் சிப்பிநீ ரதன்சீர் கூட்டித்
துளிபட வொழுக்கும் போது விழிவரி துணுக்கும் போமே."
(நாகமுனி நயனவிதி.)

### காச மாத்திரை வேறு.

"உரைத்திடு முத்து வெள்ளி உயர்ந்ததாம் பிரமும் சங்கு
கரைத்திடுந் துருசு துத்தம் கலநதலை யோடு பொன்னும்
திரைத்திடு பீத ரோணி சேர்புங்கு நிம்பச் சாற்றில்
அரைத்திடுங் கண்ணில் நோய்தொண் ணூற்றுறும் அகன்று
[போமே."
(அகத்தியர் நயனவிதி.)

### காசக்குளிகை.

"சொன்னதோர் பூலா வேரின தோலது விரண்ட தாகும்
பன்னிய துத்தம் பாதி பகருநற் றுருசு பாதி
மன்னிய புளியம் பூவில் மாதர்தம் பாலிற் கூட்ட
உன்னிய கண்ணில் காசம் உயர்பில்லம் படலம் போமே."

### படலம்.

படலம் எழுக்கும் பெயர்.

"பேசிய படல மேழும் பெய்வளை மானே கேளாய்
கூசியே விழிசி வந்து கோழ்சதைப் படல மற்றும்
மாசுறு படல நீரால் மாரத்தப் படலத் தோடு
வீசியே வரிய டர்ந்த படலமின் னுங்கேள் மின்னே."

" கார்குழல் மானே கேளாய் கருநாகப் படல மோடு
சூர்விழி மந்த மாகும் மாங்கிசப் படலக் கூறும்
ஏர்பசு விழிய டர்த்தி என்றிவை மூன்றுந் தானே
நேரிலா சாத்தி யத்தின் குணமென நிகழ்த்தி னரே. "

சதைப்படலம், நீர்ப்படலம், இரத்தப்படலம், வரி எழுச்சிப் படலம், கருநாகப் படலம், அதிமாங்கிஷப் படலம், பசுவிழிப் படலம் என ஏழு வகைப் படும். இவ்வாறு நாகமுனி நயனவிதியில் கூறப்பட்டிருக்கிறது. அகத்தியர் நயனவிதியில் நாகப்படலம், வெள்ளைப் படலம், பஞ்சுநீர்ப்படலம், இரத்தப் படலம், நீர்ப் படலம் என ஐவகையாகக் கூறியுள்ளது.

இவற்றுள் தசைப்படலம், இரத்தப் படலம், நீர்ப் படலம், வரி எழுச்சிப் படலம் தீரும்—பிற தீராவாம்.

**1. சதைப்படலம் :**

"தெளிவுறு கருப்பி னுள்ளே சிவந்துநின் றுறுத்தி நோவாய்
வெளியினை யடைத்துக் கன்றிப் படலம்வீழ்ந் திடுமே யாகில்
அளியுறு குழலாய் கேளாய் சதையிது படல மென்று
மொழிவதா யுருவே தத்தின் முறைமையை யறிந்து கொள்ளே."

முதலில் கருவிழியில் ஒருவிதச் செம்மை நிறந் தோன்றிய பிறகு, அது கருமையாகவாவது நீலமாகவாவது மாறும். அதாவது கன்றிப் போனது போலிருக்கும். மணல் போன்ற பொருள்கள் புகுந்து கொண்டது போல் அருகலுடன் வலியுண்டாகும்.

**2. இரத்தப் படலம் :**

" கருத்திடுங் குமுறுங் காற்றால் கனத்திடு மிமைகள் வீங்கும்
எரித்திடுங் கண்ணி லெங்கு மிரத்தமே யெழுந்து காட்டும்
தெரித்திடப் புருவம் நெற்றி பிடருச்சி நீங்கக் குத்தும்
இரத்தமாம் படல மென்றே யியம்பினு ரியம்பி னரே. "

கருவிழியில் வாயுவால் இமைகள் வீங்கும். இரத்தங் கட்டிக் கொண்டது போலச் செம்மை நிறம் தோன்றிப் பிறகு மற்ற விடங்கட்கும் செம்மை நிறம் பரவும். நாளுக்கு நாள் கண்ணில் அதிகவலி, எரிச்சல் தோன்றும் கண் விழுந்து விடுவது போலிருக்கும் ; கண்ணில் பீளை சாரும். புருவம், நெற்றி, பிடரி, உச்சி இவ்விடங்களில் தாங்கக்கூடா வலியுண்டாம்.

**3. நீர்ப்படலம் :**

" சாலவே சிரசில் குத்துந் தாழநீர் விழுங்க னக்கும்
மூலமாங் கருப்பின் மீது முகில்போலு மயக்க முண்டாம்
ஆலவேல் விழியி னுளே அருவிநீர் மிகுந்து வீழும்
மூலமா முனிவர் கூறு முண்மைநீர்ப் படல மென்றே."

கருவிழியில் மேகநிறம் போல மாறுதல் உண்டாகும். இதனால் கண் பார்வை மங்கும். ஊற்றிலிருந்து நீர் சுரப்பது போல் கண்ணிலிருந்து நீர் வடியும். கீழிமை தடிக்கும்.

4. வரி எழுச்சிப் படலம் :

" கருவிழி யதனின் மீது கயிறுபோல் வளர்ந்து காட்டி
அருவியே பாய்ந்து குத்தி அழனறு நொந் துருத்துங் கண்டாய்
முருகவிழ் குழலி ளுளே முனவிழி புகைச்ச லுண்டாம்
வருமிது வரியெ ழுச்சிப் படலமாய் வழுத்து வாரே. "

கருவிழியின் மீது ஒரு கயிறு போலப் படர்ந்து பார்வையை மங்கச் செய்யும் கண்ணீர் வடியும். கண் அருகலுடன் உஷ்ணமாயிருக்கும்.

5. கருநாகப் படலம் :

" இந்திர தனுவஃதேபோல் இயல்நிறம் பலவு முண்டாய்
மந்தமாஞ் சூட தாகும் வருந்தியே குத்தி நோவாஞ்
சிந்து நீர் வீழ்ந்து காட்டித் திகழ்விழி யுந்துங் கண்டாய்
கந்தநற் குழலி ளுளே கருநாகப் படல மாமே. "

இந்திர வில்லைப் போலப் பல வண்ணங்கள் தோன்றிப் பார்வை மந்தப் பட்டுச் சூட்டுடன் வருத்தத்தைத் தந்து, குத்தலுடன் கூடிய நோயுண்டா கும். நீர் சிந்தும் ; விழி முன்னோக்கியிருக்கும்.

6. அதிமாங்கிஷப் படலம் :

" ஊச்சியின் சதையைப் போலக் கருவிழி யதனி லூறுங்
கூச்சமு மிடியு முண்டாங் கொதித்து நீர் மிகுந்து வீழுந்
தேச்சிடு விழிநல் லாளே சிரம்தடச் சீழு மோங்கும்
ஆச்சதி குணங்கள் கண்டால் அதிமாங்கிஷப் படல மாமே. "

கருவிழியில் ஊச்சியின் சதையைப் போலத் தோன்றி அருகலும், கூச்சமும் இடிப்பும் உண்டாகி, உஷ்ண நீர்வடிதல், பீளைசாரல், கழுத்து, உச்சி வலித்தல் ஆகிய குணங்கள் உண்டாகும்.

7. பசுவிழிப் படலம் :

" வசையறு கருப்பி னுள்ளே மரகதம் போன்று காட்டித்
தசை பறந் திடியும் நீரும் தழலது போலக் காந்தும்
இசையவே ஒளிவு மந்தம் இக்குணங் கண்ட வாறே
பசையறு மசாத்திய மாகும் பசுவிழிப் படல மாமே. "

கருவிழியில் மரகதநிறந் தோன்றி, கண்ணில் பரந்து இடிக்கும். கண்ணில் உஷ்ணமாக நீர்வடியும், ஒளி மந்தப்படும்.

இரத்தப்படலம், நீர்ப்படலம் இவ்விரு படலங்களின் குறிகுணங்களும் அகத்தியர், நாகமுனி இவ்விருவர் நயனவிதிகளிலும் ஒத்திருக்கின்றது. இனி இவை நீங்கிய மற்ற மூன்றின் குறி குணங்களையும் அகத்தியர் நயன விதியில் கூறியபடி கூறுவாம்.

1. நாகப்படலம் :

" கடைக்கண் ணிருபு றத்தில் காணவே சிவப்புத் தோன்றில்
துடைசதை போல வந்து சோதியைத் தின்னு நாளில்
அடைந்திடும் விழிகள் தன்னில் அதிகநீர் தினவு முண்டாம்
நடையடி குணங்க ளெல்லாம் நாகமாம் படல மாமே. "

இரு கடைக்கண்ணிலும் சிவந்து அழுத்தமான சதைவளர்ந்து வெண் விழியைக் கடந்து கருவிழியிலும் படர்ந்து அதன் நடுவிருக்கும் பாவையையும் நாட் செல்லச் செல்ல மறைக்கும். கண்களில் நீர் வடியும். அரிப்புண் டாகும்.

2. வெள்ளைப்படலம் :

" கண்ணினில் வெள்ளை தன்னில் கலந்ததோர் பாலி னுடை
உண்ணியே விழிக்கும் போது உறுத்திடும் உரைத்து வைத்து
நண்ணிய பளிங்கு போல நலமயிர் புகைந்து காட்டும்
வெண்ணிய மதிமு கத்தாய் வெள்ளையாம் படல மாமே. "

பாலைக் காய்ச்சித் தோய்த்து வைத்திருந்தால், மேலே இருக்கும் ஆடை போலக் கண்களை மூடித்திறக்கும் போதெல்லாம் உறுத்தும். சிலருக்குப் பளிங்கு போன்ற வெண்ணிறமாயும், சிலருக்கு மயிரைப் போலக் கருத்து மிருக்கும். பார்வை புகை கம்மியது போலிருக்கும்.

3. புஞ்சு நீர்ப்படலம் :

" ஏற்கப் படரும் விழியடங்க இயல்பாய் நோகும் வெளுப்பேறும்
நீற்கப் படவே புகைந்துவரும் சிறுக நீரும் பீளைசேரும்
ஊற்கப் படவே கடைக்கண்ணில் உறுத்தி வலிக்கு மொருநேரம்
பார்க்கக் குணங்க ளிவைதானும் புஞ்சுநீர்ப் படல மெனலாமே."

கண் முற்றும் வெள்ளை படர்ந்து வலியுண்டாகும். பார்வை புகைந்து காட்டும். நீர் சிறிதே வடியும். பீளை கட்டும். சில வேளைகளில் கடைக் கண்ணில் உறுத்தலோடு வலியுண்டாகும்.

மருத்துவம் :

" சீனக் காரம் ஒருகழஞ்சு சிவந்த காவி யரைக்கழஞ்சு
மானே யபினும் பணவிடைகொள் வறுத்தே பின்னும் பொடி [யாக்கித்
தேனுர் முலைப்பால் தனிற்கலக்கித் தீவத் தண்டி விழியொழுக்கப்
போனுர் படலங் கரைந்ததுதான் பொருந்தா தோடிப் போமென்றே."

புறவுலையம்.

" அரிதகி யெட்டி சந்த மகில்வில்வ மரத்தை யோடு
முறியதோர் மதுரந் தார முடன்தெறுங் கரியின் பல்லும்
அரிவையர் முலைப்பால் விட்டு அரைத்தபின் கலந்து காய்ச்சித்
தெரிவிழி சுற்றிப் பூசத் திகைத்ததி லோடிப் போமே."

ஒழுக்கு மருந்து.

துருசு, துத்தம், தேற்றுங்கொட்டை, பச்சைக்கற்பூரம், பசுவின்பல் ஆமையோடு, யானைத்தந்தம், வெள்ளி, கோழி நெஞ்செலும்பு இவை ஒரெடை, பழரசம் விட்டரைத்து மாத்திரை செய்துலர்த்தி வேண்டும்போது தாய்ப்பாலிலிழைத்துக் கண்களில் விடவும். இதனாற் படலந் தீரும்.

படலங்களுக்குச் சுட்டிகை அல்லது இரட்சை.

" இவையற மாறு தாகி லியல்மொழி மடங்க லென்னு
நவையறு கருவி யாலே நடுநரம் புறிந்து கொண்டு
குவையிரண் டதனின் மீதுங் கொதித்தெழும ரட்சை செய்யச்
சவையுறு முனிவர் சொன்ன தாரணை யறிந்து கொள்ளே. "

" அறிவுசெய் யேழு நாளு மழுந்தவே புண்ண தாக்கிக்
குறியுற முன்னே சொன்ன மருந்தோடு தாரை கொள்நீ
மறிவிலா விழியி னுள்ளே வந்திடும் படலம் போகும
நறைகமழ் குழலி னுளே நாடிநீ யறிந்து கொள்ளே."

மடங்கலென்னும் குற்றமற்ற கருவினாலே கண்ணினுள்ள நடுநரம்பு தெரிந்துகொண்டு சுடவேண்டும். இவ்வாறு சுடுவதால் உண்டாம் புண்ணை முன்சொன்ன மருந்தாலும் கீழ்கறிப்பிடும் தாரையாலும் ஆற்றிவிடலாம்.

" நறுநெய் யுழக்கு நத்தைசிப்பி நவிலு நீருஞ் சரிகூட்டி
யுறுநற் சீர மதிமதுரத் தோடு தேவ தாரமபின்
நறிய சீனக் காரமுடன் நாட்டு முருங்கைப் பூநீரும்
குறையா திதனைக் கூட்டிவெந்து குளிரத் தாரை கூட்டுகவே."

கருநாகப் படலத்திற்கு அறுவை மருத்துவம்.

" கருத்தாய் விழியிற் கடையுற்றுக் கருத்த சோதி யதனுள்ளே
மருவாய் வெள்ளை மேலோடி மருவிச் செந்நூ லதுஒப்பாய்
உருவாய் மேவித் திரண்டசெவ்வேர் உதித்த தோல்தன் தசைபோல
வெருவாய் வந்த நற்கண்ணில் விலிசங் கொண்டே உரியாயே."

கடைக்கண்ணிற்றோன்றி வெள்விழியின் மேற்படர்ந்து சிவப்பு நூல்போற் றோன்றிச் சதைபோல் தடித்து, கருவிழியையுங் கடந்து சோதிக்குச் சமீபத்தில் எட்டிப் பார்க்கும். இதை விலிசம் என்னும் கருவி கொண்டு உரித்து விடுவாயாக.

" விலிசங் கொண்டே யுரித்தபின்னர் வினவிக் கிரியை நீகேளாய்
தெளியும் படியே நெய்கொண்டு தியங்க ஒத்தி தானொழுக்கிப்
புளியந் துளிர்பூ லாவேரும் புதிய தேறல் தன்னுடனே
தெளியச் சீவி மூலைப்பாலில் தியங்க நறுக்கி வார்த்திடுமே. "

உரித்தபின் நெய் ஒற்றடஞ்செய்தும், கண்ணில் நெய்விட்டும், புளியந்தளிர், பூலா வேர் இவைகளுடன் நற்றேன் கூட்டி நறுக்கிப் பிழிந்து, தாய்ப்பாலையும் சேர்த்துக் கண்ணிலிடவும்.

## குமுதம்.

இந்நோய் அகத்தியர் நயனவிதியில் கூறப்படவில்லை.

### குமுதம் மூன்றுக்கும் பெயர்.

" கூறிய குமுத மூன்றின் பெயருடன் குணத்தைக் கேளாய்
சீறுசெங் குமுதத்தோடு தெளிகருங் குமுத மற்று
மீறுவெண் குமுத மூன்றில் விளங்குசெங் குமுத மொன்றும்
மாறிடும் மற்றி ரண்டு மசாத்திய மென்ன லாமே. "

செங்குமுதம், கருங்குமுதம், வெண்குமுதம் என மூன்றும். இவற்றுள் பின்னிரண்டும் தீரா.

### செங்குமுதத்தின் குணம்.

" சிவந்திடும் குமுதந் தானே செய்குறி யதனைக் கேளாய்
உவந்தநற் கறுப்பின் மீதே யுற்பல மலர்போ லுண்டாய்த்
தவழ்ந்திடு சதையு நீருந் தழலென வெரித்துக் குத்துங்
குவிந்திடு முலைநன் மாதே குறித்துநீ யறிந்து கொள்ளே. "

### கருங்குமுதத்தின் குணம்.

" கொள்கருங் குமுத மஃதின் குணமது கூறக் கேளாய்
தெள்கரு விழியின் மீது செறித்திடுங் குவளை போல
அள்ளிலை வேற்கண் மானே அரும்பொன்று விரண முண்டாய்
நள்ளிருள் போல மூடு மசாத்திய மென்ன லாமே. "

### வெண்குமுதத்தின் குணம்.

" மீறுவெண் குமுத மஃதின் குணமதை விளம்புக் கேளாய்
சீறுமே பஞ்சு போலச் சிதறியே புள்ளி யாகும்
வீறெனக் கொதித்துக் குத்தி வேதனை மிகவு முண்டாம்
மாறிட திடிக்குஞ் சூட்சம் மழுங்கிடு மசாத்திய மாமே. "

மருத்துவம் :

### குமுதங்கட்குக் கோதந்தாதி மாத்திரை.

" ஆவின்பல் லதனை நன்று யாம்பற்பூ நீரை வார்த்து
மேவிநீ யரைத்து வட்டாய் விளம்புநாற் பதுநாட் சென்றால்
கூவுவெண் சாவ லென்புங் கோட்டங்கோ ரோசனை யிந்து
தாவுபொன் வெள்ளி கஞ்சஞ் சார்பொடு துருசு துத்தம். "

" சொல்லிய சீனக் காரந் துலங்குமோ ரிதழின் மூலம்
நல்லசா ரடைவேர் சந்தம் நவில்திரி பலையின் வித்தும்
அல்லியங் கோதை நல்லாய் ஓரொன்று கழஞ்சாய்க் கூட்டிய
புல்லுசம் பீரச் சாற்று லரையெழு பொழுது மின்னே. "

" மின்னே பன்னீர் தன்னாலே மிருது வாக வரைத்துருட்டிக்
கண்ணே செங்கு முதந்தானே கருது பூப்ப டலங்காசம்
பண்ணோ யோடு திமிரமெல்லாம் பாற வேமுலைப் பால்விட்டுச்
சொன்னே னியரைத் துபபோடச் சோதி யாய்விளங் குங்கண்ணே."

### குமுதத்திற்குப் பொடி.

" துருசெலி மருந்து சீனக் காரஞ்சொல் மருநது மூன்றும்
உருகவே யோட்டின் மீதே வெந்ததை யாற விட்டு
மிருதுவாய நுணுக்கிக் கொண்டு விளம்பிய குமுதந தனனில்
ஒருதினை யளவு பத்துப் பொழுதிட வோடிப் போமே. "

### குமுதத்திற்குக் குழம்பு.

" கடல்நுரை துருசு சங்கு கருதிந்து மரிசி தேனும
மடலுறு துத்த மேழும் மருவுமா வெண்ணெய் கூட்டி
அடர்குழி யம்மி யிட்டு அரையொரு சாமஞ் சென்றால்
இடர்செய்யுங் குமுதந் தன்னி லெழுதிட வியம்பி னாரே."

### விழியுந்தல் மூன்றின் குணம்.

" விழியெழு குமுதத் தாலும் வேறுள வியாதி யாலுந்
தெளிகரு விழியி னுள்ளே செறிந்திடு நீரி னாலும்
முழியது மயக்க முண்டாய் மூண்டிடு மூன்று ரோகம்
அளியுறு குழலாய் கேளாய் அசாத்திய மூன்று மாமே."

பரிகாரம :

### விழியுந்தலுக்கு இரட்சை.

" காக்கையின் காலே போலுங் கருவியைச் சிவக்கக் காய்ச்சி
நோக்கிநீ நுதலின் மத்தி நுவன்றிடு பெருந ரம்பில்
தாக்கவே பிடரி ரோமஞ் சந்தித்த மையமீது
வீக்குவார் தனங்கொண் மானே விழியிரு புறத்துந் தானே."

" தானமாய் வைத்த மூத்திச் சங்கொடு கரியின் றந்தம்
தேனமர் தேவ தாரஞ் செஞ்சந்தங் கடுக்கா யைந்தும்
ஊனமில் தனப்பால் விட்டு உரைத்தபின் கூட்டிக் காய்ச்சிக்
கானவிர் குழலாய் நெற்றிப் படர்சுற்றுங் கனக்கப் பூசே. "

### நெரிசல் மூன்றின் பெயர்.

" கண்ணிலுட் டணத்தி னாலுங் கடுகிய மருந்தி னாலு
முண்ணிறை சிவப்பி னாலு மொதுங்கிய நீரி னாலுந்
திண்ணமாய் நெரிசலுண்டா மதன் பெயர் செப்பக் கேளாய்
எண்ணுநீர் நெரிசல் சோரி யுட்டண மதின்பேர் மூன்றே."

**நெறிசல் மூன்று வகைப்படும். அவை.** :—(1) உட்டண நெரிசல், (2) நீர் நெரிசல், (3) சோணித நெரிசல் என்பவையாம்.

### நெரிசல் மூன்றின் குணம்.

" உட்டிண நெரிசல் தானே உருண்டெழும் வெளுத்துக் காட்டு
மட்டுநீர் நெரிசல் மையங் குளுந்தென்னின் வடிவு போலாங்
கட்டமா மிரத்தத் தாலே கனத்திடு நெரிசல் தானே
மட்டவிழ் குழலி ஞளே மஞ்சாடி வடிவ மாமே. "

(நாகமுனி நயனவிதி.)

இந்நோய் அகத்தியர் நயனவிதியில் கூறப்படவில்லை.

### மருத்துவம்.

" குருதியின் நெரிசல் தானே அசாத்திய மென்று கூறுந்
தெரியிரு நெரிசலுக்குஞ் செய்மருந்து ததனைக் கேளாய்
உருகிய நறுநெய் தன்னி லூறிநீர் முருங்கைப் பூவும்
மருவுநற் சீரஞ் சீனக் காரமு மபினுங் கூட்டே. "

" கூட்டி நீ கொதிக்க வைத்துக் குறித்திடு போதுந் தாரை
நாட்டமாய் விட்ட வாறே நவின்றிடு நெரிசல் நோவு
மீட்டுமோர் குத்துச் சூடு மிகுமிடி போமே யென்று
கேட்டவர் முன்னோர் கூறும் கிரியைநீ யறிந்து கொள்ளே. "

### வரிமூன்றின் குணம்.

" கூர்கரு விழியின் மீதே கொண்டெழு வரியின் செய்கை
நீரிணு லிமையி னுள்ளே நிகழ்ந்திடும் வடுவி ஞலும்
வார்விழி மானே சோரி வைகியே செறிந்த தாலும்
நேர்வரி மூன்றுண் டாகு மிக்குண நிகழ்த்தக் கேளே ."

" நீர்வரிக் குணங்கள் தாமே வெண்மையாய் நெடுகிக் காணுஞ்
சேரிமை வடிவி ஞலே செறிவரி பிறையே போலாங்
கார்குழல் மின்னே சோரி வரியிரு கடையுந் தாவும்
பாரிதின் குணங்க ளெல்லாம் பலன்பட வறிந்து கொள்ளே."

" சொல்லிமை வடுவி ஞலே தோன்றிடும் வரியு நீராற்
புல்லிடும் வரியி ரண்டும் புகலுங்கால் அசாத்திய மென்ன
ஒல்லையி லிரத்தத் தாலே யுறுவரி தீரு மென்று
பல்பல நூலுஞ் சொல்லும் பழைமையை யறிந்து கொள்ளே. "

(நாகமுனி நயனவிதி.)

இந்நோய் அகத்தியர் நயனவிதியில் கூறப்பெற்றிலது.

**மருத்துவம் :**

### அஞ்சனம்.

" விளம்புநற் றுத்தந் தன்னை நுணுக்கிவெள் ளாட்டுப் பாலை
வளம்பெற நாழி விட்டு வற்றவே காய்ச்சிக் கொண்டு
துலங்குசம் பீரச் சாற்றி லரைத்தடை பிடித்து லர்த்தி
மிவிளங்கிழை ன்னே சட்டி மீதுவைத் தெரித்துக் கொள்ளே. "

"கொண்ணிறம் வெண்மை யாநுற் கூறும்வெண் கலத்தி லிட்டுத்
தண்ணுறு சங்கி ஞலே சாரமத் தித்துக் கொண்டு
திண்ணமா யெழுதும் போது சேர்ந்திடும் வரிச்சி வப்புங்
கண்ணிலே நில்லா தோடுங் கருதிநீ யறிந்து கொள்ளே."

## சுக்கிரன் ஐந்தின் பெயரும் குணமும்.

**1 2. விரண சுக்கிரன், கருத்த சுக்கிரன் :**

" அள்ளிளை நடுவேற் கண்ணுய் சுக்கிரன் ஐந்தின் பேர்கள்
ஒள்ளிய மணியின் மீதே யுறுவது விரண சுக்கிரன்
தெள்விழி சுற்றித் தோன்றித் திரைத்திடு முழுந்து போலு
முள்ளது கறுத்துக் கண்டாற் கருஞ்சுக்கிரன் னென்று பேரே."

**3. விழிவிழுங்கி சுக்கிரன் :**

" ஓதிய கருவி ழிக்குள் வரியிடை ஒண்ணி தாக
மோதுமூ மச்சி போல முழிதனில் சுற்றி மூடும்
வேதனை மிகுதி யாக வெரித்திடு மிடியு மாரு
தீதினே விழிவி ழுங்கிச் சுக்கிர னென்ன லாமே."

**4. வெண் சுக்கிரன் :**

" நடுவிழிப் பக்கத் தின்மேல் நனிபனித் துளிபோ லுந்தி
சுடுமணல் போலே காந்தி தோன்றிடு மெழுச்சி யோடு
கடலுறுஞ் சோகி போலுங் கருவிழி மறைத்துத் தாக்கி
யிடர்செய்யும் வியாதி தானே வெளுத்தசுக் கிரனென் ரேதே."

**5. அனற் சுக்கிரன் :**

" பானலங் கண்ணி னுள்ளே பகர்கரு விழியை விட்டுத்
தானமென் மேல தாகத் தழலது போலே தோன்று
மூனமா மிடியுண் டாக்கி யுள்ளழல் போலக் காந்தும்
தேனவிழ் குழலாய் கேளா யனற்சுக்கிர னென்று செப்பே."

**தீரும் தீராதவை :**

" செப்பிய ரோக மைந்துஞ் செய்குண மறிந்து கொண்டு
துப்புறு மசாத்தி யங்கள் சாத்திய முரைக்கக் கேளாய்
ஒப்பிய மணியின் மீதே யுறவெழும் விரண சுக்கிரன்
வெப்புறு கறுத்த சுக்கிரன் விழியினை விழுங்கி யாமே."

" ஆகிய மூன்றுந் தானே சாத்திய மென்ன லாகுந்
தோகையே வெள்ளைச் சுக்கிரன் துலங்கனற் சுக்கிரன் ரண்டும்
வேகமே தீர சாத்திய மென்றுதான் விளம்ப லாகுந்
தோகையே யிவைக்குஞ் செய்யும்ச் மருந்தினை சொல்லக் கேளே."
(நாகமுனி நயனவிதி.)

இனி அகத்தியர் நயனவிதியிற் கூறிய சுக்கிர ரோகத்தின் குணத்தைக் கூறுவாம்.

**சுக்கிர ரோகத்தின் குணம்.**

" வீங்கிடும் கண்ணில் வெள்ளை விதமுடன் பலவாய்க் காணும்
தாங்கியே கண்ணில் குத்தும் சதைமுளை குத்தி நேரும்
ஏங்கியே சிரசில் குத்தும் இருபுறம் கடைக்கண் புண்ணும்
தூங்கவு மொட்டா திந்த சுக்கிர ரோக மாமே. "

கண் வீங்கியிருக்கும், வெள்ளைவிழி சில சமயம் சிவப்பாயு மிருக்கும். சில சமயம் வெள்ளையாயு மிருக்கும், கண்ணில் குத்தல் வலியிருக்கும் முளை போலச் சதை வளர்ந்து குத்தி வலிக்கும். சிரசில் வலியிருக்கும். கடைக் கண்களிரு புறங்களிலும் புண்ணுக இருக்கும். தூங்கவொட் டாது.

**சுக்கிரனுக்கு நெய்.**

**மருத்துவம் :**

" நறுநெய் யுழக்கு அதிமதுரம் நல்ல சந்தந் தாரமுடன்
உறுவெட் பூலா வேருடனே ஓதுந் திரிபலை யிந்துப்பு
நறுவெள் ளாட்டின் செவியிரத்தம் நத்தைப் பூச்சிசிப்பி வெள்ளம்
பெறுநற் சீர மபின்கூட்டிப் பேணி வெந்து தாளெழுக்கே. "

**சுக்கிரனுக்குப் புறவளையம்.**

" இரும்பது சிவக்கக் காய்ச்சி எலுமிச்சம் பழநீர் விட்டு
உரம்பெறு கடுக்காய் சுக்கு மிவையந்நீ ராலு ரைத்து
நிரம்பவே நெற்றி கண்சுற் றதனினீ வளையப் பூசி
லரம்படு மருவி நீடு மனலுறு சிவப்பும் போமே. "

**சுக்கிரனுக்குப் பொடி.**

" சீனக் கார மதைநன்றாய்த் தீரப் பொடித்து முக்கூறு
மானே யபினற் சீரகமு மதற்குப் பாதி வடிகாவி
தாளெத் தனவொன் றாய்நுணிக்கித் தாயார் தனப்பால் தனிற் கலக்கி
மானே யனத்தித் தாளெழுக்க வருத்து மிடிகள் மாய்ந்திடுமே."

**சுக்கிரனுக்குச் சுவர்ணாதி யுண்டை.**

" கனகங் கழஞ்சு வங்கமிரு கழஞ்சு பீத ரோகணியும்
இனிமுக் கழஞ்சு துத்தமுநா லிந்து துருசு மைங்கழஞ்சு
முனியுஞ் சீனக்'காரமறு கழஞ்சோ ரிதழின் மூலமுமேழ்
நனியும் பன்றிக் கோரெட்டுக் கழஞ்சு கரிப்புல் நாலைந்தே. "

" கலையின் கொம்பு பதின்கழுஞ்சி கார மைந்தோ டையாறு
நலமாய் மதுரம் பன்னிரண்டு நவிலுந் தாரம் பதின்மூன்று
குலவுஞ் சேவல் நெஞ்செலும்பு கூட்டே மிரண்டு முதலைப்பல்
சொலநீ கேள்ப தினைங்கழஞ்சு சோகி பதினு றிவைகூட்டே."

" கூட்டி அரைநீ சம்பீரப பழச்சா றேழு நாள்கொடுப்பை
யீட்டுஞ் சாற்றி லேழுரைப்பு மிளநீர் தன்னி லேழுரைப்பும்
நாட்ட முடனே யுரைத்துருட்டி நாரி தனப்பால தனிற்போட
வாட்ட முடன்சுக் கிரன்படலம் மயக்குங காச மாறிடுமே. "

### சுக்கிரனுக்குக் கற்பூராதிப்பொடி.

" பச்சைக்கற பூரம் பீத ரோகணி மனோ கல் துத்தம்
நச்சிடுந் துருசிந் துப்பும் நாகமுஞ் சோகி பீங்கான்
துச்சிடுங் கோழி முட்டைத் தோடுகாக் கணத்தின் மூலம்
வைச்சவோ ரிதழின் மூலம் வளர்வெண்சா ரணைவேர் சீதை. "

" சிறுகீரை வேரொவ் வொன்று சேரமுக் கழஞ்சு கூட்டி
யுறுமெலு மிச்சங் சாற்றி லரைத்துண்டை ஓட்டின் மீது
மறுபடி வைத்தெரித்துப் பொடிசெய்து மானே கேளாய்
தெறுகனல் போலெழுந்த வியாதியி லிடவே தீரும். "

### சுக்கிரனுக்கு இரட்சை.

" விரணமே தீராதாகில் மெய்யிது வறியச் சொன்னோ
மறிவுசெய் பெருங்கண் மீது மணிநுதல் நரம்பின் மீதும்
குறியுற இரட்சை செய்து குறித்துமுன் சொல்ம ருந்து
நெறியுடன் செய்யும் போது சுக்கிரன் நீங்கிப் போமே."

### திமிரம்.

" மின்னனாய் திமிர தோஷக் குணத்தினை விளம்பக் கேளாய்
வன்விழி மயக்க மாகும் மற்றவெள் ளெழுத்தி னோடு
பின்மந்தா ரத்தின் மூனை வறட்சிசெய் பித்த சேற்பம்
மன்னுநீர் வாயு மேக மேழ்சாத்திய மூன்று மாமே".

**இது ஏழு வகைப்படும்**—அவை.—(1) வெள்ளெழுத்துத் திமிரம், (2) மாலைக்கண் திமிரம், (3) மந்தார திமிரம்—இம்மூன்றும் தீரா. 4) வறட்சித் திமிரம், (5) நீர்த்திமிரம், (6) வாயுதிமிரம், (7) மேகதிமிரம் ஆகிய நான்குந் தீரும்.

**1. வெள்ளெழுத்துத் திமிரகுணம் :**

" தெளிவுற வெளியாய் நிற்கும் தீங்கில்லை முப்பத் தேழில்
ஒளியறப் புகைந்து சற்றே ஒதுங்கிடு நாற்பத் தைந்தில்
வெளியுற விருளதா முகும மேவிய ஐம்பத தேழில்
அழிவுற விருளுங் கண்க ளாண்டது நூற தாமே."

**2. மாலைக்கண் திமிரப்பண்பு :**

" கூர்விழி மணியி னுள்ளே கொழும்புகை முகிலே போலக்
கார்கிழிந் தொதுங்கி நிற்குங் காண்பது மஞ்சள் போலாம்
வார்முலை மானே யன்று வைத்தநேர் தப்பிக் காணுந
தேர்குணங் கண்ட வாறே வெள்ளெழுத் தென்று தேரே."

**3. மந்தார திமிரக் குறிகுணங்கள் :**

"சேர்கரு விழியின் மீதே செறிந்திடும் பஞ்சு போலக்
கூரிருள் நேர மாகுல் குழம்பியே யுலேயுங் கண்டாய்
சீரொரு சாமஞ் சென்ருல் தெளிவுறு மேதோ வென்னில்
வார்தன மானே கேளாய் மந்தார திமிர மாமே."

**4. வறட்சி திமிரவியல் :**

"மூளையிற் பித்த நின்று முதிரவே வறட்சி யாகுல்
நாளிலே விழியு மந்தம் நடுநரம் புள்ளே குத்தும்
பீளையும் நீரு மாறு திக்குணம் பெருகக் கண்டால்
வாளைவென் றிட்ட கண்ணுய் வறட்சியாந் திமிர மெனவே."

**5. நீர்த் திமிரக்குணம் :**

"கபமது அமிர்த மீது கழித்துநீர் மிகுதி யாகி
நவிலுமூக் கடைத்து அண்ணுக் கதுவினிற் புண்ணே யாகும்
குவையிரு புறமுங் குத்துங் கூர்விழி புகைச்ச லுண்டாம்
இவையினி நீரால் வந்த திமிரமென் றறிந்து பாரே."

**6. வாயு திமிரப்பண்பு :**

"உந்தியில் வாயு தங்கி உச்சியில் குத்த லுண்டாய்
முந்திய விழியும் நொந்து மூடிய விருள்போ லாகில்
வந்தது விழியின் மீது வாயுவாம் திமிர மென்று
சுந்தர வதன மாதே தொகுத்துநீ அறிந்து கொள்ளே."

**7. மேகத் திமிரக்குணம் :**

"ஆக்கையிற் ருது கெட்டு அடர்நரம் புகள்மெ லிந்து
நோக்கிடும் விழியின் சுற்றி நோய்மைசே ரொளிம ழுங்கி
வீக்கிடும் கனல்மி குந்து விழியினி லெரிவுங் காணில்
தேக்கியல் மொழியாய் மேகத் திமிரமீ தென்று செப்பே."

**திமிரம்.**—நாக முனி நயன விதியில் கூறியபடி கூறப்பட்டது ; இனி அகத்தியர் நயன விதியில் கூறியதைக் காண்போம்.

**திமிரக்குணம் :**

"மறக்குங் கடுக்கும் கரகரக்கும் மாரு வாதை தான்பெருக்கும்
உறக்குந் தலைமுகந் தந்திருக்கும் ஊறும் நீரும் பீளையிடும்
பறக்கும் விழியும் வெளுத்துவரும் பார்வை குணமும் பலவாகும்
திறக்கு நயன குணந்தானே திமிரம் வகையின் செயல்தானே."

கண்கள் கடுக்கும், கரகரக்கும், துன்பமதிகமாயிருக்கும். தூக்கம் வரும், தலையிலும் முகத்திலும் அரிப்புண்டாகும். நீர்வடியும், பீளை கட்டும், கண்கள் வெளுத்துத் தோன்றும், பார்வை பலவிதமாய்க் காணப் படும். இவை திமிரத்தின் குணங்களாம்.

**மருத்துவம் :**

**திமிரத்திற்குக்குழம்பு.**

"ஆவின்பா லுரியிற் துபபு அரைப்பல மதனுள் ளிட்டு
மேவியே சுவறக் காய்ச்சி மேலிடு மருந்து கேளாய்
தாவுவெண் கலத்திற் சாறித் தலையோடு துருசு சங்கு
நீவிரைந் தொருக முஞ்சு நிகழ்த்துமா வெணணெய் கூட்டே."

"கூட்டி யரைத்து பணவெடையாய்க் குறித்துப பத்து நாளெழுத
ஆட்டுந் திமிரம் படலமுடன் அநேக வியாதி தீருமென்னக
கேட்டுச் செய்ய முனியுரைத்த கிரியை படியே செயவீரேல்
நாட்டந் துலங்கு மெனவாயுள் வேத முனிவர் நவின்றதுவே."

**திமிரத்திற்குப் பச்சைத் தாப்பிராதி மாத்திரை.**

"படிகம் பணிலம் நிமிளைதுத்தம் பஞ்ச லோகந் தன்னுடனே
கடிய கரிப்பல் லேணப்பல் கடலிற் சோகி நீறறுக்கல்
அடலி லாமை வோட்டெடுசீ ரகமோ ரிதழின் மூலமுடன்
திடமா முதலைப் பல்தேற்றான் சிறுகீ ரையின்வேர் காக்கணமே."

"மேவுஞ் சீனக் காரமுடன் மிகக பீத ரோகணியுங்
கூவுஞ் சேவல் நெஞ்செலும்புங் குலவு பீங்கான் கடல்நுரையு
மாவின் பல்லுங் கலைக்கொம்பு மாக வோரொன் றரைக்கழஞ்சு
பாவுந் துருசு பதின்கழஞ்சு பரிந்தெலு மிச்சம் பழஞ்சாறே."

"சாற்றி லேழு நாளரைத்துத் தயங்குங் கோழி வெண்கருவி
னீற்றி னரைத்துக் குளிகைசெய்ய நிழலி லுலர்த்தி வைத் *திருந்து
மூத்த கோவின் சுழியுறவே முனிந்தே யுருட்டிக் கொண்டிதனை
நீற்ற தனப்பால் தேன்நெய்யி லெழுதத் திமிரம் நீங்கிடுமே."

**வேறு :**

**திப்பிலியுருண்டை.**

கடுக்காய் 2, திப்பிலி 3, மிளகு 5 பங்காக நெல்லிக்காய்ச் சாறு விட்டரைத்துத் தாய்ப்பாலிலிழைத்துப் போடத்தீரும்.

**தான்றிக்காயுருண்டை.**

மஞ்சள், வேப்பிலை, தான்றிவித்து, திப்பிலி, சங்குப்பொடி, மஞ்ஞசிலை இவற்றை ஓரெடை வெள்ளாட்டுப் பாலிலரைத்து உலர்த்தித் தாய்ப் பாலிலிழைத்துப் போடவும்.

**குறிப்பு.**—மின்மினிப் பூச்சியை வாழைப் பழத்தில் பொதிந்து கொடுக்க மாலைக்கண் திமிரம் தீரும். தும்பைப் பூச்சாறும் கோழியவரைச் சாறும் பயன் தரும்.

**தாந்திரீகம்.**—பேசாமல், செப்புநெரிஞ்சிலை வேருடன் பிடுங்கிக் காதில் கட்டிவிட வேண்டும்.

வறட்சித் திமிரத்திற்குப் பழக் கிராம்பு பக்குவ வெண்ணெயைப் பயன் படுத்தலாம்.

**பூ மூன்றின் பெயரும் பண்பும்.**

"பூவையே பூமூன் றென்று புகலும் பேரதனைக் கேளாய்
தாவுவை சூரி யாலுந் தழலெழு வியாதிய றாலும்
மேவிய நீரினாலும் விழியிடை மூன்று ரோகங்
கூவிய ஆணி யுந்தல் குழம்பிய புகையா மூன்றே."

"மூன்றினி லாணி யுந்த லசாத்திய மென்பர் முன்னோர்
ஊன்றுவெண் புகைப்பூ வொன்று மொழியுமென் றறிந்து கொள்நீ
கான்றெழு பூமூன் றுக்குங் கருதிய குணத்தைக் கண்டு
சான்றிடு மருந்து தன்னைச் சாற்றக்கேள் தைய லாளே."

(நாகமுனி நயன விதி.)

**மருத்துவம் :**

**யானைப்பல்லதிக்குளிகை.**

"தந்தி யெயிறு தனைப்பொடித்தே எடுத்துக் கொண்டு தானதிலே
அந்த செறிந்த புளியாரை யதனைக் கூட்டி யரைத்துவட்டாய்
முந்த மறையோர் மொழிந்தபடி முழுமண்டலமே முதற்கிடந்தாற்
கந்தஞ் செறிந்த குழலீரே கருதி யரைக்கும் படிகாணீர்."

"காணீர் துத்தங் கழஞ்சுடனே கனகச் செம்பின் பொடிகழஞ்சு
ஊணி யரைத்துக் குளிகைசெய்து ஒளிர்சம் பீரப் பழச்சாற்றில்
பேணி யுரைத்து விழியெழுதப் பேரும் விரண சுக்கிரனும்
ஆணிப் பூவு மதிலுண்டா மரிய நோயு மடராதே."

**நந்தியாவர்த்தாதி பிழிமருந்து.**—நந்தியாவட்டம்பூ, முருங்கைப்பூ, நெருஞ்சிப்பூ, ஆடாதோடைப்பூ இவற்றைச் சுத்தமான மெல்லிய துணியில் முடிந்து கண்ணிற் பிழியவும்.

**வேறு.**—கடப்பமலர், வெள்ளிலோத்திரம், துத்தம், பீதரோகணி, தாமரைக் கிழங்கு, அதிமதுரம், பச்சைக் கற்பூரம், மண்ணடையோடு ஓரெடை— 24 மணி நேரம் தேனிலரைத்துக் கண்ணிலிடவும். இதனால் சுக்கிரனுந்தீரும்.

வேறு.—ஆவாரைப்பூ, அல்லிப்பூ, பருத்திப்பிஞ்சு, சீரகம், மாதுளம் பிஞ்சு, அத்திப் பிஞ்சு, தான்றிக்காய், கொட்டைப்பாக்கு, துவரம் பருப்பு இவற்றை ஒரெடை யெடுத்துத் தாய்ப்பால் விட்டரைத்துக் கருப்பஞ் சாற்றில் கலந்து வடிகட்டிக் கண்ணில் துளிக்கலாம்.

### குந்தநோய் மூன்றின் பண்பும் மருத்துவமும்.

"குறித்திடு குந்த மூன்றின் குறிகுணங் கூறக் கேளாய்
உறுத்திய சதையா மொன்று உதிரமொன் றுடனீ ரொன்று
மறுததிடு ரோக மூன்று மசாத்திய மாகுங் கேளாய்
செறுத்திடு மணியை விட்டுத் திரண்டிடிற் சதைநீர் தீரும்."

"ஒள்ளல்போ லேயெ ழுந்த உதிரத்தின் குந்தந் தன்னைத்
தள்ளசாத் தியமா மென்று தசையினிற் குந்தந் தீர
அள்ளிலை நெடுவேற் கண்ணு யளைபீத ரோணி துத்தந்
துள்ளொலி மருந்தி னோடு துருசுநற் சீனக் காரம்."

"கடனுரை சங்கு சோகி கருதுமொன் பான்ம ருந்தும்
அடலிலே நந்திப் பூவி னீரிணு லரைத்து லர்த்தித்
திடமுற வெளுக்கச் சுட்டுச் சேரமத் தித்துக் கொண்டு
உடனெழு குந்தந் தன்னி லெழுதிட ஓடிப் போமே."

**மருத்துவம் :**

### நெல்லிப்பருப்புருண்டை.

நெல்லிப்பருப்பு 3 பங்கு, புங்கம்பருப்பு 4 பங்கு, கரிசாலைச் சாறுவிட்டரைத்துலர்த்தித் தேனி லிழைத்துக் கண்ணிலிடவும்.

**புங்கு சங்கரதி மாத்திரை.**—புங்கம் வித்து 8, துத்தம் 4, துருசு 2, இந்துப்பு 1, திப்பிலி ½ பங்காக எடுத்துப் பழச்சாறு விட்டரைத்துலர்த்தி, தாய்ப்பாலிலரைத்துப் போடவும்.

**மனோசிலைமை.**—மனோசிலை, இந்துப்பு, கடல்நுரை, சங்கு, பீதரோகணி, செங்கற்பொடி, சந்தனம் இவற்றை நன்றுகப் பொடித்துப் பசு நெய்யில் மைபோலரைத்துக் கண்ணிலிடவும்.

### வெள்விழி நோய்கள் 20.

"மின்னனுய் வெள்ளை தன்னில் மேவுநோ யிருப துக்கு
மன்னுபேர் குறிகு ணங்கள் வகுத்திடு மருந்து கேளா
யன்னதின் செய்கை தன்னை யாயுள்வே தத்தெடுத்துப்
பன்னுநற் றமிழால் முன்னோ ருரைத்தவை பரிந்து சொல்லே."

"சொல்லிய எழுச்சி யைந்து துளங்கிய படர்த்தி மூன்று
புல்லிய நெரிசல் மூன்று புற்றெடு குமுள மூன்று
நல்வரி மூன்று மாக நாலைந்து தோஷப் பேர்கள்
வல்லியே எழுச்சி யைந்தின் குணத்தினை வழுத்தக் கேளே."

அவை.—எழுச்சி 5, படர்த்தி 3, நெரிசல் 3, புற்று 3, குமுளம் 3, வரி 3, என இருபதாம்.

**எழுச்சி ஐந்தின் குறிகுணங்களும் தீர்வன, தீராதனவும்,**

"தோன்றிய வரியெ ழுச்சி சுணங்குபோன் றுருண்டு காட்டுங்
கான்றெழு விரணவெ ழுச்சி கருங்குன்றி போன்று காட்டும்
ஊன்றிய குவையெ ழுச்சி உழுந்தது போலவாகு
மான்றநீ ரெழுச்சி தானே அப்பினிற் றுளிபோலாமே."

"ஆகுமுத் தெழுச்சி தானே யன்றெழும் பருத்திக் காய்போல்
தோகையே யெழுச்சி யைந்தில் தோன்றுமுத் தெழுச்சி யோடு
வேகமாம் விரணவெ ழுச்சி யிரண்டுமே மீளா தென்றே
நாகமா முனிவன் சொன்ன நயனத்தின் விதியில் வாறே."

"ஓங்கிய வரியெ ழுச்சி ஓடுநீ ரெழுச்சி மற்றும்
வீங்கிய குவையெ ழுச்சி மூன்றுமே சாத்திய மென்க
ஆங்விகக் குணங்க ளெல்லா மடைவிலே யறிந்து கொண்டு.
பூங்கொடி யதற்குச் செய்யும் மருந்திணை புகலக் கேளே."
(நாகமுனி நயனவிதி.)

இனி அகத்தியர் நயன விதியில் எழுச்சி யென்றும் உண்டையெழுச்சி யென்றும் இரண்டாக வகுக்கப்பட்டுள்ளது.

**எழுச்சி.**

"காதுகள் புருவம் நெற்றி கதிக்கவே குத்தி வாங்கும்
தீதுகள் முளைக்குங் கண்ணில் திரண்டுதான் வெளுப்பு காட்டும்
மீதுதா னீரும் பாயும் மீன்விழி போலே தோற்றும்
ஏதுதா னிதன்கு ணங்கள் எழுச்சியா மென்று சொல்லே."
(அகத்தியர் நயன விதி.)

காதுகள், புருவங்கள், நெற்றி இவை குத்தி வலிக்கும். கண்ணுக்குள் சதை வெளுத்துத் திரண்டு முளைத்திருக்கும். நீர் வடியும். கண்ணைப் பார்த்தால் மீனெண்ணெய் போலிருக்கும்.

**உண்டை யெழுச்சி.**

"காது கண்ணில் குத்திநொந்து கனக்க வீங்கும் செவியடங்கும்
மோதி சிவந்து விழிகூசி முத்துச் சீயும் காதில் வரும்
சோதி தினவுங் கடைக்கண்ணைச் சுறுக இறுக்கும் நீர்வடியும்
ஊதி கண்ணுந் தினவுண்டாம் உண்டை யெழுச்சி எனலாமே."
(அகத்தியர் நயன விதி.)

காது, கண் இவைகளில் குத்தலுண்டாகி வலித்து வீக்கமுண்டாம். காது செவிடடையும். கண் கூச்சத்துடன் சிவந்திருக்கும். காதில் துளித் துளியாய் சீழ் வடியும். பாவை நடுவில் அரிப்புண்டாகும். கடைக்கண்ணில் சுறுக்கென்று குத்தும். நீர் வடியும்; கண்கள் வீங்கும்.

மருத்துவம் :

இந்துப்பு நெய்.

"வெண்ணெயி லபினிந் துப்பு மேவுநற் சீர மூன்று
நண்ணுறக் கூட்டிக் கொண்டு நற்கொதி கொதிக்க வைத்து
ஒண்ணிறத் துணியி லிட்டு ஒழுக்கிடத் தாரை யாகக்
கண்ணிடை யெழுச்சி ரோகங் கடுகவே ஓடுங் காணே."

எழுச்சிக்குப் புறவளையம்.

"பழகிய காடி நீரிற் பழம்புளி தனைக்க ரைத்து
இளகிய அபினிந் துப்பு விட்டதை யிளகக் காய்ச்சி
மழையென நீர்த தும்பும் கண்ணிடை வளையம் பூச
அழலெழு விழியெ ழுச்சி யிடிவலி யகன்று போமே."

எழுச்சிக்கு இரட்சை.

"புள்ளடிக் கருவி தன்னை யணைத்துநீ புருவத் தின்மேற்
றுள்ளிட வைத்த ணத்தித் தோய்த்திட வழுத்தி ஏழ்நா
ளுள்ளது கழித்த வாறே எண்ணெயிற் புண்ணை யாற்றிக்
கொள்ளவே யெழுச்சி யைந்துங் குலைகுலைந் தோடுங் காணே."

படர்த்தி மூன்றின் குணமும் தீரும் தீராதவையும்.

"விளம்பிய சதைப்ப டர்த்தி மெத்தெனத் தடித்துக் காட்டும்
வளம்பெரு வரிப டர்த்தி வலையென வளைந்து காட்டும்
விளங்கின மின்னே சோரிப் படர்த்தியு மிகக்கு ழம்பும்
உளங்கொளிக் குணங்கள் தம்மில் வரியொன்றுஞ் சாத்திய
[மாமே."

(நாகமுனி நயனவிதி.)

மருத்துவம் :

அமுதாஞ்சனப் பொடி.

"சீந்திற் றண்டு நற்கடுக்காய் தேற்றான் கொட்டை காக்கணவேர்
போர்ந்த கொடுப்பை சிறுகீறை புகலோ ரிதழின் மூலமுடன்
ஆய்ந்தோ ரொன்று சமன்கூட்டி யரைநீ பழைய காடியிலு
லேந்து தனத்தாய் துருசுதுத்த மினிய சீனக் காரமுமே."

"மேவு மபின்சுண் ணும்புக்கல் மிக்க நிமிளை சோகிசங்கு
பாவு மருந்து முக்கழஞ்சு பகர்சம் பீரப் பழச்சாற்றில்
தாவி யரைத்து அடையாக்கித் தழலி லெரித்து நுணுக்கியதைக்
கோவித் தெழுந்த படர்த்தியினி லிடவே குணமாங் குணமாமே."

[கொடுப்பை = பொன்னாங்காணி.

நெரிசல் மூன்றும் மருத்துவமும்.

"துளியுந்து விரண மூன்று சொல்லிய நெரிசலின் பேர்
மொழிவது மூன்று மாகும் மொழிந்திடு மருந்து கேளாய்
தெளியுநெய் யோடிந் துப்பு திரிகடு துருசு துத்தம்
அளியுறு குழலாய் கூட்டி அரைத்துநீ தாரை வாரே."

(நாகமுனி நயனவிதி.)

மருத்துவம் :

வேறு.

"சீனக்கார முக்கழஞ்சு செரியு மிந்துப் பரைக் கழஞ்சு
பானற் றுருசு காற்கழஞ்சு பகர்கற் பூரம் பணவெடைகொள்
தேனே வெதுப்பி யிவைநுணுக்கிச் செய்ய முலைப்பால் தனிற்கலக்கி
மானே யரைத்து விழியொழுக்க வருத்து நெரிசல் மாய்ந்திடுமே."

புற்று மூன்றின் குணமும் தீரும் தீராதவையும்.

"அன்னமே சதையின் புற்று அறும்புநீர்ப் புற்றி னோடு
வன்னமா மணலின் புற்று வருத்திடு ரோக மூன்றில்
முன்னுரை மாங்கி ஷத்தின் புற்றுநீர் முந்து புற்று
அன்னது சாத்தி யங்க ளனலொன்று மசாத்திய மாமே."

"தசைவளர்ந் தெழுந்த புற்றில் தடித்திடு மிரத்தம் போன்று
பதையுநீர்ப் புற்றின் செய்கை பரிந்துவெண் குன்றி போலாம்
விதனமா மணலின் புற்று விம்பம் போன் றெழுந்துகாட்டு
மதையுணர்ந் ததற்குச் செய்யும் மருந்தினை யறிந்து கொள்ளே."

மருத்துவம் :

அஞ்சனப் பொடி.

"உமரிச் சாரம் நவச்சார மோதுந் துருசு எவட்சார
மமையுஞ் சக்தி சாரமைந்து மடுத்தோ ரொன்று கழஞ்சுகொண்டு
குமைய வரைத்துச் சம்பீரங் குலவு சாற்று லடையாக்கி
அமுத மொழியா யோட்டினில்வைத் தனலால் வெளுக்கப் புடம்
[வையே."

"வையே யெடுத்து வெண்கலத்தில் வைத்து வளையால் மத்தித்து
மெய்யே சொன்னே னெள்ளளவு விழியி லெழுதப் புற்றுடனே
தொய்யும் படலம் வரிசிவப்பு தோன்று மெழுச்சி மற்றவையும்
தொய்யிற் றனத்தா யிவைதீருஞ் சொன்னார் முனிவர் சொன்னாரே"

குமிளம் மூன்றின் பண்பும் தீரும் தீராதவையும்.

"கொடியிடை மானே சொன்ன குமிளமூன் றேதோ வெண்ணில்
வடியுநீ ரிரத்த மற்ற மாங்கிச மென்று மூன்று
மடைவிலே யறிந்து கொள்நீ யசாத்திய மாங்கிச மற்று
மிடரில்லை நீரி ரத்த மேகுமென் றியம்பி னாரே."

(நாகமுனி நயனவிதி.)

"நாரியே நீரி னாலே நயந்தெழு கொப்பு ளந்தான்
கூறிய சங்கம் பழம்போல் குமிழிக்கு மிரத்தத் தாலே
சேறுமாங் கொப்பு ளந்தான் செங்குன்றி வடிவ தாகும்
பார்தசைக் கொப்பு ளந்தான் பணைத்தெழுங் கருமை யாமே."
(நாகமுனி நயனவிதி.)

மருத்துவம் :

குமிளக்குழம்பு.

"இந்துப்பு துருசு துத்த மெழுகட னுரையு ரோணி
முந்துநற் சீனக் காரம் மொழியுமா வெண்ணெய் கூட்டி
நந்தினுற் கஞ்சத் திட்டு நையமத் தித்துக் கொண்டு
முந்துறு குமிளத் திட்டாற் றீர்ந்திடு மென்பர் முன்னோர்."

வரி மூன்றினியலும் தீரும் தீராதவையும்.

"வம்பவிழ் கூந்தல் மானே வரியதின் குணத்தைக் கேளாய்
பம்புவெள் வரியா மொன்று பகர்நீல வரியா மொன்று
வெம்பிய விரத்த மொன்று விளம்பிய மூன்று ரோகம்
நம்பிநீ யறிவை நீல வரியொன்று மசாத்திய மாமே."

"விளம்புவெண் வரியின் செய்கை மீன்சிலாம் பெழுதல் போலாம்
இளங்கிளி மின்னே நீல வரியது துருசு போலாம்
துளங்கிய விரத்தத் தாலே சோர்வரி சிவப்ப தாமென்
றுளங்கொள இதற்குச் செய்யும் மருந்தினை யுரைக்கக் கேளே."

மருத்துவம் :

"துருசினை எலுமிச் சன்றன் பழத்தினீர் துளங்க விட்டு
அரையடை பிடித்து லர்த்தி யதுதனைச் சட்டி யிட்டு
எரியொரு சாமஞ் சென்று லெடுத்துமத் தித்துக் கொண்டு
வரியிலெள் ளளவு தாக வைத்திட மாய்ந்து போமே."

இனி, கண் இமையில் வரும் நோய்களின் வகை விரிகளையும், அவற்றின் பெயர், குறி குணங்கள் மருத்துவம் முதலியனவும் கூறப்படும்.

இமை நோய் வகை.

"சுற்றிய இமையின் தோடம் தோன்றிய பதினா றுக்கு
முற்றிடு பெயர்கு ணங்கள் ஓதிய மருந்தி னோடு
கற்றிடும் சாத்தி யங்க ளசாத்திய முறையே காட்டி
விற்பொலி நுதலி னாளே விளம்பினர் முனிவர் தாமே."

"ஆனதோர் பில்ல மூன்று அணைந்திமைத் தடிப்பி னோடு
நான்முட மயிரி ழிச்சக் கண்பற்ப ரோகம் மூன்று
ஈனமாங் கழலை மூன்று இமையுநீர் சுற்று நீங்கல்
மானனுய் புழுவி னோடு உயர்ச்சிபன் னுறுந் தானே."

(பொருள்).—(1) பில்லம் 3, (2) இமைத்தடிப்பு 1, (3) முடமயிர் 1, (4) இழிச்சக்கண் 1, (5) பற்ப ரோகம் 3, (6) கழலை 3, (7) இமைநீர்ப் பாய்ச்சல் 1, (8) சுற்றுக்குலைவு 1, (9) புழுக்கடி 1, (10) இமையுயர்ச்சி 1.

பில்லம் மூவகைப்படும், அவை :—(1) நீர்ப்பில்லம், (2) அமரபில்லம், (3) குடற்பில்லம்.

1. நீர்ப்பில்லத்தின் பண்பு :

"மெல்லிய விமையு மூர்ந்து வீழுநீர் மிகுதி யாகிக்
கல்லெனக் கனத்து விம்மிக் கண்சுற்றுப் புருவ முச்சி
சில்லென விடித்து நோவாய்த் திமிர்த்திரு மிக்கு ணங்கள்
வல்லெனு மூலையாய் சொன்னேன் வழுத்துநீர்ப் பில்ல
மென்றே."

2. அமரபில்லம் :

"சொல்லிய விமையி னுள்ளே சோரிபோற் றசையுந் துன்னிப்
புல்லிடு மொளிம யங்கிப் போகநீர் வடிந்து காட்டி
எல்லையி லிமை மடிந்து கீழிமை யுறுமே யாகி
அல்லியங் கோதை நல்லா யமரத்தின் பில்ல மாமே."

3. குடற்பில்லம் :

"இமையடி புருவ முச்சி யிளகிநீ ரிழிவு மாகி
யமைபசு நரம்பு துன்றி யதுகனத் திடுமே யாகில்
குமுதமாம் விழியி னுளே குடலுறு பில்ல மென்று
இமையவ ரறியச் சொன்னோம் இதுகுடற் பில்ல மாமே."

(நாகமுனி நயனவிதி.)

இனி, அகத்தியர் நயன விதியிற் கூறிய பில்லங்களைப்பற்றிக் கூறுவாம்.

1. பில்லம் :

"கருகிய யிமையி னுள்ளே கதித்ததுர் மாமிசம் போல
அருவியே யுறுத்தி நொந்து அதிகமாய்ச் சிவந்து கூசும்
மருவிய பூவுந் தோன்றும் மாருதே பீளை பாயும்
பெருகிய நீரு முண்டாம் பில்லமா மென்று சொல்லே."

இமையின் உட்புறத்தில் தடித்த துர்மாமிசம் வளரும். கண் இமைக்கும் போதெல்லாம் வளர்ந்திருக்கும் துர்மாமிசமானது விழியில் அருவி உறுத்தி நோயுண்டாக்கும். கண் சிவந்திருக்கும். கூச்சமுண்டாகும். கருவிழியில் பூ உண்டாகும். அடிக்கடி பீளை சேரும். மிக்க நீர் வடியும்.

2. சூழ்ந்திடும் பில்லம் :

"வளர்ந்திடுங் கீழு மேலும் வலுப்படுச் சதைசி வப்பு
உளைந்திடுங் கண்ணைச் சுற்றி உறுத்தியே நீரும் பாயும்
கனத்திடும் மணிபோ லாகும் கருமணி குறித்து நிற்கும்
சூழ்ந்திடும் பில்ல மென்று சொல்லுவா ரிதனைக் கண்டே."

இமையிலும் குவளையிலும் சதை வளர்ந்திருக்கும், முதிர்ந்த சிவப்பாயிருக்கும். கண்ணைச் சுற்றி உளையும், கண்ணை உருத்தி நீர் வடியும், இமைகள் கனத்திருக்கும், கருவிழி அசைவில்லாம லிருக்கும்.

3. *நீர்ப்பில்லம் :*

"இமையைக் கடுத்து மேல்கனத்து இடுக்கி நீரும் பீளையிடும்
குமையச் சிவந்து வெளுப்புண்டாம் கூசி விழியும் கீழ்நோக்கும்
சமையத் திரண்டு புருவங்கீழ் சதையும் வளர்ந்து உறுத்துவிக்கும்
நிமையைத் திறக்கில் சதைமூடும் நீர்ப்பில் லம்மிஃ தென [லாமே."

இமையில் கடுப்புண்டாகி மேலிதழ் தடித்திருக்கும், கண் இடுங்கி இருக்கும், மிக்க நீர் வடியும், பீளை சாரும், சிலநாள் கண்கள் சிவந்து இருக்கும், மருந்திடாமலே சிலநாள் வெளுத்து இருக்கும், கண் கூசும், பார்வை கீழ்நோக்கி யிருக்கும். மேலிமைக்குள் சதை திரண்டு வளர்ந்து உறுத்தலுண்டாகும். மேலிமையைப் புரட்டிப் பார்த்தால் சதை மூடிக்கிடக்கும்.

மருத்துவம் :

பில்லத்துக்கு உக்கா உருண்டை.

"உக்கா குழலழுக்கை யோர்ந்துபழச் சாற்றிழைத்து
மிக்கான கண்ணிலிட மேதினியில்—சிக்காகு
சதைசதைத்துப் பில்லமுடன் சண்டாளப் பூவும்
பதைபதைத்தே யோடும் பயந்து."

(அகத்தியர் நயனவிதி.)

உக்காவின் குழாய்க்குளிருக்கும் அழுக்கை எடுத்து எலுமிச்சம் பழச் சாற்றிலிழைத்துக் கண்ணிலிட நீர்ப்பில்லமும் பூவுந் தீரும்.

**வேறு :**

நீர்ப்பில்லத்திற்கு மருந்து.

"இவையுள்நீர்ப் பில்லந் தானே சாத்திய மென்ன லாகும்
நவையுறு பில்லத் துக்கு நவில்மருந் ததனைக் கேளாய்
சமையுறு சீதை வேரும் சாரடை வேரு மொக்கக்
கவைசிறு கீரை வேரும் காக்கண வேரு மாமே."

"ஆகுமோ ரிதழின் மூல மவையொன்றோர் பலமுங் கூட்டி
நீவிரைந் தாறு திங்கள் காடிநீர் தன்னி லிட்டுப்
பூவையே கழுவிப் போட்டுப் புகலும்சம் பீரச் சாற்றால்
மேவுநல் மடலின் துத்தம் வேருக்குச் சமனாய்க் கூட்டே."

"கூட்டுநீ யரைத்து வட்டாய்க் குலவுமோர் பாண்டத் திட்டு
நாட்டமா யெரித்தெ டுத்து நந்திநூற் றேய்த்துக் கொண்டு
ஈட்டுநீர்ப் பில்லத் துக்கு இவைபத்துப் போதி லிட்டால்
வாட்டடங் கண்ணி னாளே நீர்ப்பில்ல மாய்ந்து போமே."

மருத்துவம்—வேறு.

" உள்ளிமை தசைவ ளாந்து தடித்தொடிப் பாயு மானல்
தெள்ளிய கருவி யாலே உந்திய தசையை நீவித்
தள்ளிடுங் கருவி நீக்கித் திரிகடுப் பொடியைத் தூவி
மெள்ளவே தேய்த்து நாள்மூன் றதுக்குமேல் மருந்து கேளே"

" வெள்ளைக் கடுக்காய் விரைபோக்கி வறுத்து நுணுக்கி மேலபினுந்
துள்ளுந் துத்த மந்துப்புந் துருசும் வெதுப்பிப் பொடியாக்கி
உள்ள கடுக்காய்ப் பொடிநேராய்க் கூட்டி யிரத்தப் பில்லமதி
லள்ளி யிடவே குணமாமென் றுயுள் வேத முரைப்பதுவே."

" சொல்லு மிதற்கு மாருதால் துத்தம் பலமொன் றதை நுணுக்கி
முல்லை நகையீ ராவின்பால் முழுங்கு நாழி யதிலிட்டு
மெல்ல வெரித்துத் சுவறினுக்கால் மிருசம் பீரச் சாற்றரைத்து
அல்லு மடையச் சட்டிவைத்து அனலால் வெதுப்பிப் பொடி
[செய்யே."

" செய்தே யெடுத்துப் பில்லமதிற் சேர வரைமண் டலமிடவே
தொய்யுந் தசைகள் நீர்ப்படலந் தோன்று தோடிப் போமென்று
ஐய ருமையா ளுக்குரைக்க வரிவை பிரமற கோதவதை
செய்ய கமலத் தோன்கும்ப முனிக்குச் செப்புஞ் செய்கையிதே."

குடற்பில்லத்திற்கு மருத்துவம் :—வீக்கத்தை ஊசி கொண்டு குத்தி கையினாலழுத்தி நீரை யெல்லாம் வெளிப்படுத்தவேண்டும். பிறகு அவ்விடத்தில் புது வெண்ணெயைப் பூசவேண்டும். பிறகு, ஒற்றடமிட்டுப் பச்சைக் கற்பூரப்பொடியைத் தூவித் துணித்துண்டில் நெய்யைத் தோய்த்து கண்ணில் கட்டிவிட வேண்டும். எட்டு நாள் சென்ற பிறகு, கடுக்காய்ப் பொடியும், பழம்புளியையும் சேர்த்தரைத்த பற்றைக் கண்ணி மையின் மீது பூசவேண்டும்.

இந்நோய்க்கு முழுகுவதற்கு மிளகுத்தைலம் சிறப்புடையது. சுட்டிகையும் செய்யலாம்.

இமைத்தடிப்பின் குணம்.

" ஐயரி பரந்து கண்ணிற் பரபரப் பதிக மாகி
வெய்யநீர் ததும்பி விம்மித் திமிர்த்திடும் விருவி ருப்பாய்
உய்யிமை விழியு மெத்தக் கணக்கிலொண் டொடியே கேளாய்
செய்யிமைத் தடிப்புத் தானே அசாத்திய மென்று காணே."
(நாகமுனி நயனவிதி.)

" குமையவே குத்தி நொந்து கூர்விழி நீரும் பாயும்
சமையவே புருவம் வீங்கிச் சதைபோலச் சிவந்து காட்டும்
அமையவே பீளைபாயும் அண்டிதான் புகைந்து நிற்கும்
இமையடித் தடிப்பி தென்றே யேத்துவர் தமிழ்வல் லோரே."

கண்களில் குத்தலுண்டாகி நீர்வடியும். புருவம் வீங்கிச் சிவந்திருக்கும். பீளைகட்டும். பார்வை புகைந்து காட்டும்.
(அகத்தியர் நயனவிதி.

மருத்துவம் :

இமைத் தடிப்புக்கு அஞ்சனப்பொடி.

" சீனக் காரந் துருசுதுத்தஞ் செய்ய நிமிளை மஞேசிலையும்
தானத் தெடுத்துச் சம்பீரப் பழத்தின் சாற்ரு லரைத்துவட்டாய்
கானக் குழலாய் சட்டிவைத்துக் கனலா லெரித்து வெளுத்த
(தென்ரூல்
ஊனத் திடுவவ் விழியெழுத விமையின் தடிப்பங் கோடிடுமே."

இழிச்சக் கண்ணினியல்.

" கூறிய விமைவி ளிம்பு குழகுழத் தேநீ ரோடி
யூறிடும் புண்ண தாகி யுரைத்தது மாரு தாகிற்
பார்விழி விழிக்கக் கூசும் பலபல விதன மாகும்
வார்தன மானே கேளு மிழிச்சக்கண் சாத்திய மாமே."
(நாகமுனி நயனவிதி)

மருத்துவம் :

நவாச்சாரக் குழம்பு.

" நவசாரங் கழஞ்சிந் துப்பு துருசிவை மூன்று நன்ருய்ச்
சுவைபெறு வெண்ணெய் கூட்டிச் சுணங்குவெண் கலத்தி லிட்டு
அவையினிற் சஙகி ஞலே யரைத்துமத் தித்துக் கொண்டு
இவையினை யிழிச்சக் கண்ணி லெழுதிட வேகு மென்ருர்."

முடமயிரின் பண்பு.

" பொரிந்திடு மிமைம டிந்து நீரிஞற் புண்ணே யாகிச்
சரிந்திமை ரோம முள்ளே சாய்ந்தது குத்தி நோவாம்
தெரிந்திடு மணிவெ ளுத்துத் திமிரமே சேருங் கண்டாய்
அருந்ததி யிவ்வு ரோக முடமயிர் சாத்திய மாமே."
(நாகமுனி நயனவிதி.)

## இனி அகத்தியர் நயன விதியில் கூறியதை நோக்குவோம்.

" கனத்திமை தடித்துக் கண்ணும் கவிழ்ந்திடும் பார்வை யாகும்
சினத்துடன மயிருங் குத்தி தினவும்நீர்ப் பீளை சேரும்
இனத்துடன் பூவுங் காணும் இமையினில் மயிரும் நான்று
முளைத்திடு மாசந் தோறும் முடமயி ரென்ன லாமே."

கண்ணிமை தடித்திருக்கும், கவிழ்ந்த பார்வையோடு கண்சிவந்து இருக்கும். இமைமயிர்கள் வளைந்து கண்ணுக்குள் உறுத்தும். அரிப் புண்டாகி நீர் வடியும். பீளை சாரும். கண்ணில் பூவுண்டாகும். ஒவ்வொரு திங்களும் மயிர்களுதிர்ந்து வளைவாகவே முளைக்கும்.

இதுவுமது.

" சூழ முளைக்கு மிமையடங்கச் சுருண்டு குத்தி நீர்வடியும்
தாழ விழிக்குங் கருமணியில் சற்றே வெளுக்கும் அடைந்துவரும்
ஆழ விழியு மடங்கிவரும் அதிகந் தலைநோய் நாசியினீர்
மூட விழிதா னரிதாகும் முடமயி ரிதுதா மெனலாமே."

இமைகளில் தோன்றும் உளைகள் சுருண்டிருப்பதால் அவை விழியில் குத்தி நீர்வடியும். நிலத்தைப் பார்த்த வண்ணமாய்க் கண்ணை விழிக்கச் செய்யும். கண்கள் சற்று வெளுத்துக்காணும், விழிகளும் ஆழத்தில் போய்க்கொண்டிருக்கும். தலைவலி, மூக்கு நீர்ப்பாய்ச்சல் உண்டாவதோடு கண்ணை மூடுவதிலும் திறப்பதிலும் துன்பம் மிகுவதாம்.

மருத்துவம் :

முடமயிருக்குக் கருவியாடல்.

" சாய்ந்திடு ரோம மூல ஒழுங்கினைத் தவறு நோக்கி
ஏந்துமேல் மறித்துக் கொண்டு எள்ளிடை சதையை நீவி
மாய்ந்திட வேரினோடே களைந்துமே லிமையில் மானே
சேர்ந்திட வொத்திக் கட்டத் தீருமென் றுரைத்தார் முன்னோர்."

" அறுத்திடு ரோம மூல மளவிலோர் கருவி செய்கை
செறுத்திடும் விழியி னுளே திரிந்துள்ளில் வளைந்த கம்பி
குறித்ததை யனற்றிக் கொண்டு கூரிமை விளம்பில் வேக
மறித்தவை தீரு மென்று மாதவ னுரைத்த வாறே."

இமையை வெளிப்புறமாக வளைத்து விடுவது மன்றி நேர்மையாக முளையாத மயிர்களை வேரோடு களையவேண்டும். மேலும் இமை ஓரம் உட்புறம் மயங்காதபடி செய்யவேண்டும்.

முடமயிருக்குக் களிம்பு.

" சோம னுதி முக்கழஞ் சு துருசு கழஞ் சு இவையிரண்டும்
நாமே சொன்னோம் வெதுப்பியதை நவிலும் வெண்ணெய்தனி [விட்டுச்
சாம மரைத்து முடரோமஞ் சாரு மிவையி லெள்ளளவு
வாம தனத்தா யெழுதிடவே வளரு முரோம முதிர்ந்திடுமே."

பச்சைக் கற்பூரம் 3 கழஞ் சு, துருசு 1 கழஞ் சு இவற்றைப் பொரித்து வெண்ணெயுடன் சேர்த்தரைத்து இமையோரத்திற் பூச முடமயிர் தீரும்.

பற்பரோகத்தின் பெயர்களும் தீரும் தீராதவையும்.

" சொல்லிய பற்ப ரோக நீர்ச்சதை துலங்கி ரத்த
மல்லியங் கோதை யேகே ளசாத்தியஞ் சதையா மென்று
வல்லியே நீரி ரத்தஞ் சாத்திய மீது தானே
பலபடத் தீரு மென்று பகர்ந்ததை யறிந்து கொள்ளே."

(நாகமுனி நயனவிதி.)

நீர், இரத்த, மாங்கிச பற்பரோகங்களின் பண்பு

" நீருறு பற்ப ரோகக் குணங்கண்ணீர் மிகுதி யாகி
சோருறு மிமைக னத்துத் தோன்றிடு மிரத்தத் தாலே
சேருமிவ் வுரோகச் செய்கை மிமைகளுஞ் சிவந்து செந்நீர்
வாருமாங் கிஷந்தா னுள்ளே தடித்தது வளருங் காணே."
(நாகமுனி நயனவிதி)

அகத்தியர் நயன விதியில் கூறியபடி பற்பரோகம்.

" கருகியே மணிகள் தன்னை கனத்தது வெள்ளை மூடும்
அருவியே யிமைத டித்து அறுத்திடும் நீரும் பாயும்
விரவியே சுரந்து தோன்றில் விண்ணது நோக்கில் கூசும்
பரவிய குணங்கள் கண்டால் பற்பரோ கம்பார் மாதே."

கருவிழியில் வெள்ளை மூடும், கண் அருவி இமை கனத்துக் கண்ணீர் அறுத்துவிடும். விண்ணைப் பார்க்க வொட்டாமல் கூசும்.

மருத்துவம் :

" புருவத்தின் மைய மீது பொருந்திடும் பெருந ரம்பின்
மருவிய குடோரி யிட்டு வடியுநீரி ரத்தம் போக்கி
யருவுநீர்ப் பற்ப ரோக மிமைகனப் பதுவு மாறுந்
தெரிவைநீ யிரத்தத் துக்குச் செய்திடுஞ் சிகிச்சை கேளே."

" தெள்ளிய விமைத டித்துக் கனத்தெழு முதிரந் தன்னி
லள்ளிலே நெடுவேற் கண்ணு யமுதமாம் குடோரி யிட்டுக்
கொள்தசை யுரோகந் தன்னி லுப்பினுற் குழையத் தேய்த்து
உள்ளிடுஞ் சோரி போக்கி யிடிமருந் துரைக்கக் கேளே."

நீர்ப் பற்பநோய் குருதிவாங்கலினுற்றீரும். இதற்குப் புருவமையத் திலுள்ள இரத்தக் குழாயைக் கீறி இரத்தத்தை வெளிப்படுத்தவேண்டும். சதைப் பற்ப நோயில் ஊன் வளர்ச்சியை உப்புப்பொடி தேய்த்துப் பிறகு திரிபலாதி அஞ்சனப்பொடியைப் பயன் படுத்த வேண்டும்.: அதன் செய்முறை ;

திரிபலாதி அஞ்சனப்பொடி.

" திரிபலை கடிய காணந் தேறுமோ ரிதழின் மூலம்
நறுவிய முட்டைக் கூடு நந்துசா றடையின் மூல
மறுபடி மடலின் துத்தம் வருஞ்சிறு கீரை சீதை
யுறுவது சீனக் கார மொன்றுமுக் கழஞ் சு தானே."

" இவையெலு மிச்சஞ் சாற்றி லியல்புற வரைத்து லர்த்தி
யவையினைச் சட்டி யிட்டு அனலெரி வெளுத்த தானல்
நவையறத் தேய்த்துக்கொண்டு நவில்பற்ப ரோகத் திட்டா
லிவைபொறுத் திடுமே யென்று இயம்பினு ரிறைவன் றுனே."

திரிபலை, கொள், ஓரிதழ்த்தாமரை வேர், அண்ட ஓடு, சங்கு, சத்திச் சாரணை வேர், மடல்துத்தம், சிறுகீரை, சீதேவிச் செங்கழுநீர், படிகாரம் இவற்றைப் பழச்சாறு விட்டரைத்து வில்லை செய்து உலர்த்திப் புடமிட்டு பொடித்து, ஊன் வளர்ச்சியின் மீது தூவவும்.

கழலை மூன்றின் குணமும் தீரும் தீராதவையும்.

" இயம்பிய கழலை நீரா லிரத்தத்தாற் றசையி னாலே
வயங்கிமை மேலெ ழுந்து வளாந்திடு முரோகந் தானே
தயங்கிய விரத்தத் தாலே சார்ந்திடுங் கழலை தீரா
தியங்கிய தசையு நீருந் தீர்ந்திடு மியல்பு கேளே."

(நாகமுனி நயனவிதி)

மருத்துவம் :

" உருண்டெழு வியாதி தனனை நேர்பிளந் துள்ளே தோன்றும்
மருண்டிடு முளையை நீக்கி வழுத்திடு கருவி யிட்டுப்
பொருந்திய குருதி யுண்டாற் பூவையே யெண்ணெய் நெய்யாற்
றிருந்தவே தாரை குத்தி வேதனை தீர்தத் டாயே."

இமைநீர்ப் பாய்ச்சலின் பண்பு.

" சிரமதற் கேற்ப நின்று செறியுநீர் விழிந ரம்பில்
மருவியே கனத்து ஊர்ந்து மந்தித்துத் திமிர்ந்து வீங்கும்
முருகவிழ் குழலி னாளே மொழியுநீர்ப் பாய்ச்ச லென்று
விரைவுட னறியச் சொன்னேன விரும்பிநீ யறிந்து கொள்ளே."

மருத்துவம்—வில்வாதித்தைலம்.

" வேங்கை வயிரம் வில்வவேர் மேவு சீந்தில் நன்னாரி
பாங்கார் சிற்று முட்டியின்வேர் பலமொவ் வொன்று மூன்றாக
வாங்கி நீர்பதி னாழிலிட்டு வற்றக் காய்ச்சி இரண்டுபடி
பாங்காய்ப பச்சிலை கச்சோல மடைவா மேல மதிமதுரம்."

" மதுரங் கோட்டங் கொத்தமல்லி வளர்நா கப்பூ சதகுப்பை
இதமாஞ் செவ்வள்ளி சாதிக்காய் இலவங் கத்தோல் வெந்தயமும்
கதமார் மிளகு சீரகமும் கையான் சாறு தானுரியும்
வுதைசம் பீரச் சாறுழக்கும் வகையாய்க் கூட்டி தைலம்வையே."

" வையே தைலம் பதம்வந்தால் வருடி வடிக்கு நேரமதில்
மெய்யோர் பிடியா மிளகுபொடி மிக்க அபின்காற் கழஞ்சிட்டு
பைய வடித்து வெந்நீரிற் பதம தாக முழுகிவர
நையு மண்டை நோதல்விடும் நயன நீரும் மாறிடுமே."

சுற்றுக்குலேவிணியல்.

"அன்னமே யிமையு ரோம முதிர்ந்தது புண்ணே யாகும்
பன்வித நீரும் பாயும் பல்பட வலிக்குங் குத்தும்
கொன்விழி மயக்க மாகுங் குழகுழத் திழியும் பீளை
இன்னவை குணங்கள் சுற்றுக் குலேவென வியம்ப லாமே."

**மருத்துவம் :**

"பஞ்ச லவணம் பொரிகாரம் பகருந துருசு இவையிரண்டும்
மிஞ்சா தொன்று கழஞ்சுகொண்டு மின்னே வெண்ணெய் தனி விட்டு]
ஒஞ்சா தரைத்து விழியெழுத வோடும் மயக்க முடரோமத்
துஞ்சுஞ் சுற்றுக் குலேவிவைகள தோன்ற தோடிப் போமெனறே.

புழுககடி அல்லது கிருமித்தோலின் குணம்.

"உள்ளிமை விளம்பி லூறு முரோமமு முதிரும் புண்ணுய்
தெள்ளழல் போலக் காந்தும் ஒடுமே யிரத்தந் தானும்
வெள்ளிடை சிவக்க வீஙகித் தடித்ததிடு மிகுகு ணங்கள்
அளளிலே நெடுவேற் கண்ணுய் புழுக்கடிக் குணம தாமே."
(நாகமுனி நயனவிதி)

## அகத்தியர் நயன விதி

கொடும்புழு வெட்டின பண்பு.

"போதவே யிமைக ளத்துப் பொஙகிய திவைவுண்டாகு
மூதவே யெரிப்புண்டாகு முதிர்ந்திடும் மயிர்க்கா லெல்லாங்
காதவே தலைகால் மெய்கள் கரகர வென்று தோனறுங்
கோதவே யிமைகள் தானுங் கொடும் புழு வெட்ட தாமே."

**மருத்துவம் :**

"நானங கள்ளி வடக்காக நாடும் வேரைப் பறித்துலர்த்தித்
தேனே சீலை தனிற சுருட்டி சிற்ரு மணக்கி னெண்ணெயினுல்
மானே யெரித்து வெண்கலத்தில் மையே பற்ற வைத்திதனைக்
காஞர் குழலா யெழுதினக்காற் கருதுங கிருமி மாய்ந்திடுமே."

இமையுயர்ச்சி.

"வாத தோடம் வசூரியினுல் வருத்தும் விதன வியாதியினு
லேது வாக விமையுயரும் இயம்பி னேடிே சாத்தியமென
ருதி முதல்வ னுரைததருளு மாயுள் வேதச் செயகைதனனே
நீதி முறையை முனியுரைத்து நிறை குணத்தை நீயறியே."

### கடைக்கண்ணிற்றோன்றும் நோய்கள் 15 ஆகும.

அவை :—

1. கண்ணோக்காடு.
2. பூச்சாந்திரம்.
3. நீர்ப்படர்த்தி.
4. இரத்தப்படர்த்தி.
5. தசைப்படர்த்தி.
6. நீர்க்குவை.
7. இரத்தக்குவை.
8. மாங்கிசக்குவை.
9. விழிவாதம்.
10. விரணப்படு.
11. விப்புருதி.
12. இமைக்குரூடு.
13. இமைக்குமிழ்.
14. நேத்திரவாயு.
15. கண்ணோய்.

### கண்ணோக்காட்டின் குணம்.

" மூக்கடி கடையி னுள்ளே முளைத்தெழு குமிழ மாகத்
தாக்கியே சவ்வு மூடி வெடித்திடச் சலமு மாகும்
நோக்கிடில் அசாத்திய மாகும் நுவலுமே யாயுர் வேதம்
வீக்குவார் முலையி னுளே கருவியால் விடுவித் தாற்றே. "

(நாகமுனி நயனவிதி)

### பூச்சாந்திரத்தின் குணம்.

" இளகியே பீளை நிற்கு மிடத்திற்கு எள்ளின் மேலே
வளமுறு பருத்தி வித்துப் போலெழு மானே கேளா
யுளைவுறு மொடுவுட் பாயுஞ் சாத்திய முணர்ந்து கொள்நீ
விளைவினால் கருவி செய்திவ் வேதனை தீர்த்தி டாயே. "

(நாகமுனி நயனவிதி)

### நீர்ப்படர்த்தி, இரத்தப்படர்த்தி, சதைப்படர்த்தி.

" இளகிய கடையி னுள்ளே இளகிநீர் சதையி ரத்த
மழலெனப் படரு மானே அசாத்திய மல்ல மூன்று
வழுவற விதற்கு முன்சொல் பொடிமருந் ததனாற் றீரும்
மழவிடை யூர்ந்தோன் சொன்ன வாகடத் தியல்பு தானே. "

(நாகமுனி நயனவிதி)

### நீர்க்குவை, இரத்தக்குவை, மாங்கிஷக்குவை.

" சொல்லுநீர்த் தசையி ரத்தந் தோன்றிய குன்றி போலக்
கல்லெனப் புடைத்தெ ழுந்து கடையிரண் டதனிற் றோன்றும்
முல்லையின நகையி னுளே கருவியால் முளையை நீவிப்
புல்லிநோர் துருசால் முன்சொல் பொடியினை யெழுதப் போமே."

(நாகமுனி நயனவிதி)

விழிவாதம.

" கண்ணிடை மிக்க வாதத தோஷங்கள் கழித்து நின்றால்
நண்ணிமை யயர்ந்து கொட்டி நடுங்கிடும் குறைக்கண் ணாகும்
அண்ணலா ருரைத்த செய்கை சாத்திய மதற்குத் தானே
திண்ணமாய்ப ((ருவத தின்மேல் அருகுசெய் திடவே தீரும். "

(நாகமுனி நயன விதி).

விரணப்பரு, விப்புருதி, இமைக்குரு, இமைக்குமிழ்.

" கடைவிழி யதனிற் றோன்று விப்புருதி படுப்புண் ணொன்று
மிடறு வியாதி வந்தா லிணக்கமா மருந்து செய்தே
உடையவிந் நிதானந் தன்னு லோதிய நூலிற் கண்டு
அடைவிலே செய்கை மூன்சொல் பருவொன்று மசாத்திய மாமே."

(நாகமுனி நயனவிதி)

குவளை விபபுருதி.

அகததியா் நயன விதியில் கூறியபடி கூறபபடும்.

" நீாவிடுகுங் கடைககண குத்தும் நிமைகனம் சீயும் பாயும்
ஊர்வது மிகவுணடாகும் உருத்தியே சிவந்தெ ரிக்கும்
சீர்பெற விழிக்க வொட்டா சிறிதுநாள குணமுங காட்டும்
கூர்குண மிவைகள் தானும குவளைவிப் புருதி யாமே. "

கண்ணினறு கீழ்வடியும், கடைக்கண்ணெனபது காதின் பக்கக் கடைக் கண்ணையும், மூக்கின் பக்கக் கடைக்கண்ணையும் குறிக்கும். இங்கு குறிக்கும் கடைக்கண் மூக்கின் பக்கக் கடைக்கண்ணென்று தெரியவும். இக் கடைக்கணணிறறுன விப்புருதியுண்டாம்.

நேத்திரவாயு.—புருவத்தில் வலியுடன் வெள்விழி சிவந்து காட்டும், மூக்கினினறும் நீர் பாயும்.

மருததுவம.—நடு நரம்பை யறுததுக குருதிவாங்கிய பிறகு தைலங் களில முழுகத்தீரும. இதனைக் கீழ்ககூறப்படும் செய்யுட்களாலறிக.

" நடுநரம் பதிற்கு டோரி செய்திடு நயந்த ரததங்
கடுகவே பாய்ந்து போனால் கருதுவேப் பெண்ணெய நாழி
உடனவசம புளளி சனனி நாயக முசுரு மூடடை
அடைவிலே நாங்கூழ் கோழிக் காரம்வட் டமுந்தா மாமே. "

" ஆந்திரி கடுகு வெட்பா லரிசியொவ் வொனறு தானே
யேந்திழை நீவி ரைந்து கழஞ்சிட்டு வெந்த எண்ணெய்
சேர்நதநேத திரததில் வாயு தீர்ந்திடச் சிரத்தி லப்பிக
காய்ந்தநீ ரதனி னாலே கழுவிடக் கடுப்பு போமே. "

கண்ணோயின் பண்பு.

" உட்டணந் தன்னி னுலு முறுவெயிற் காற்றி னுலும்
கட்டமாஞ் சுமையி னுலுங் கடுகிய நடையி னுலும்
மட்டவிழ் குழலி னுளே வந்திடும் விழிக்கு நோவா
யிட்டமா யறிந்து கொண்டு இதற்கிடு மருந்து கேளே. "

(நாகமுனி நயனவிதி)

இனி அகத்தியர் நயனவிதியிற் கூறியபடி கூறுவாம்.

" எந்நாளும் வாராது காற்றுக்காலம் எடுக்குமே வலிகாணு மிமையும் வீங்கும்]
புண்ணாகும் நீர்ப்பீளை யுறங்கொட்டாது புதுமையாய் மூன்றுநாள் போகநோகும்]
விண்ணேக்க வொட்டாது பட்சமொன்றில் விதமாகத் தீருமிது தானுமென்று]
கண்ணோவுக் குறுகுணங்க ளிவைதானென்று கருதினர் புவி மீதில் கண்டுதானே. "]

இந் நோய் காற்றுக் காலத்தில் தானுண்டாகும். கண் வலியுடன் இமை வீங்கியிருக்கும்; கண் புண் போல் நொந்து நீர் வடிந்து பீளை கட்டும். தூக்கம வராது; நோய் தோன்றிய மூன்று நாள் வரை வருத்த மிகவிருக்கும். வெளிச்சத்தைப் பார்க்க முடியாது. இந்நோய் தீரப் பதி னைந்து நாட்கள் செல்லும்.

மருத்துவம்—ஒற்றடம்.

" ஆவின் பாலு மிரண்டுபடி அதனிற் புளியிலை யிரண்டுபடி
காவி யெழுதுங் கண்மடவீர் கடுகாய்த் திரளக் காய்ச்சிபியன்
சீவிச் சிலைதனி லேயிட்டுத் திரள்பொட் டணந்தான் கட்டியொத்தக்
கூவி வலிக்குங் கண்வலிதான் குணமாங் குணமாங் குண மாமே. "

கண்ணோய்க்கு மாத்திரை.

" ஆறு கூறு கடுப்படுப்பு ஐந்து கூறு கனமிளகு
தேறுந் திப்பிலி முக்கூறு தேற்றுன் விரையிந் துப்புடனே
ஏறிட் டேழு நாளரைத்து இந்தக் குளிகை வடுகுதெனப்
பாறிக் கண்ணோ வுள்ளதெல்லாம் பன்னிரு யோசனை ஓடிடுமே. "

நாகமுனிவர் நயனவிதியிற் கூறுததும், அகத்தியர் நயனவிதியிற் கூறியுள்ளதுமான கட் பிணிகளினிக் கூறப்படும்.

அவை :

1. அக்கிர ரோகம் :

" மெய்க்கரப் புத்துக் கண்ணில் மேனிமை கனத்துப் புண்ணும்
உக்கிர மாக நொந்து ஊறியே நீரும் பாயும்.
சிக்கறத் தினவும் பீளை சினத்திடு முகங்கள் தானும்
அக்கிர ரோக மென்றே அறிந்தனர் புலவர் தாமே. "

கண்களின் மேலிமை கனத்துப் புண்ணாகும், நோய் ஏற்பட்டுத் தண்ணீர் வடியும், பீளைசேரும், முகம் சிவக்கும்.

2. அவிகாயவிரணம் :

' செவிவாயுங் கண்ணு மூக்குத் தினவுடன் சிவப்புண் டாகும்
கவிதாக முழிக்கு மூடும் கனத்திடும் பீளை கட்டும்
நவிதாக உறங்கொட்டாது நடுவிழி தன்னிற் குத்தும்
அவிகாய விரண மென்றே அறிவுள்ளோ ருரைத்த வாறே. "

காது, வாய், கண், மூக்கு ஆகிய இவ்வுறுப்புகளில் அரிப்பு தோன்றி சிவப்புண்டாகும். கண் அடிக்கடி மூடித் திறக்கும். கண் கனத்திருக்கும். விழியின் நடுவில் குத்தல் எடுக்கும். பீளை சாரும். தூக்கங்கெடும்.

3. உக்கிரரோகம் :

" சக்கரம் போலக் கண்ணில் தடிப்புண்டாய் நீரும் பாயும்
அக்கர மாக மூடவலிதின வெரிப் புண்டாகும்
மிக்கர வொன்றை நோக்கில் மேதினியில் புகைந்து காட்டும்
உக்கிர ரோக மென்று உரைத்தனர் தமிழ்வல் லோரே. ".

கண்ணில் வட்டமாய்த் தடிப்புண்டாகி நீர் வடியும், கண்ணை மூட முடியாமல் வலியுண்டாகும். எரிச்சல், அரிப்பு உண்டாவதுடன் பொருள்களைப் பார்த்தால் புகைச்சலாய்த் தெரியும்.

4. சாய்கண் குருடு :

" வாய்கண் மூக்கு நாக்கு வலமிட மிழுத்து நொந்து
காய்குணம் விழியும் நீரும் கடுகியே சிவந்து காட்டும்
நோய்குணம் நீட்சி யாக நொந்துதா னுளிற் றீரும்
சாய்கண் குருடி தென்று சாற்றினர் தரணி யோர்க்கே. "

வாய், கண், மூக்கு, நாக்கு இவைகள் வலப்புற மேனும் இடப்புற மேனும் இழுத்திருக்கும். கண் எரிந்து சிவந்து நீர் வடியும் நாட் சென்றே நோய் நீங்கும்.

5. கண்தினவு :

" ஊருஞ் சொரியும் கரகரக்கும் உள்ளே கண்ணுஞ் சிவந்
[திருக்கும்
நீரும் பொழியும் அனலுண்டாம் நிருத்து முறக்கந் தணிவேண்
[டார்
கூறும் விழியும் புகைந்திருக்கும குறுகும் விழியும் குருநோவாம்
சேரு மிந்தக் குணங்களெல்லாம் தினவுங் கண்ணின் குணந்
[தானே."

கண்ணில் அரிப்பும் உறுத்தலுமுண்டாம். கண் சிவந்து எரிந்து நீர் வடியும். தூக்கங்கெடும். கண் சிறுத்துப் பார்வை புகைந்து காட்டும்.

6. தூயகண் குருடு :

" கருமணி தெளிந்து நன்ருய்க் காண்பவர் போலத் தோற்றும்
பெருமணி வெள்ளை தன்னில் பேதிக்கும் சுழியிற் குத்தும்
ஒருமணி போலே கண்ணில் உறுத்தியே உள்ளில் குத்தும்
துருமணி பூணு மாதே துய்யகண் குருடு தானே."

கண் பாவை நோயற்றவர் பாவைபோலத் தோற்றும். கருவிழியும் வெண்விழியும், சுயநிறம் மாறி இருக்கும். நடுவிழியினில் குத்தலுண் டாகும்.

7. சுழல் வண்டெரிதல் :

" பறக்குங்கண்ணில் பூச்சிபோல் பார்க்கு மிடங்கள் தனிற்ருேற்றும்
உறக்கந் தனிலு மவ்வடைவே ஓடித்திரியும் போல்காணும்
துறக்குங் கூசும் புகைந்திருக்கும் சுடரைப் பார்க்கில் பலவிதமாய்ப்
பிறக்குஞ் சுழல்வண் டெரிதலென்று பேசி யிருப்பார் பெரியோரே".

பார்க்கிற இடங்களெல்லாம் பூச்சி பறக்கின்ருற்போல் கண்ணுக்குத் தோற்றும். உறக்கத்திலும் பூச்சி ஓடித்திரிகிறது போலத்தோற்றும். கண் கூசும். பார்வை புகைச்சலாயிருக்கும். விளக்குச் சுடர் பலவிதமாய்த் தோற்றும்.

8. அன்ன கோபம் :

" கனத்ததோர் நயன முள்ளே கனலெழ லெரித்து விம்மி
உனத்தமாம் விழிபு டைத்து உலையினில் மெழுகு போலச்
சினத்தது கண்ணும் நொந்து சிவந்துதா னருகிற் றுனல்
அனர்த்தமாம் அன்ன கோபம் அறிந்து நீ மருந்து செய்யே."

கண்ணில் எரிச்சலுடன் விம்மி, விழி புடைத்துச் சிவந்து உறுத்துமானுல் அன்ன கோபம் என்று சொல்லப்படும். நேர்மருந்திடாவிடின் கெடுதலாய் முடியும்.

9. மருவு கண் சிவப்பு :

" சிறுக்குங் கண்ணும் நீர்வடியும் சினத்துக் கனக்கும் சிரசுவலி
முறுக்கு மனமும் வரண்டிருக்கும் முகிழாச் சிவந்த பூவதுபோல்
இருக்கும் சரீரம் தளர்ந்துவரும் எதிர்த்த எப்பம் தானுண்டாம்
மறுக்கு மிந்தக் குணங்கலொ மருகண் சிவப்பு இதுதானே. "

கண்கள் சிவந்து நீர்வடியும். கண் கனத்துச் சிவக்கும். மனம் சோரும், உடலிளைக்கும், தலைவலியும், எப்பமும் உண்டாம்.

10. எரிவிழி மழுங்குதல் :

" கண்ணது கனத்து நொந்து கருதிநீர் கலங்கி வீழ்ந்து
தண்ணது புருவம் கன்னம் நாசிகள் மூல முற்றும்
விண்ணது அடுக்கன் றன்னை மேவியே பார்க்கும் போது
எண்ணிய குணங்கள் காணும் எரிவிழி மழுங்க லாமே. "

ஞாயிற்றைப் பார்க்கின் கண் கனத்து, கலங்கி நீர் வடிந்து புருவம், கன்னம், மூக்கு இவைகளில் நோயிருக்கும்.

11. அதிமந்தம் :

" கருகிய மணியினும் கலந்த வெள் விழியிலும்
பெருகிய சிவப்பொடு பிறண்டு வலிக்குமுன்
உரிவியு முயர்ந்து உறுத்திப் புகைந்திடும்
அருவிய விதனமும் அதிமந்த மென்னுமே. "

வெள்விழி சிவந்து, கருவிழியில் வலி தோன்றும். கண் சற்றுப் பெருத்து உறுத்தும். பார்வை புகைந்து காட்டும்.

12. குவளை நெரித்தல் :

" கண்ணினில் தடிப்புண் டாகில் கடுத்திடும் விழிக்கொ ளுது
திண்ணிய இமைக ளத்து தினவுடன் சிவந்து காட்டும்
நண்ணிய மயிர்க்கால் புண்ணும் நாற்றமாய்ப் பீளை பாயில்
குண்ணிய மனமு மாகும் குவளைநெ ரித்தல் தானே. "

கண் தடிப்பாய்க் கடுத்துச் சிவந்து, இமை கனத்து, அரிப்புத்தோன் றித் திறக்கமுடியாமல் இருக்கும். மயிர்க்கால்கள் புண்ணாகித் துர்நாற்றத் துடன் பீளை கட்டும். மனம் சோர்வடையும்.

13. அழிகண் பிரித்தல். :

" சழியவே இடித்து நொந்து சதையது விழிகண் மூடி
பழியவே சூழப் புண்ணாய்ப் பலவித பீளை பாயில்
விழியில் நோய் மாறு தற்கும் வேண்டிய மருந்து செய்தால்
அழிவது திண்ணங் கண்டாய் அழிவுகண் பிரித்தல் தானே. "

கண் மிக வலித்து நோகும். விழியில் சதைமூடும் அதனைச் சுற்றிலும் புண்ணுண்டாய்ப் பீளை கட்டும்.

14. சோதிகாவிரணம் :

" கண்டிடும் பூவு வெள்ளைக் கருவிழி எங்கும் தோற்றும்
கொண்டிடும் நீரும் பாயும் கூசிடும் விழிக்கொ ளுது
நண்டினோர் கண்கள் போல நடுவிழி தன்னில் காணும்
வெண்டிடும் சோதி காவி ரணங்களு மாகு மன்றே. "

வெள்விழி, கருவிழிகளிலும் புண்ணுண்டாகி நீர் வடிந்து கண்ணைத் திறக்க முடியாமற் கூசும். நடுவிழியில் நண்டினது கண்ணைப்போலச் சிறி தாய்த் தூர்த்துக்கொண்டிருக்கும்.

15. படிகுந்தம் :

" உள்ளமே நொந்து கண்கள் உறுத்தியே வலிக்கு மாகில்
மெள்ளவே சந்தி ரோதயம் மேவிலோர் கிரியை காணும்
கள்ளமே யல்ல நோய்கள் கருவிழி கருப்பி லுற்று
பள்ளமாய்ப் பார்வை தன்னில் படிகுந்த மென்று சொல்லே. "

மனது நொந்து கண்கள் உறுத்தி வலிக்கும். திங்கள் கண்ணுக்குத் தெரியாது. கருவிழி மிக்க கருப்பாயிருக்கும். பார்வை எதைப் பார்த்தா லும் பள்ளமாய் இருக்கின்றதுபோலத் தோற்றும்.

16. மன மந்தாரம் :

" கூறிடும் விழியிற் குத்தும் குவளையிற் பீளை கட்டும்
சீறிடும் புகைந்து காட்டும் சிறிதுநாள் வெளிய தாகும்
தேறிடும் தினவுண் டாகும் சிதணியே சிவப்பு காட்டும்
மாறிடும் பச்சை போலாம் மதனமந் தார மாமே. "

விழியில் குத்தல், பீளை சாரல், புகைந்த பார்வை, சிலசமயம் தெளிந்த பார்வை, கண் அரிப்பு, கண் சிவத்தல், பச்சோந்தியைப் போல குணம் மாறுபடும்.

17. நீர்ப் பாய்ச்சல் :

" சருவிநீ ரருகிக் காட்டி சதைவளருந் தினவுண் டாகும்
கருவிழி யுறுத்தி நொந்து கனத்துட னெரிப்புண் டாகும்
மருவிய கண்கள் நொந்து மாறாதே நீரும் பாயும்
அரிவையே யிவைகள் தாமும் அருவிநீர்ப் பாய்ச்ச லாமே. "

கண்களில் சதைவளர்ந்து அரித்து நீர் வடியும். கருவிழி உறுத்தி நொந்து கனத்து எரியும்.

18. அரூபம் :

" ஊறிய வெள்ளை தன்னில் உதித்ததோர் சலமுங் கொள்ளும்
பாரியே நீரும் பாயும் பகல்விளக் கொளிபோ லாகும்
சாரியே பீளை தள்ளும் தடமையம் எரிப்புண் டாகும்
ஆரியே நின்றெ டுக்கும் அரூபமா மென்று சொல்லே. "

வெள்ளி விழியில் நீர் கோத்து வடியும், பகலில் வெளிச்சம் விலக் கொளியைப் போலக் காணப்படும். கண்ணில் பீளை கட்டி எரிச்சலுண்டாம்.

**19. கண்விரணம் :**

" சுத்தெல்லாம் வரையும் புண்ணும் சூழவே தினவுண் டாகி
வத்தியே யிமைக ளெங்கும் வலித்திடும் விழிசி வக்கும்
முத்தியே நோக்கில் பார்க்கில் முழித்தொன்றும் செய்ய வொட்டா
கத்தியே யிருக்குந் தூங்கார் கண்ணினில் விரணந் தானே."

கண்ணைச் சுற்றிப் புண்ணாகி அரித்து இமைகளில் வலியுண்டாம். கண் சிவக்கும். கண்ணை விழித்து ஒரு வேலையையுஞ் செய்ய முடியாது. இந் நோயுடையவன் இரவில் தூக்கமின்றிக் கூச்சலிடுவான.

**20. கண்குருடு :**

" மாசம் பக்கம் வலிகடுப்பு மருப்போல் கண்ணி லதுதோற்றும்
நாச மாகும் பீளைவரும் நசுங்கி முளைக்குந் தினந்தோறும்
வாச மான தைலந்தான் முழுகில் வலுவாய் வாதைதரும்
நேசந் தலைமுகம் பிடரிவலி நிச்ச யங்குரு டெனலாமே."

கண்ணில், திங்கட்கொரு முறைவயாவது பக்கத்துக்கொரு முறையாவது, வலி, கடுப்புண்டாகும். நாடோறும் மருப்போல் சதை முளைத்து நசுங்கிப் போம். மணம் பொருந்திய மருந்து நெய்களில் தலை மூழ்கில் வருத்தம் மிகும். தலை, பிடரி, முகம் ஆகிய இவ்விடங்களிலும் வலி தோன்றும்.

**21. அடைந்தெழுந்திடுதல் :**

" நீரும் பொழியும் விழிகடுக்கும் நித்தம் பலகுண மிமைவீங்கும்
சேரும் பீளை சிவந்தெரிப்பு சினத்துப் புடைக்கு மிமையடங்கும்
ஊருஞ் சொரியு மூக்கிலுநீர் உணர்த்தி யன்னம் உண்ணவொட்டா
ஆரு மறிய உரைத்தகுணம் அடைந்தெ ழுந்திட லெனலாமே."

விழிகடுத்துக் கண்ணில் நீர் வடியும், ஒரு நாளைக்கு நோய் நீங்கினது போலத்தோன்றி மறு நாட்கு வருத்தம் மிகுந்துவிடும். இமை வீங்கிக் கண் சிவந்து எரிச்சலுண்டாய், பீளை கட்டி அரித்துப் புழு ஊர்வதுபோல விருக்கும். மூக்கு நீர் வடியும் ; உணவு கொள்ளாது.

**22. பருமுளை :**

" கடுத்து வலிக்கும் நீர்பாயும் கனக்கச் சிவக்கும் இமைவீங்கும்
இருக்கும் விழிக்க வொட்டாம லிருண்டு வெளுத்து முளைகாணும்
நடுக்கும் தலைவலி பிடரிமுகம் நரம்பை யிழுத்து மிகநோகும்
படுக்கும் இருக்கும் எழுந்திருக்கும் பருமுளை யென்று பகர்வாரே."

கண் கனத்துக்குக் கடுத்து வலித்துச் சிவந்து நீர் வடியும், இமை வீங்கும் ; கண்ணைத் திறக்கமுடியாது. கருப்பாயும் வெளுப்பாயும் கண்ணுக்குள் முளைகளுண்டாகும். நடுக்கலுடன் தலைவலியுண்டாகும். இந் நோய் நிலை பொறுக்கவிடாது.

23. துர்மாமிசம் :

" வீங்கும் விதனம் சதைபோல வெளுத்த விழியில் தனிற்காணும்
வாங்கும் வளரும் சிலகாலம் வாதை மிகவாம் நீர்ப்பீளை
தேங்கும் நடக்க வொட்டாது சினத்து முகமும் கடுகுதென்று
தூங்கும் விழிக்கும் கிடைக்கொள்ளா துர்மா மிசமென் றுரையீதே"

இமை வீங்கியிருக்கும், வெள்விழியில் சதை தோன்றும், சிலகாலம் மறையும், சிலகாலமுண்டாகும். வருத்தம் மிகும். நீர் வடிந்து பீளைகட்டும் நடக்க முடியாமல் தியங்கும். முகஞ் சிவக்கும். தாங்கொணு வலியால் கிடை கொள்ளாது. சற்றுத் தூங்கியும் சற்று விழித்துமிருக்கும்படி செய்யும்.

24. வெள்ளெழுத்து :

" கூசும் விழியும் புகைந்திருக்கும் குறுகும் பார்வை தோற்றுது
மாசும் கண்ணும் பசிந்திருக்கும் மயங்குங் குணங்கள் பலவாகும்
தேசுங் குறையு மருட்சியுண்டாம் திறமாய்க் கருமம் செய்யாது
ஏசுங் குணங்கள் வெள்ளெழுத்து என்றே சொல்லு இதுகண்டே."

கண் கூசும், பார்வை புகைந்து காட்டும். நெருங்கிய பார்வை தெரியாது. கண் ஒளியில்லாமல் மங்கியிருக்கும், பார்வையில் மயங்கச் செய்யும்.

25. உறுவிழி புடைத்தல் :

" வளரும் வலிக்கும் மிகப்புடைக்கும் வாங்கும் விழியும் மே [னோக்கி
தளரும் விழியும் சிவந்திருக்கும் தண்ணீர் பீளை தானுண்டாம்
குளரும் வாயும் தடுமாறும் குடித்த அன்னம் சத்திக்கும்
உளரும் கிடையும் கொள்ளாது உறுவிழி புடைத்த லெனலாமே."

கண் புடைத்து வலித்துப் பார்வை மேனோக்கும். கண் சிவந்த நீர் வடிந்து பீளை சாரும். வாய் குளறிச் சொற்றடுமாறும். உண்ட சோறு வாந்தியாம். கிடை கொடுக்காது.

26. பறவைப்பூ :

" சினக்கும் வலிப்பும் எரிப்புண்டாம் சிறுகப் படரும் வெளுத் [திருக்கும்
கனக்கும் தலைநெற் றியில்குத்தும் கண்ணும் சிவந்து நீாவடியும்
இனக்கு முகமும் புகைந்திருக்கும் எதிர்த்துப் பார்க்க வொட்டாது
தனக்குக் குணங்கள் பறவைப்பூ தகாத குணங்கள் வகைதாமே."

கண்ணில் வலியும் எரிச்சலுமிருக்கும். சிறிதாய் வெள்ளை நிறத்துடன் படர்ந்திருக்கும். தலை கனக்கும். நெற்றியில் குத்தும். கண் சிவந்து நீர்வடிந்து முகங் கருக்கும். நேராகப் பார்க்க முடியாது.

27. அமரம் :

" கதிக்கு மிமையிற் சதைவளர்ந்து கண்ணும் மூடித் திறவாது
பதிக்கும் விழியில் பறந்துகுத்தி பலவாய் நீரும் பீளையிடும்
மதிக்கு மெவரை நோக்கரிதாம் மலர்ந்த பூப்போல் சிவந்திருக்கும்
அதிக்குங் குணங்க ளிவைதானும் அமர மென்றே அருளினரால்."

இது குழந்தைகட்குண்டாம் நோய். கண்ணிமைக்குள் சதை வளர்ந்து கனத்திருக்கும். கண்மூடிக் கொள்ளும். திறக்க முடியாது. விழியில் குத்த லுண்டாம். குழந்தை அழுதலினால் குத்தலிருத்தலையுணரலாம். கண் ணில் பலவிதமான நீர் வடியும். வடியும் நீர் சில சமயம் சீழ் போலும் சில சமயம் இளஞ்சிவப்பாயுமிருக்கும். பீளைகட்டும். ஒருவரையும் பார்க் கொட்டாது. புதிதாய் அலர்ந்த பூப் போல் சிவந்து தோன்றும்.

28. புகைச்சல் :

" பகைக்கு முகமும் பலவிதமாய்ப் பார்வை பலவாய்த் தோற்று
விக்கும்
திகைத்து மிருக்கும் கூச்சமுண்டாம் சிறுக விமையுந் தினவெடுக்
[கும்
தகைக்குங் கருமந் தனைச்செய்யாச் சற்றே விழியா திருண்டு வரும்
புகைச்சல் குணங்க ளிவையென்று புகழ்ந்தார் பெரியோர் புவி
[தனிலே."

எம்முகத்தைப் பார்ப்பினும் பார்வை பலவிதமாய்த் தெரியும். மனத் தில் திகைப்புண்டாகும். கண்கூசி இமை சிறிது அரிக்கும். கண் சிறிது இருண்டு காட்டும்.

29. அதிமந்தாரம் :

" வலிக்கும் கடுக்கும் நீர்வடியும் வந்தே சோதி தனிற்குத்தும்
பலிக்கு மருந்தும் பலியாது பார்க்க அதிகம் படர்ந்தேறும்
சலிக்குந் துயரா திருண்டுவரும் சாந்தம் போல நடைகொடுக்கும்
அலிக்குங் குணங்க ளிவைதானும் அதிமந் தார மெனலாமே."

கண்களில் வலிதோன்றிக் கடுத்து நீர் வடியும். பார்வையில் குத்த லுண்டாம். கண்ணில் மருந்திடின் நோய் வளர்ச்சியடையும். மருந்து பயன்படா. பார்வை நாளுக்கு நாள் இருண்டுவரும். மனம் குன்றும், நடை மெதுவாகும்.

**30.** சோதிநெறி :

" முளைக்குங் கண்ணில் பலவாக மூன்று நாளில் போகும்வரும்
கிளைக்குந் தினம்பின் வெளுப்பாகும் கீழே விழியும் பார்வையு [மாம்
வளர்க்கும் சதையும் இமைசூழ வாதை தலைநோய் நீர்ப்பீளை
துளைக்கும் பிடரி சுழியில்குத்தும் சோதி நெறியீ தெனலாமே."

கண்ணில் முளை தோன்றி மூன்று கிழமைகளில் மறைந்து மறுபடியுந் தோன்றி அவை மறைந்து கண் வெளுத்துப்போம். பார்வை கீழ் நோக்கும். இமையைச் சுற்றிச் சதை வளர்ந்து நீர் வடிந்து பீளைகட்டும். தலையிலும் பிடரியிலும வலி மிகுந்திருக்கும். நடுவிழியில் குத்தலுண்டாகும்.

**31.** செவ்வேர் :

"சிறுக்கும் கடுக்கும் வெளுத்தவிழி சிவந்து இமையும் தடிப்பாகும்
மறுக்குந் தலையில் குடைந்துகுத்தி மாறு நீரும் கூச்சமுமாம்
இறுக்கு மிமையும் அசைக்கவொட்டா இருக்கும் கடைக்கண் தின (வாகும்
குறுக்கும் வகைக ளிவைதானே குறித்த செவ்வேர்க் குணந்தா [னே"

கண் சிறுத்து வெள்விழி சிவந்து இமை தடித்திருக்கும். தலையில் குத்தல்வலி மிகுந்திருக்கும். கண் கூச்சத்துடன் ஓயாமல் நீர் வடியும். கடைக்கண்ணில் அரிப்புடன் இமையை அசைக்க வொட்டது.

**32.** குவளை நெரித்தல் :

" வாட்டும் புருவம் நெற்றியுங்கண் வலித்துப் பீளைநீர் வடியும்
மீட்டும் வீணை தெரித்தாற்போல் முடுகி வலிக்கும் தலைநோவாம்
தீட்டுங் கருவி தனைப்போலச் சிக்கி யறுக்கு மிமைவீங்கும்
கூட்டுங் குணங்க ளிவைதானும் குவளை நெரித்த லெனலாமே."

புருவம், நெற்றி, கண் இவற்றில் நோயுண்டாகும். நீர் வடிந்து பீளை கட்டும். வீணையின் நரம்புகளைத் தெரிப்பது போல் தலைவலிக்கும், கண்ணில் கத்தியாலறுப்பது போலத் தோற்றும். இமை வீங்கும்.

**33.** காசமூறுகி :

" நல்ல கருப்பு முழிதன்னில் நரம்பு போலச் சிவந்துவரும்
சொல்ல வெளுத்த விழிமேலே தொடர்ந்து மாமி சம்வளரும்
வல்ல குவளை தனையிறுத்தி வடியு நீரு மிவரழுது
பல்லை வலிக்குந் தலையிடிக்கும் பகரும் காச முறிக்கியென்றே"

கருவிழி நரம்பு சிவந்து வரும். வெள் விழியில் சதை வளர்ந்து வரும். கீழிமையாகிய குவளையில் உறுத்தி நீர்வடியும். வருத்தம் பொறுக்க முடியாமல் நோயினன் அழுவான். பல்வலியும் தலைவலியு மிருக்கும்.

**34.** மாலைக்கண் :

" காயம் வெளுத்து முகம்பசந்து கண்ணும் வேறே விகாரமுமாம்
மாயம் போலே தலைகனக்கும் மயங்குங் குணங்கள் மதிவேறும்
பாயும் பீளை மேனோக்கிப் பார்க்க விழியும் கூசிவிடும்
சாயும் காலம் மாலைக்கண் தரித்த விளக்குந் தெரியாதே."

உடல் வெளுத்து முகம் பசந்து கண் ஒளிமங்கியிருக்கும். தலை கனக்கும். அறிவு வேறுபடும். கணணில் பீளைகட்டும். அண்ணாந்து பார்க்கின் கண் கூசும். மாலை நேரத்தில் கண் தெரியாது. விளக்குங் கண்ணுக்குத் தெரியாது.

**35.** சுழல் விழி எரித்தல் :

" எரியுங் கண்ணும் பலவிதமாய் எதிர்த்தும் விழிக்க வொட்டாது
சரியும் தினவும இமைகனத்து சாந்த மான வலியுண்டாம்
நெரியு முளைக்கும் பீளைகட்டும் நித்திரை தன்னில் வெறுப்பாகும்
சொரியுங் கண்ணில் நீரவடியும் சுழல்விழி யெரித்த லெனலாமே"

கண்ணில் பலவகையாக எரிச்சலிருக்கும். கண்ணை நேரே விழிக்க வொட்டாது. இமை கனத்துச் சரிந்து இருப்பதோடு அரிப்புண்டாகும். கடுமை குறைந்து வலியிருக்கும். நெரியில் உளையும். கண்ணில் அரிப்புடன் நீர்வடிந்து பீளை சேரும். தூக்கத்தில் விருப்பமிராது.

**36.** பக்கப் படுவன் :

" விழியை கடுக்கும் சினத்திருக்கும் மீறி நொந்து வெள்ளைதனில்
அழியப் புண்போல் குத்துண்டாம் அந்தக் கணத்தில் முளைபோல
வெளியில் தள்ளும் சீழ்கொள்ளும் வெடிக்கும் நீரும் தான் விழுகும்
பழியில் படுவா யிவைபார்க்கில் பக்கப் படுவ னெனலாமே."

கண்கடுத்துச் சிவந்திருக்கும். வெள் விழியில் அழிந்த புண்போலக் குத்தலுண்டாம். அதே நிமிடத்தில் முளையைப் போலப் படுவன் வெளியே தள்ளும். சீழ் பிடிக்கும். படுவனுடைந்து நீர் வடியும்.

**37.** அக்கரம் :

" சிறுகச் சிவக்கும் நீர்வடியும் தினவும் சில்நா ளடங்கிவிடும்
மறுக்கக் கொடுக்கும் கூச்சமுண்டாம் மலர விழிக்க வொட்டாது
முறுக்க இமையும் கனத்திருக்கும் மூரித் தலைநோய் கொட்டாவி
அறுக்கக் கடைக்கண் பீளையிடும் அக்கர மிதுவென் றறிவீரே."

கண் சிறிதளவு சிவந்து நீர் வடிந்து அரிப்புண்டாகும். சில நாள் செல்ல மாறிவிடும். கூச்சமிருக்கும். கண்ணை முழுமையும் திறக்க முடியாது. தலைநோய், இமை கனப்பு, கொட்டாவி உண்டாகும். கடைக் கண்ணில் அறுப்பது போன்றிருக்கும். பீளை சேரும்.

38. அழித்திடும் பிரித்தல் :

“ பிரித்திடுங் கண்ணுஞ் சூழப் புண்ணுமாம் பீளை பாயும்
எரித்திடும் விழியிற் குத்தும் எதிர்த்தது நீருங் காணும்
சொரித்திடும் சீயும் போலச் சோர்ந்துகண விழிக்க வொட்டா
அரித்திடுங் கருவி போலாம் அழித்திடும் பிரித்தல தானே.”

கண்ணைச் சுற்றிப் புண்ணுண்டாய், விழிகளில் குத்தலுங் கண்டு பீளை சார்ந்து நீர் வடியும் . சில சமயம் சீயும் வடியும். கண்ணை விழிகக வொட்டாது. கண்ணில் கருவிகொண்டு அரிப்பது போன்ற துன்பமுண்டாகும்.

39. துண்ணு வெண் புகைச்சல் :

“ கனத்து விழியும் சதைவளர்ந்து கருத்த சோதி வெளுப்பேறிச்
சினத்து முகமும் கடுப்புவலி சிறுகத் தினவும் பீளையிடும்
இனத்தும் பார்வை பலவிதமாய் எங்கும் வெளுப்பா மயக்குண் [டாம்
மனத்துள் துண்ணு வெண்புகைச்சல் மாறு திருக்கும் குணந் [தானே.”

கண்விழியில் சதை வளர்ந்து பார்வை வெண்நிறமாக மாறி, கண் சிவந்து, முகத்தில் கடுப்புவலி தோன்றும். சற்று அரிப்புண்டாகும். பீளை கட்டும். பார்வை பலவகையாக இருக்கும். மனத்தில் சந்தேகமும் ஏக்கமுமுண்டாகும்.

40. சோராக் கண் துடிப்பு :

“ கூர்கண் சோதி தனைக்கடுத்துக் குத்தி யதைக்க இமையடங்க
நீர்க்கண் பொழிந்து உறக்கமற்று நிலையில் கிடக்க வொட்டாது
சீர்க்கண் போலச் சிலநாளாச் சினத்து எடுக்கும் சடுதியிலே
சோராக் கண்ணின் துடிப்பிதென்று சொல்லி யிருப்பார் [பெரியோரே.”

கண்ணிலுள்ள பாவையும் இமையும் கடுத்துக் குத்தலுண்டாகி நீர் வடியும். இமை கனக்கும். தூக்கம் வராது. கிடை கொள்ளாது. சில நாள் நோயற்ற கண்ணைப் போலிருந்து பிறகு சிவந்து மேற்கூறிய துன்பங்களையுண்டாக்கும்.

41. வெண்ணோக்காடு :

“ கூசுங் கடுக்கும் நீர்முட்டும் குளிர்ந்த சரீரம் எரிவுண்டாம்
மாசுங் கண்ணும் சிறுசிவப்பாம் மதியந் தன்னில் முழிக்காது
தேகங் குன்றும் நடக்கவொட்டா தியக்கக் குணங்கள் பலவாகும்
பேசுங குணவெண் நோக்காடு பேரிட் டழைப்பார் பெரியோரே.’

கண் கூசிக்கடுத்து நீர்வடியும். சற்று சிவப்பாயிருக்கும். நிலா வெளிச்சத்தில் விழிக்க வொட்டாது. கண் ஒளி குறையும். உடலில் எரிச்சலுண்டாம். நடக்க முடியாது. பிணியாளன் இயற்கைக் குணம் வேறுபடும்.

**42. மயிர்ப் புழு வெட்டு :**

" நீட்டிய திணவுங் கூச்சம் நீர்வரு மிமையும் வீக்கம்
கூட்டிடும் பீளை சேரும் குறுமுளைப் போலத் தோற்றும்
நாட்டியே மயிருதிர்ந்து நற்சதை ரத்தம் வீழும்
காட்டிது மயிர்ப்புழு வெட்டு கண்டவ ருரைத்த வாறே."

இமையிலும் குவளையிலும் அரிப்புண்டாகும், கூச்சமிருக்கும். நீர் வடியும், இமை வீங்கிக் குவளையில் சிறு முளைகள் காணப்படும். பீளை சாடும். இமையிலும் குவளையிலுமுள்ள மயிர்கள் உதிர்ந்து சதையில் சோரி வடியும்.

3. விதன மந்தாரம் :

" கடுக்கும் வலிக்கும் குத்துண்டாம் கண்ணைச் சூழ சுருக்கெனனும்
இடுக்கு மிமையு மேல் நோக்கி இழுத்து வலிக்குந் தலையடங்க
நடுக்கும் குளிரும் சுரமுண்டாம் நாவும் வரண்டு தாகமுமாம்
விடுக்கு நீரும் பீளைகட்டும் விதனமந் தாரக குணமிதுவே."

கண்ணைக் கடுத்து வலித்துக் குத்தலுண்டாம், கண்ணைச் சுற்றிச் சுருக்கென வலித்து இடுங்கியிருக்கும். மேலிமை மேனோக்கி இழுத்து வலிக்கும். தலை நடுக்கம், குளிர்சுரம், நாவறட்சி, நீர் வேட்கை, கண்ணீர் வடிதல், பீளைகட்டலாகிய இவைகளுமுண்டாம்.

44 வளர்ந்தெழு ரோகம் :

" புருவங் குவளை கடைக்கண்ணில் புண்போல் சதையும் படர்ந்து [வரும்
அருவும் சிவப்பு நீர்முட்டும் அண்ணுந்து விழிக்க வொட்டாது
உருவங் குலைக்கும் கண்முகமும் ஒளியு மழுங்கிப் புகைச்சலுண்டாம்
வருவ திவையின் குணந்தானும் வளர்ந்தெழு ரோக மென [லாமே."

புருவம், குவளையாகிய கீழிமை இவை புண்படும். கடைக்கண்ணில் சதைவளர்ந்து, கண்ணை மூடித்திறக்கும்போதெல்லாம் அருகி, சிவந்து நீர்வடியும். அண்ணுந்து பார்க்க முடியாது. முகம் வேறுபட்டுப் பார்வை குறைந்து ஒளி மங்கும்.

**45.** சுடர் பல தோன்றல் :

" பார்க்க விளக்கைப் பலவிதமாம் பரந்து காணும் நீலம்போல்
கூர்க்க விழிக்கில் வலியுண்டாம் குவளை தன்னி லுறுத்துவிக்கும்
கார்க்க வெள்ளை விழிசிவக்கும் கனக்க வலிக்கும் தலையடங்க
தூக்க மதிகம் வாராது சுடர்பல தோன்ற லெனலாமே."

விளக்கொளியைப் பார்க்கின் பலவிதமாய் விசாலித்துத் தோன்றும். நீல நிறமாகக் காணப்படும். கண்ணை நன்ருகத் திறந்து பார்த்தால் வலியுண்டாகும். கீழிமை உறுத்தும். வெள்விழி சிவக்கும். தலை முற்றும் வலித்துத் தூக்கங்கெடும்.

46. வீங்கி விழித்தல் :

" தாங்கி யுறுத்தி இமைகனத்துச் சற்றே விழிக்கில் குத்தலுண்டாம்
மூங்கில் முளைபோல் கடைக்கண்ணில் முதிர்ந்த சதைதானெனக்
[காணும்
எங்கும் விதனம் கண்சிவக்கும் எரித்தே யிருக்கு மெந்நேரம்
வீங்கும் புடைக்கும் நீர்முட்டும் வீங்கி விழித்தல் குணந்தானே."

கண்ணிமை கனத்து உறுத்தலாகிக் கண்ணைச் சற்றுத் திறந்தாலும்குத்து வலியுண்டாகும். கடைக் கண்ணில் மூங்கிலின் குருத்தைப் போலக் கூர்மையான சதை வளர்ந்திருக்கும். வலியானது எங்கும்படியாயிருக்கும். கண் சிவந்து எந்நேரமும் எரிச்சலாக விருக்கும். சிலவேளை புடைத்திருக்கும். நீர் வடியும்.

47. மதன மந்தாரம் :

" இருண்டு கறுத்துப் புகைசூழ்ந்து இரவி லதிகம் விதனமுண்டாம்
அருண்டு நடையும் தலைவலிக்கும் அமர்ந்து சிறுநாள் வந்தடுக்கும்
உருண்டு கண்ணும் பீளையுடன் யுதிரம் போலே சிவந்திருக்கும்
மருண்டு தினந்தா னதிகமுண்டாம் மதனமந் தாரக் குண
[மிதுவே."

கண் இருளடைந்து கருநிறமாகப் புகைந்திருக்கும். இரவில் நோயுண்டாகும். நடை தளரும். தலை வலியுண்டாம். சில நாள் மறைந்திருந்து பிறகுண்டாகும். கண்ணில் பீளை சேரும். மிகச் சிவக்கும். வருத்தம் நாளுக்கு நாள் அதிகப்படும்.

48. சுடரதி மாமிசம் :

" படரும் சோதி தன்னுள்ளே பச்சை வண்ணந் தான் காணும்
அடரும் புகைச்சல் நாள் தோறும் அடங்கும் விழியும் சதைவளரும்
இடரும் எரியும் நீர்பொழியும் எதிர்த்துப் பார்க்கில் அலகுகுத்தாம்
துடரும் குணங்கள் இவைதானும் சுடரதி மாமிச மெனலாமே."

கண் பாவை பச்சை நிறமாக விருக்கும். நாட்கு நாள் புகைச்சல் அதிகப பட்டுக்கொண்டேவந்து, கடைசியில் பார்வை போய்விடும். சதை வளர்ந்து எரிச்சலுண்டாகி நீர் வடியும். கண்ணை திறந்து நேரே நிமிர்ந்து பார்த்தால் கூரிய இருப்பலகால் குத்துவதைப் போலிருக்கும்.

**49. உயர்ந்து கண் புடைத்தல் :**

" மெத்தவே கண்கள் நொந்து மேவியே புடைத்து வீங்கி
நித்தமும் வாதை காட்டி நினைவர மூர்ச்சை யாகும்
சுத்தமாய்ச் சதை வளர்ந்து சுறுக்கிட்டு நீரும் பாயும்
உத்தவை குணங்கள் தானும் உயர்ந்தகண் புடைத்த லாமே."

கண்களில் மிக்க வலிதோன்றி, வீக்கமுண்டாகி நாடோறும் துன்பம் செய்விக்கும். மெய்மறந்து மூர்ச்சையாகும்படி செய்யும். கண்ணில் சதை வளர்ந்து சுறுக்கென்று குத்தி நீர் வடியும்.

**50. கும்பிமை தடித்தல் :**

" பொங்கியே பீளை யுண்டாம் பொருந்தவே இமைக னக்கும்
மங்கியே புகைந்து சீழும் மாறாமல் வெளுத்து வீழும்
அங்கிபோல் முகமும் மெய்யும் அருசியும் வாந்தி யாகும்
குங்கிய குணங்கள் தானும் கும்பிமை தடித்தல் தானே."

கண் பொங்கி, பீளை சேரும். இமை கனக்கும். பார்வை புகைந்து காட்டும். ஓயாமல் வெண்ணிறத் தோடு சீழ் வடியும். முகம், உடல் இவற்றில் நெருப்புப் போல் எரியும். ஊண் வெறுப்பு, வாந்தி ஆகியவையும் தோன்றும்.

**51. நத்தைப்படுவன் :**

" குத்தி யிழுக்குந் தலையடங்கக் கூடும் புருவஞ் சுழிநோகும்
முற்றி வலித்து முளைபோல முளைக்குஞ் சோதி கருப்பினுள்ளே
சுற்றி வலிதநப் புடைத்தெழுந்து துயர மதிக முண்டாகும்
நத்தி யுடைந்து சீழ்பெருகும் நத்தைப் படுவ னெனலாமே."

கருவிழியிடையிலுள்ள பாவையிலொரு முளையுண்டாகும். ஏற்பட்ட முளையின் காரணமாய்த் தலைமுழுதுங் குத்தியிழுத்து வலிக்கும். புருவ நடுவிலும், கண்ணைச் சுற்றிலும்வலியுண்டாம். தோன்றிய முளை பழுத்துடைந்து சீழ் வடியும்.

**52. குவளைப்படுவன் :**

" கதிக்க வீங்கும் கண்ணடங்கக் கடைக்கண் தன்னில் மிகக்குத்தும்
பதித்த மணிபோ லசையாது பறந்து சிவக்கும் விழிமூடும்
உதிக்கு முளைபோல் சீக்கட்டி உதிரம் நீரும் வீழ்ந்துவிடும்
கொதிக்கு மனல்போல் முகமெல்லாம் குவளைப் படுவ னென
[லாமே."

கீழிமையினுட்பக்கத்தில் ஒரு முளையுண்டாகி யதனால் கண் முற்றும் வீங்கும். கடைக்கண்ணில் குத்தலுண்டாம். விழியை உருட்ட முடியாது. கண் சிவக்கும். கண் மூடிக்கொள்ளும். முளையில் சீழ் திரண்டுஉடைந்து சீயும் குருதியும் வடியும். முகத்தில் நெருப்பெரிவது போன்ற சூடுண்டாகும்.

**53.** புத்தி யழித்தல் :

"உருவம் பலவாம் தோற்றுமுகம் உதய காலம் புகைந்திருக்கும்
அருவும் நீரும் பீளைகட்டும் அசைந்தே அறிவு பேதிக்கும்
வெருவு மந்தம் மிகவுண்டாம் வேறு கருமந் தனைச்செய்யில்
புருவந் தன்னை மேலிழுக்கும் புத்தி யழித்த லெனலாமே."

பார்வை பலவகையாய்க் காட்டும். விடியற்காலையில் பார்வை புகைந்து காட்டும். கண் அருவி நீர்வடிந்து பீளை கட்டும். அடிக்கடி அறிவு மாறும். நாளுக்கு நாள் பார்வை மந்தம் ஏற்படும். கண்ணுக்கு வேலைதரின் புருவத்தை மேலிழுக்கும்.

**54.** பொங்கிய விதனம் :

"மங்கியே கண்ணும் வீங்கி மாறுதே வீக்கம் பீளை
அங்கிபோ லெரிந்து நொந்து அதிகமாய் நீரும் பாயும்
தங்கியே கங்குல் தேகம் தன்வச மாற நோகும்
பொங்கிய விதன மென்று புவிதனி லுரைத்தார் மேலோர்."

கண்ணில் வீக்கம் தோன்றிப் பார்வை மங்கி எந்நேரமும் பீளை சேரும். நெருப்புபோன்ற எரிச்சலுண்டாகி வலித்து மிகவும் நீர் வடியும். இரவில் உடலில் வலியுண்டாம்.

**55.** சந்திரரோகம் :

"மூடி நிற்கும் கூச்சமுண்டாம் முன்னே நெற்றி குத்துண்டாம்
ஓடுங் கண்ணில் நீர்வடியும் உருட்டி விழிக்க வொட்டாது
ஆடுஞ் சோதி சில நேரம் அண்ணாந்து பார்த்தா லிமையில்வலி
சாடு சதைபோல் வளர்ந்துவரும் சந்திர ரோக மெனலாமே."

கண்ணில் சதை வளர்ந்து கண்கள் மூடிக்கொள்ளும். கூச்சமுண்டாம். நெற்றியில் வலியுண்டாகும். கண்ணில் நீர்வடியும். கண்ணை உருட்டி விழிக்க முடியாது. சிலசமயம் விழியை உருட்டவுங்கூடும். அண்ணாந்து பார்த்தால் இமையில் வலியுண்டாகும்.

**56.** எழு ஞாயிறு :

"வீழ்வார் படுப்பார் எழுந்திருப்பார் விதனம் பொறுக்க வரிதாகும்
ஆழ்வார் விழியும் பருத்துவரும் அமர்ந்து பின்னே அலறு
[விக்கும்
முழுதாய்க் கண்ணில் முளைபோல முதிர்ந்து பிறக்கு மொரு
[நாளில்
பழுதா மிவையெழு நாயிறெனப் பகர வுரைத்தார் புவிதனிலே"

இந்நோயினர் வலிதாங்கமாட்டாமல் கீழ் விழுவர், படுப்பர், எழுந் திருப்பர், கண்கள் உள்ளே அடங்கும். சிலசமயம் பெருத்து வரும். ஒரே நாளில் கண்ணில் முளைபோல உண்டாகும். நோயின் தன்மை அலறும்படி செய்யும்.

57. கூசி விழித்தல் :

"மாசு போலே விழிமேலே மறைக்கும் சூழத் தினவுண்டாம்
பூசி போலி ருக்குங்கண்ணில் பசக்கும் பீளை நீர்வடியும்
வாசி போலச் சிறிதுநாள் வளரும் பிறையில் வந்தடுக்கும்
கூசி விழித்தல் தானெனவே குணமா யுரைத்தார் புவிதனிலே."

கண்விழியில் மாசு மூடிக் கண்ணை மறைக்கும். கண் முற்றும் அரிக்கும். பார்வை பாசி நிறம்போல் சற்று பச்சையாயிருக்கும். பீளை சேரும். நீர் வடியும். சிலநாள் குணமாய்விட்டதுபோலத் தோற்றி வளர் பிறையில் மிகுக்கும்.

58. அழற்றி :

"குறிபடச் சூழ நொந்து குத்திடுங் கடைக்கண் வீங்கும்
பறிபடப் பீளை பாயும் பசுமையாங் கண்சி வக்கும்
நெறிபட நெற்றி கன்ன நீண்டவே தனையுங் காட்டும்
மறிவதே அன்னம் வேண்டா மழற்றியா மென்று கூறே."

கண்ணைச் சுற்றி வலிப்பதுடன் குறி போட்டது போலக் கருப்புண்டாகி இருக்கும். கடைக்கண்களில் வீக்கமிருக்கும். பீளை கட்டும். கண் சற்று சிவப்பாக விருக்கும். சோறு வேண்டாது. நெற்றி, கன்னம் இவைகளில் மிக்க வலியிருக்கும்.

59. பிறவிக்குருடு :

"மாதாவின் கருவி லுக்ர மருந்துதான் கொண்ட தாலும்
போதாங்கால் விடங்கள் தீண்டிப் பொருந்தியே போகா தாலும்
வாகான வன்னந் தண்ணீர் வளமுடன் கொள்ளா தாலும்
போதான மைந்தன் கண்ணும் பிறவியிற் குருட தாமே."

தாய்க் கருப்பத்திலே சிசு (குழவி) வாழும்போது தாயானவள் கடுமையான மருந்துகளைச் சாப்பிடுவதாலும், அக்காலத்தில் நஞ்சுக் கடியால் வருந்தி, அந்நஞ்சானது செவ்வையாய்ப் பரிகரிக்கப் படாவிடினும், அக்காலத்தில் போதிய உணவும் நீரும் கொள்ளாதிருந்தாலும் பிறக்கிற குழவி பிறவிக் குருடாயிருக்கும்.

60. வருஞ்சலரோகம் :

"பெருஞ்சலம் விழுந்து கண்ணும் பேதமாய்ச் சிறுகிக் காணும்
கருஞ்சலம் போலும் பாயும் காந்தியு மந்த மாகும்
மருஞ்சல மருவி போல வனலுட னழற்றிக் காட்டும்
தருஞ்சல ரோக மென்று சமைத்தனர் மறைவல் லோரே."

கண்ணினின்று மிக்க நீர்வடியும் கண் சிறுத்துக்காட்டும். ஓரோர் சமயத்தில் கருநிறக் கண்ணீர் வடியும். கண்ணொளி மந்தப்படும். எரிச்சலுடன் அருவியிலிருந்து நீர்வடிவதுபோல வடியும்.

61. இமையோடுறுத்தல் :

"கண்ணிற் புருவங் கீழ்நிமையுங் கனத்துத் துடிக்கு மெந்நேரம்
விண்ணைப் பார்க்கில் மிகக்கூசும் வீணை போலத் தெரித்திருக்குங்
குண்ணிச் சரீரம் பயந்தோற்றுங் குவளை கடுக்கும் நீர்வடியு
மெண்ணித் தலையுந் தினவெடுக்கு மிமையோ டுறுத்த லெனலாமே."

புருவத்தின் கீழுள்ள இமையானது கனத்து எப்போதுந் துடிக்கும். விண்ணைப் பார்க்கின் கண் கூசும். கண்கள் வீணைக் கம்பியை மீட்டுவது போல் தெரிக்கும். கீழிமை கடுக்கும். நீர் வடியும். தலையில் அரிப் புண்டாகும். உடற்குன்றி அச்சந்தோன்றும்.

**இனி, கண்ணோய்கட்குப் பொதுவாகப் பயன்படுத்தப்படும் வழக்கத்திலுள்ள சில மருந்துகளின் செய்முறைகளைக் கீழே தரப்படும்.**

படலாதி மாத்திரை :

"வேரும் வெள்ளைச் சாரணையும் மிகுந்த பீத ரோகணியும்
நேராய்ச் சமனம தாய்வாங்கி நீயரை மாதர் தனப்பாலில்
பூராய் கயிறு தான்செய்து பூவையர் பாலி லுரைத்திடுகில்
தீரும் பில்லம் பூப்படலஞ் சிதறிப் போகுங் கண்டீரே."

வெள்ளைச் சாரணைவேர், பீதரோகணி இவ் விரண்டும் ஓரெடை எடுத்துத் தாய்ப்பால் விட்டரைத்துப் பக்குவத்தில் மாத்திரையாகத் திரட்டி நிழலி லுலர்த்தி வேண்டியபோது பிள்ளைப் பாலிலிழைத்துக் கண்ணிலிடப் பில்லம், பூ, படலம் இவை தீரும்.

கணகாச மாத்திரை :

"சங்கு சுக்கொடு மிளகு திப்பிலி தார மோடதி மதுரமும்
புங்கம் வித்தொடு பீத ரோகணி புதிய துத்தம ணோசிலை
அங்கரைப்பது நந்தி பத்திரி யான தேனோ டளாவிய
கங்குல் பற்றிய கண்ணி லிட்டிடு காச படலமு நாசமே."

சங்கு, சுக்கு, மிளகு, திப்பிலி, அரிதாரம், அதிமதுரம், புங்கம்வித்து, பீதரோகணி, மயில்துத்தம், மனோசிலை இவற்றை ஓரெடைகொண்டு நந்தி யாவட்டப் பூச் சாற்றில் அரைத்துக் கயிறு செய்துலர்த்தித் தேனிலிழைத்து ஒளி மங்கிய கண்ணில் இடக் கண் காசமும், படலமும் தீரும்.

மச்ச இரத்திறுதி மாத்திரை :

"தேறி முதிர்ந்த வரால்மீனின் சிரசின் கல்லைத் தானெடுத்துப்
பாரில் மிளகு அ சனக் கல் பகருந் துத்தம் துருசுடனே
சேரீர் வெளளை ச்சாரணைவேர் சிறந்த சங்கு முத்துநிம்பச்
சாறி லரைத்துக் கண்ணிலிடச் சதையும் படலம் பூப்போமே."

முற்றின வரால் மீன்றலைக்கல், மிளகு, அஞ்சனக்கல், துத்தம், கரு வெள்ளைச் சாரணை வேர், சங்கு, முத்து இவ்வெட்டையும் ஓரெடை எடுத்து பழச்சாறு விட்டரைத்து மாத்திரையாகத் திரட்டி நிழலிலுலர்த்தித் தாய்ப் பாலி லிழைத்துக் கண்ணிலிடச் சதைவளர்ச்சி, படலம், பூ இவைதீரும்.

இளநீர்க் குழம்பு :

“ இளநீரில் முப்பலையை விட்டுமர மஞ்சள்
வனமா யதிமதுரம் வைத்துக்—களகளெனக்
காய்ச்சி யிந்துப்பு கற்பூரம் தேன்கலந்தால்
வாய்த்தவிள நீர்க்குழம்பாம் வை.”

“ கண்ணீற்பூ சதைவ ளர்ச்சி கனத்தசூ டிவற்றை நீக்கும்
கண்ணெரிச் சலுமே போகும் கண்ணினிற் குளிர்ச்சி யெய்தும்
மண்ணினி லெதனு லென்றால் மைவிழி மாதே கேளாய்
நண்ணிள நீர்க்கு ழம்பின் நல்லுப யோகத் தானே.”

கண்ணில் பூ, சதை வளர்ச்சி, சூடு, கண்ணெரிச்சல் இவற்றை நீக்கிக் குளிர்ச்சி தருவதில் இம் மருந்து சிறப்புடையதாம்.

செய்முறை.—இளநீர் சேர் 6, கடுக்காய்த் தோல், நெல்லி வற்றல் தோல், தான்றிக்காய்த் தோல் வகைக்குப் பலம் ஒன்று, மரமஞ்சள் பலம் 1 அதிமதுரம் பலம் 1 இவற்றை யிடித்துத் தூளாக்கித் துணியில் வடிகட்டி, அதை ஒரு புதிய சட்டியில் இளநீர் விட்டு மூன்று நாள் ஊறவைத்து நான்காம் நாள் நன்றாகப் பிசைந்து அடுப்பேற்றி, நாலிலொன்றாகச் சிறுக்கி வடித்து, ஒரு பீங்கானில் ஊற்றிவைத்து, அந்தச் சட்டியை நன்றாய் உள்ளும் புறமும் தூய்மை செய்து மேற்படி குடிநீரைச் சட்டியில் ஊற்றி நாலிலொன்றாகச் சுண்டவெரித்து வடிகட்டிக்கொண்டு பச்சைக் கற்பூரம் ஒரு வராகனெடை, இந்துப்பு அரை வராகனெடை இவ்விரண்டையும் கல்வத்திலிட்டு நன்றாய்ப் பொடித்துக் குடிநீரை யதில் ஊற்றி நல்ல தேன் அரை வராகனெடை சேர்த்து நன்றாய் அரைத்துக் கொள்வாயாக.

சந்திரோதய மாத்திரை :

“ குறித்ததோர் வெண்ணெய் வசம்பொடு கோஷ்டம் கூறிய திப்பிலி [மரீசம்
கொடியவெண் சங்குப் பொடிமனோ சிலையும் குணம்பெறு மரமஞ்ச [ளதுவும்
திறத்துடன் தான்றிக் காய்பிரை பருப்பும் சிறப்புடன் சரியெடை [யெடுத்துச்
சேரவே பொடித்துப் பிள்ளையின் பாலால் சிலைதனில் சாமமே [அரைத்துச்
சரத்துடன் வழித்துக் கயிறுநிழ லுலர்த்தித் தான்சிங்க பணத்தா [லிழைத்துத்
தரணியில் பிணியோர் விழிதனி லிடுகில் தானிமைத் தடிப்புடன் [சிவப்பு
உரத்ததுர் மாங்கிஷம் பில்லமும் படலம் ஓங்கிடும் தினவுடன் பூவும்
ஓதிடும் பூத நாளையி லகன்று உதித்திடும் சந்திரோ தயமே.”

பசுவின் வெண்ணெய், வசம், கோட்டம, அரிசிதிப்பிலி, மிளகு, சங்குப்பொடி, மஞ்சிலை, மரமஞ்சள், தான்றிப்பருப்பு இவற்றை ஒரெடையாயெடுத்து நன்ருக இடித்துத் தூளாக்கி, வெள்ளாட்டுப் பால் விட்டு, நன்ருயரைத்துப் பதத்தில் மாத்திரைகளாகத் திரட்டி நிழலிலுலர்த்தி முலைப்பாலிலிழைத்துக் கண்ணிலிட இமைத்தடிப்பு, சிவப்பு, துர்மாமிசம், பில்லம், படலம், தினவு, பூ இவைகள் ஐந்து நாளையில் தீரும்

நாரிகேளாஞ்சனம் :

" இரண்டு குரங்கின் கரங்கரிப்பான்
 இமையோர் பதிவல் லிகவிளம் பெண்
இவையும் பிசித மாமலகம்
 சலைம் நோடம் இவற்நீர்க்கும்
புரண்டி டாதொண் மணி வகைக்குப்
 பூவாம் தொடிமுப் பலங்கடுகு
பொன்னி திலக மொலிவசந்தப்
 பூவிந் ததிங்கம் கதகவிதை
திரண்ட ககனம் சகலவையம்
 செறிகா சொன்றென் றேடகநீர்
திருமா லெழுத்துப் படியொன்ருய்ச்
 சிறுக்கி விடைப்பூ நீர்விடவே
சிருண்டே பாலாந் ததிகளப்பூச்
 சுரசம் பிரசம் பதுபதிணை
தொடிசேர்த் திதைநூல் பதத்திறக்கு
 துதிகேள் நல்லஞ் சனமிஃதே."

பொன்னுங்காணி, வெண்சாறடை, முசுமுசுக்கை, கரிப்பான், கற்றழைச்சாறு, வேப்பீர்க்கு, புளியீர்க்கு, சம்பீர்க்கு, நெல்லியீர்க்கு இவை ஒன்பதும் வகைக்குப்பலம் 4, சுக்கு, மிளகு, திப்பிலி, கடுக்காய், நெல்லிக்காய், தான்றிக்காய், கோட்டம், மஞ்சீட்டி, பீதரோகணி, மரமஞ்சள், அதிமதுரம், இலவங்கப்பூ, தேற்ருன் விதை, இந்துப்பு இப்பதினன்கும் வகைக்குக்காசடை 1, ஆக இவ் விருபத்துமூனறையும் நன்ருய்த் தனித்தனி நறுக்கி ஒரு பானையிலிட்டு இளநீர் படி 8 விட்டு, காய்ச்சி ஒரு படியாகச் சிறுக்கி வடிகட்டி அதில் ஒற்றை நந்தியாவட்டைப் பூச்சாறு ½ படி விட்டுச் சிறுகக் காய்ச்சி 3/4 படியாகக் குறுக்கி அதில் அரைப்படி சிறுகாளாப்பூச் சாறு விட்டு அரைப்படியாகக் குறுக்கிப் பிறகு நல்ல தேன அரைப்படி விட்டு, சிறு தீயில் மெல்ல எரித்து அரைப்படியாகத்தேன் பதத்தில் அதாவது நூற்பதத்தில் காய்ச்சிக் குப்பியில் அடக்கம் செய்யவும். இதைக் கண்களுக்கு அஞ்சனமிட வெள்ளெழுத்து, பார்வை மங்கல், கண் சதை வளர்ச்சி முதலிய தீரும்.

பழுக்கிராம்பு பக்குவ வெண்ணெய் :

முதிர்ந்த பெரிய எலுமிச்சம் பழத்தை நிரம்பத்துளைத்து, சுத்தித்த இலவங்கப்பூவைச் செருகி அதன் மீது இலவங்கம் தெரியாமற்படி பசு வெண்ணெயால் மூடித் தண்ணீரில் போட்டுவைக்கவும். நாளும் நீரை மாற்றவும். இப்படி ஒரு மண்டலம் சென்றபின் வெண்ணெயை வழித்தெடுத்து நன்றாக ஒளிவீசும்படி துலக்கிய செப்புத் தாம்பாளத்தின் பின்புறத்தில் வைத்து மற்றொரு செப்பு கொண்டு தேய்த்துப் பச்சையேறிய பிறகு, செப்புச் சிமிளில் பதனம் செய்து கண்ணிலிடக் கண்மறைவு, சதை வளர்ச்சி, பிறகண்ணோய்கள் போம்.

கண்டுபற்பம்.

சீனக்கற்கண்டை மெல்லிய பொடியாகச் செய்து கண்ணிற்றூவப் பூ முதலிய போம்.

அண்ட நீர்.

கோழிமுட்டையை வேகவைத்து, மேல்பக்கத்தில் குன்றியளவு ஓட்டை நீக்கி மஞ்சள் கருவை ஊசியால் முற்றும் நீக்கி, நீர்விட்டுக் கழுவி அதில் கற்கண்டைப் பொடித்துப்போட்டு ஓட்டைவைத்து மூடி, துணியால் சுற்றி மூடி மண்ணில் புதைத்து இரவு 12 மணி நேரம் சென்றபின் எடுத்துப் பார்க்கக் கண்டுப்பொடி நீராகி யிருக்கும். இந் நீரைக் கண் சிவப்புக்குப் போடத் தீரும். இஃது அப்போதைக் கப்போது செய்து கொள்ளப்படும்.

கண்காச மாத்திரை.

“ இந்துப்பு திப்பிலி இயல்பீத ரோகணி
நந்திப்பூச் சாற்றில் நயந்தரைத் திட்டிடில்
அந்தகன் கண்ணுக்கு அருந்ததி தோன்றிடும்
நந்திக்கு நாதன் நயந்துரைத் தானே.”

இந்துப்பு, திப்பிலி, பீதரோகணி இம்மூன்றையும் ஓரெடை கொண்டு நந்திப்பூச் சாற்றாலரைத்துக் கயிறுக்கிக்கொண்டு அவ்வப்போது நந்திப்பூச் சாற்றிலிழைத்துக் கண்ணில் தீட்ட இருள் நீங்கி ஒளி பெறும் என்பதாம்.

கண் தைலம்.

“ சீன நற்றிநி ரத்தமு ரோசனஞ்
சிகர மைந்திரு நிட்கமொன் றென்றெலாம்
வான நாடயி லேயஞ் சுரசம்
வகைககீ ராறு தொடிவிட் டிழைத்ததைப்
பானு வாட்டி யத்துரளோ டிருபலம்
பால கம்மிட் டரைத்தப்பி வெஃயில்லை
யூன மற்றிறங் குங்கண் தயிலமீ
தோர்துளி கண்ணுற வோடும்விற் படலமே.”

படிகாரம், உரித்த பூண்டு, குங்குமப்பூ, கோரோசனம், இலவங்கம் இவ்வைந்தும் வகைக்கு வராகனெடை 2 இவற்றைப் பொன்னுங்காணிச் சாறு பலம் 12, முசுமுசுக்கைச் சாறு பலம் 12, ஒன்றன்பின் ஒன்றாக விட்டரைத் துலர்த்திப் பொடி செய்து, கழுவிய எள் 2 பலம் சேர்த்த ரைத்துக் குழிக் கல்லின் உட்புறத்தில் அப்பிக் கடும் வெயிலில் வைக்க அதனின்றெண்ணெய் இறங்கும். இதைக் குப்பியில் சேர்த்துவைக்கவும். இதைக் காலை, மாலை துளிக்கணக்காக வேண்டிய நாள்வரை கலிக்கந் திட்டப் படல முதலிய கண்ணோய்களை நீங்கும்.

இனி, மேனாட்டுக் கண் மருத்துவத்துடன் ஒப்பு நோக்கி, சில நோய் களின் குறி குணங்கள் பொருந்தியிருப்பதைத் தமிழ் மருத்துப் பொழி லில் வெளியிட்டதையும ஈண்டுத்தரப்படும்.

## ஒப்பு நோக்கு

**சுழல் வண்டெரிதல்—**

பறக்குங் கண்ணில் பூச்சிபோல்
பார்க்கு மிடங்க டனிற்றோற்றும்
உறக்கந் தனிலு மவ்வடைவே
ஓடித் திரிதல் போல்காணும்
துறக்குங் கூசும் புகைந்திருக்கும்
சுடரைப் பார்க்கில் பலவிதமாம்
பிறக்குஞ் சுழல் வண்டெரிதலென்று
பேசியிருப்பார் பெரியோரே.

(பொ-ரை) பார்க்கின்ற இடங்களிலெல்லாம் பூச்சி பறக்கிறது போல தோற்றும். தூங்கும்போதும் பூச்சிகள் ஓடித்திரிகிறது போலத் தோற்றும், கண் கூசும். பார்வை புகைச்சலாம். விளக்கைப் பார்த்தால் பலவித மாய்த் தோற்றும். இக் குணங்கள் கண்டால் 'சுழல் வண்டெ ரிதல்' என்று பெரியோர் சொல்வர்.

(அகத்தியர் நயனவிதி—ஐந்நூறு).

**VITREOUS OPACITIES :**

"Black specks floating before the eyes are seen by normal persons under favourable conditions. These muscàé volitantes are opacities of various kinds viewed entoptically, i.e., they throw a shadow upon the sentient elements of the retina thus appearing as dark spots in thé field of vision.................... Under abnormal conditions, muscàe may be so increased as to interfere with vision..................."

***Page 322, Parson's Diseases of the eye.***

நாகபடலம்—டெரீஜியம்

நாக படலம் :

கடைக்கண் ணிருபு றத்தில் காணவே சிவப்புத் தோன்றின்
துடைசதை போல வந்து சோதியைத் தின்னு நாளில்
அடைந்திடும் விழிகள் தம்மில் அதிகநீர் தினவு முண்டாம்
நடைபடி குணங் களெல்லாம் நாகமாம் படல மாமே.

(பொ-ரை) இரு கடைக்கண்ணிலும் சிவந்து அழுத்தமான சதை வளர்ந்து வந்து வெள்ளை விழி முழுவதையும் கடந்து கருவிழியின் மத்தியிலிருக்கிற பாவையையும் நாட் செல்லச் செல்ல மறைக்கும். கண்களில் நீர் வடியும்; அரிப்புண்டாகும். இவ்வளவு குணங்களும் இருக்குமானல் நாக படலம் என்று கூறப்படும்.

**PTERYGIUM :**

**" This is a vascularised thickening of the conjunctiva, triangular in shape, situated usually to the inner side of the cornea sometimes to the outerside, but never above or below it................The growth frequently, but not always, exhibits a tendency to advance into the cornea, the centre of whuch it seldom reaches, and yet more rarely does it extend quite across the cornea............Sight is not affected unless the pterygium extend over the pupillary region of the cornea."**

***Page* 97, *Swan***

## மயிர்ப்புழு வெட்டும் அல்சரேடிவ் ப்லவரைடிஸ"ம்

மயிர்ப்புழு வெட்டு :

நீட்டிய தினவுங் கூச்சம் நீர்வரு மிமையும் வீங்கும்
கூட்டிடும் பீளை சேரும் குருமுளை போலே தோற்றும்
நாட்டியே மயிரு திர்ந்து நற்சதை ரத்தம் வீழும்
காட்டிது மயிர்ப்புழு வெட்டு கண்டவ ருரைத்த வாறே.

(பொ-ரை) இமைக்குவளை விளிம்புகளில் அரிப்பும், கண்ணில் கூச்சமும் உண்டாகும். நீர்வடியும், இமையும் குவளையும் வீங்கும். இமை மயிர்களைச் சேர்க்கக்கூடிய பீளையுண்டாகும். இமையிலும் குவளையிலும் சிறு முளைகள் போலக் காணப்படும். இமையிலும் குவளையிலுமுள்ள மயிர்கள் உதிர்ந்து சதையில் இரத்தம் வடியும். இத்தகைய குணங்களிருந்தால் மயிர்ப்புழு வெட்டென்று சொல்லப்படும்

(அ.ந.வி. 151)

ULCERATIVE BLEPHARITIS :

" In ulcerative blepharitis yellow crusts glue the lashes together on removing them small ulcers, which bleed easily, are seen around the bases of the lashes. The lashes fall out or are easily pulled out and often are not replaced or grow in a distorted form owing to injury to the follicles. Blepharitis causes redness of the edges of the lids, itching, soreness, lacrymation and photophobi"

*Diseases of the Eye by Parson, Page* 596.

## அமரமும் ஆப்தால்மியா நியனடோரமும்

அமரம் :

கதிக்கு மிமையிற் சதைவளர்ந்து கண்ணும் மூடித் திறவாது
பதிக்கும் விழியில் பரந்துகுத்திப் பலவாய் நீரும் பீளையிடும்
மதிக்கு மெவரை நோக்கரிதாம் மலர்ந்த பூப்போல் சிவந்தி
[ருக்கும்
அதிக்குங் குணங்க ளிவைதாமும் அமர மென்றே அருளி
[னரால்.

(பொ-ரை) குழந்தைகளுக்கு உண்டாம் அமரம் என்ற நோயில் கண்ணிமைகளின் உட்பக்கத்தில் சதைபோல வளர்ந்திருக்கும். கண்ணிமைகள் மூடியவாறே இருத்தலின் திறப்ப (இமையைப் புரட்டுவ) தற்குச் சிரமமாய் இருக்கும். கண்களில் வேகமாய்க் குத்தல்போல் வலியுண்டாம். பலவிதமாக (சீபோலும், இளஞ் சிவப்பாயும்) நீர் வடியும், கண் கூச்சத்திலுல் எதிரிலுள்ளவர்களைப் பார்க்க முடியாது. கண் புதிதாய் மலர்ந்த சிவப்புப்பூப் போலச் சிவந்து தோன்றும்.

(அ. ந. வி.)

OPHTHALMIA NEONATORUM -

In newborn infants both eyes are commonly affected. The disease is sometimes seen in quite young girls. In severe cases blenorrhoea of the conjunctiva there is soon after the onset, serous infiltration of the palpebral mucous membrane—which consequently becomes tense and shiny— marked chemosis of the bulbar conjunctiva, serous—blood-stained discharge, dusky redness, and swelling of the eyelids—which makes to difficult to evert them—pain in the eyelids, often of a shooting kind, burning sensations in the eyes and photophobia.

*Page* 61, *Swanzy's Diseases of the Eye.*

## குவளைவிப்புருதியும் டேக்ரோசிஸ்டைட்டிசும்

குவளைவிப்புருதி :

நீர்விடுக்குங் கடைக்கண் குத்தும் நிமைகனம் சீயும் பாயும்
ஊர்வது மிகவுண் டாகும் உறுத்தியே சிவந்தெ ரிக்கும்
சீர்பெற விழிக்க வொட்டா சிறிதுநாள் குணமுங் காட்டும்
கூர்குண மிவைகள் தாமும் குவளைவிப் புருதி யாமே.

குறிப்பு.—கட்டியுடைந்தால் சீழ் வெளிப்படுவதுபோல் சீழ் இமையினின்று சீழ் வெளிப்படுதலின், குவளை விப்பிருதி என்றும் குவளையிலுண்டாம் கட்டியைப் படுவன் என்றும் கூறினர்.

(பொ-ரை) கண்ணிலிருந்து நீர் வடியும். மூக்கருகிலுள்ள கடைக் கண்ணுக்கும் மூக்கின் அடிபாகத்திற்கும், மத்தியிலுள்ள இமை வீங்கி இருக்கும். இமையிலிருந்து சீயும் வெளிப்படும். மூக்கருகிலுள்ள கடைக கண்ணில் சிவப்பும், தினவும், உறுத்தலும், கூச்சமும் இருக்கும். சிறிது நாள் குணத்தைக் காண்பித்து, திரும்பத் திரும்ப உண்டாகும். இது குவளைவிப்புருதி என்னும் நோயாம்.

(அ.ந.வி)

**DACRYOCYSTITIS:**

**It is generally chronic. There is epiphora aggravated by exposure to wind, etc. Usually there is swelling at the site of the sac. Often the caruncle and neighbouring parts of the conjunctiva are inflammed. On pressure over the sac, fluid, regurgitates through the punctæ. The fluid may be tears, mucus or muco-pus.**

***Page* 928, *Parson's Diseases of the Eye.***

## வெள்ளெழுத்தும் பிரஸ்பையோப்பியாவும்

வெள்ளெழுத்து :

கூசும் விழியும் புகைந்திருக்கும் குறுகும் பார்வை தோற்றுது
மாசுங் கண்ணும் பசிந்திருக்கும் மயக்குங் குணங்கள் பலவாகும்
தேசுங் குறையு மருட்சியுண்டாம் திறமாய்க் கருமம் செய்யாது
ஏசுங் குணங்கள்வெள்ளெழுத்து என்றே சொல்லு இவைகண்டே.

கண்கள் கூசும், பார்வை புகைந்து காட்டும், சமீப பார்வை தெரியாது. கண்கள் பிரகாசமில்லாது மங்கிப் போயிருக்கும். பார்வையில் மயங்கச் செய்யும். இக் குணங்களிருப்பின் வெள்ளெழுத்தென்று சொல்லப்படும்.

கண் ஒளி குறையும், பொருள்களை நோக்கின் சரிவரத் தெரியாமல் சந்தேகத்தை உண்டு பண்ணும். இக் காரணங்களினால் படிக்கும் தொழிலைப் போன்ற தொழில்களைச் சரிவரச் செய்ய முடியாது.

(அ.ந.வி.)

**PRESBYOPIA :**

The failure of accommodation becomes evident gradually, and as a rule becomes apparent first in reading. Small print becomes indisctinct, and in order to get within the limits of his receding near point, the patient tends to hold his head back and his book well forwards, until a distance is reached when clear vision under anycircumstances is difficult. Complaint is usually made of visual failure rather than visual fatigue. The printed page becomes indistinct and letters and words are confounded Sooner or later, however symptoms of eye-strain appear. Headaches are complained of, and the eyes feel tired and ache, and tend to assume the chronically suffused appearance so frequently seen in middle-aged adults.

*The Practice of Refraction.*

## துர்மாமிச வளர்ச்சியும் எப்பிஸ்கிளிரைட்டிசும்

துர்மாமிசம் :

வீங்கும் விதனம் சதைபோல வெளுத்த விழிய தனிற்காணும்
வாங்கும் வளரும் சிலகாலம் வாதை மிகவாம் நீர்ப்பீளை
தேங்கும் நடக்க வொட்டாது சினத்து முகமும் கடுகுதென்று
தூங்கும் விழிக்கும் கிடைகொள்ளா துர்மா மிசமா மெனலாமே.

(பொ-ரை) வெள்ளை விழியில் (புண்ணிலுண்டாம்) துர்மாமிசம் போன்று சதை வளரும். சதை தோன்றிச் சிலகாலமிருந்து, பிறகு மறையும். இவ்வாறு அடிக்கடி சதை தோன்றித்தோன்றி மறையும். (அதிக வலியினால்) மிக்க மனத்துயரும், துன்பமும் உண்டாம். நீர்வடியும். பீளை கட்டும். (இந் நோய் பெரும்பாலும் மேகசூலையினால் வருந்துபவர்களுக்கு உண்டாவதினால்) நடப்பதற்கு வருத்தமாய் இருப்பதுடன் திகைப்பும் உண்டாம்; (அதிக வலியினால்) முந்தி (முகம்) சினத்துக் கடுப்பதோடு படுத்து உறங்கக் கிடைகொள்ளாது விழித்துக்கொள்வர்.

(அ. ந. வி., St. 122.)

**EPISCLERITIS :**

Episcleritis presents itself as a circumscribed nodule, fixed firmly to the sclera and situated a short distance away from the limbus. It may be bluish in colour, from deep injection. The conjunctiva over it.

is movable and is injected also..................It may be extremely painful, worse at night when it is or almost free from pain. It is always absorbed eventually and never ulcerates................ It is prone to recur...........................Apart from an occasional history of rheumatism, the cause of the disease is unknown.

*Manual of Ophthalmic Practice by F. P. Maynard, Page 112.*

## முடமயிரும் டிரிக்கியசும்

முடமயிர் :

கனத்திமை தடித்துக் கண்ணும் கவிழ்ந்திடும் பார்வை யாகும்
சினத்துடன் மயிருங் குத்தித் தினவும்நீர்ப் பீளை சேரும்
இனத்துடன் பூவுங் காணும் இமையினில் மயிரும் நான்று
முளைத்திடு மாசந் தோறும் முடமயி ரென்ன லாமே.

(பொ—ரை) கண்ணிமைகள் தடித்து உட்பக்கம் சுருண்டிருப்பதால் கவிழ்ந்த பார்வையாக இருக்கும். இமையிலுள்ள மயிர்கள் வளைந்து கண்ணில் குத்துவதனால் தினவும், சிவப்பும், நீர்ப்பீளை வடிதலும், கருவிழி யில் பூவும் அடிக்கடி உண்டாம். ஒவ்வொரு மாதமும் இமை மயிர்க ளுதிர்ந்து வளைவாகவே முளைக்கும்.

(அ. ந. வி.)

**TRICHIASIS :**

Trichiasis is the condition of distortion of the celia, so that they are directed backwards and rub against the cornea. A few only of the lashes may be affected, or the condition may be due to entropion involving the whole margin of the lid. The symptoms are those of a foreign body continually present in the eye-irritation, pain, conjunctival congestion, reflex blepharospasm, lacrymation. Superficial opacities and vascularisation of the cornea are produced, recurrent ulcers of the cornea are not infrequently due to this cause.

*Diseases of the Eye by Parson, Page 602.*

---